# தமிழகம் - இலங்கை ஊர்ப்பெயர்கள் - ஒப்பாய்வு



கு. பகவதி



உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

# தமிழகம்-இலங்கை ஊர்ப்பெயர்கள்-ஓர் ஒப்பாய்வு



டாக்டர் கு. பகவதி




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
International Institute of Tamil Studies
டி. டி. டி. ஐ. அஞ்சல், தரமணி,
சென்னை-600 113.

# Bibliographical Data


| | |
|---|---|
| Title of the book | — Tamilagam—Ilankai—Urppeyarkal—Or Oppayvu |
| Author | — Dr. K. Bhagavathi<br>Senior Fellow,<br>International Institute of Tamil Studies,<br>Madras-600 113. |
| Publisher & Copy right | — International Institute of Tamil Studies, T. T. T. I.<br>Taramani, Madras-600 113. |
| Publication Number | - 156 |
| Language | — Tamil |
| Edition | — First |
| Date of publication | — May, 1991 |
| Paper used | — 16kg, D/Demy, White Printing |
| Size of the book | — 21×18cms |
| Printing type used | — 10 point |
| Number of pages | — VIII + 272 |
| Number of copies | — 1200 |
| Price | — Rs 40/- (Rupees Forty only) |
| Printers | — Sri Gomathy Achagam,<br>Triplicane Madras-5. |
| Binding | — Card Board |
| Artist | — Sathya |
| Subject | — Place Names in Tamilagam-Ilankai |

# அணிந்துரை

## முனைவர் சிலம்பொலி சு. செல்லப்பன்

ஒரு நாட்டின் பண்டைய வரலாற்றினை அறிந்து கொள்ள உதவும் வாயில்களுள் ஊர்ப்பெயர் ஆய்வியலும் ஒன்று. இவ்வாய்வு மொழியியல், வரலாறு, தொல்பொருளியல், நிலநூல், சமூகவியல் போன்ற பல்துறை ஆய்விற்கும் மிகுதுணையாக விளங்குகிறது. மக்களின் நாகரிகம், பண்பாடு ஆகியவற்றை அறியவும் இவ்வாய்வு துணை செய்கிறது.

பன்னெடுங் காலந்தொட்டே ஊரின் சிறப்பு பற்றிச் சொல்லும் பழக்கம் தமிழில் இருந்து வருகிறது. பட்டினப் பாலை, மதுரைக் காஞ்சி என்னும் சங்கநூல்கள் ஊர் (நகர்) பற்றிய செய்திகளைக் கூறுவனவேயாம்! ஊரமைப்பு, மக்கள் தொழில் வளம், பழக்க வழக்கங்கள், பண்பாட்டுச் சிறப்பு ஆகியவற்றை இந்நூல்கள் வழி நாம் அறிய முடிகிறது. சிற்றிலக்கிய வகைகளுள் 'ஊர் விருத்தம்,' 'ஊர் வெண்பா' என்பன அடங்குவன. பாட்டுடைத் தலைவனின் ஊர் பத்து ஆசிரிய விருத்தங்களால் சிறப்பித்துப் பாடப்பெறுவது ஊர்விருத்தம். ஊர் வெண்பா என்பதோ ஊரினைப் பத்து வெண்பாக்களால் சிறப்பித்துப் பாடுவதாம்.

ஊர்ப் பெயர்கள் நமக்குப் பல செய்திகளை அறிவிக் கின்றன. நீலகிரி, திருச்செங்கோடு போன்ற பெயர்கள் குறிஞ்சி நிலத்தொடர்பாலும்; ஆர்க்காடு, கோயிற்பட்டி முதலியவை முல்லை நிலத் தொடர்பாலும்; திருவையாறு, தஞ்சாவூர் என்பவை மருத நிலத் தொடர்பாலும்; நாகப்பட்டினம், கீழக் கரை ஆகியவை நெய்தல் நிலத் தொடர்பாலும் ஏற்பட் டுள்ளன என்பதை அறியமுடிகிறது. பாலை நிலத் தொடர் பாகப் பாலையூர் இருந்திடக் காண்கிறோம். எனவே ஊர்ப்

பெயர்களைக்கொண்டுஅவை அமைந்துள்ளநிலவகையைஅறிய இடமேற்படுகிறது. இலக்கியங்களில் நானில மயக்கம் பேசப் படுவது போல, ஊர்ப்பெயரமைப்பிலும் மயக்கம் ஏற்படுவ துண்டு. குறிஞ்சிப் பாடி மருதநில ஊர். ஆயினும் அது பெயரில் குறிஞ்சியையும் முல்லையையும் இணைத்துக் கொண் டுள்ளது. மேட்டுப் பாளையம், பள்ளத்தூர் போன்ற பெயர் கள் நில அமைப்பையும் நடுவூர், தெற்கூர், வடக்கூர் போன்றவை எல்லைகளையும் உணர்த்தும் பெயர்களாக உள்ளன.

ஆட்சியின் அடிப்படையிலும் பெயர்கள் ஏற்பட்டுள்ளன. பாண்டிய புரம், கங்கை கொண்ட சோழபுரம் இதற்குச் சான்றுகளாம். மாமல்லபுரம் பல்லவர் ஆட்சிக்காலத்திலும், போடிநாயக்கனூர் நாயக்கர் ஆட்சிக் காலத்திலும், இராச பாளையம் பாளையக்காரர் ஆட்சிக் காலத்திலும், சுல்தான் பேட்டை இசுலாமியர் ஆட்சிக்காலத்திலும் ஏற்பட்ட பெயர் கள் என்று கூற முடிகின்றதல்லவா?

சமயங்களின் அடிப்படையிலும் ஊர்ப்பெயர்கள் தோன்றி யுள்ளன. புராணச் செய்திகளை அடிப்படையாகக் கொண்டு எழுந்த பெயர்கள் சிற்றம்பலம், வேதபுரி போன்றவை.

தாமசுபுரம், இராமானுசபுரம் போன்ற பெயர்கள் சமயக் குரவர்கள் பெயரால் எழுந்தவை. காந்தி புரம், திரு. வி. க. நகர் போன்றவை தலைவர்கள் பெயர் கொண்டு தோன்றியவை.

சென்னப்ப நாயக்கனிடமிருந்து வாங்கிய ஊர் சென்னைப் பட்டினம் என்று பெயரிடப்பட்டது. இது கால ஆராய்ச்சிக்கும் ஊர்ப்பெயர் உதவும் என்பதைக் காட்டுகிறது.

மொழிக்கலப்பால் பெயர் மாற்றம் அடைந்த செய்தியை மறைக்காடு வேதாரண்யமாகவும், பழமலை — விருத்தாசல மாகவும் மாறியதிலிருந்து அறியலாம்.

இவ்வாறாக ஊர்ப்பெயராய்வுகள் நில அமைப்பு, ஆட்சி, மொழி, சமயம், பண்பாடு எனப் பல்துறைச் செய்திகட்கு விளக்கமளிக்கின்றன என்பது கண்கூடு.

இவ்வளவு முக்கியத்துவம் பெற்ற ஊர்ப்பெயராய்வு தமிழில் மிக அருகிய நிலையிலேயே உள்ளது. டாக்டர். இரா. பி. சேதுப்பிள்ளை அவர்கள் 1946இல் எழுதிய 'ஊரும் பேரும்' என்னும் நூலே இவ்வாய்வுத் துறையின் கால்கோள் எனலாம். அந்நூலுக்கு முன்னுரை வழங்கியுள்ள திரு. வி. க. "வாழ்க்கைக்குப் பல துறைகள் தேவை, அவற்றுள் ஆவி போன்றவை 'ஊரும் பேரும்'. ஊரும் பேரும் வாழ்க்கையை இயக்கி வளர்ப்பன என்று கூறல் மிகையாகாது. ஊர் பேரால் உலகம் இயங்கல் வெள்ளிடைமலை, ஊர்பேரே உலகம் வாழ்க்கை; எல்லாம் எல்லாம்!" என ஊர்ப்பெயராய்வின் இன்றியமையாமையைத் தமக்கேயுரிய எளிய இனிய நடையில் எடுத்துரைத்துள்ளார். இவ்வாய்வுக்குத் தலபுராணங்கள் பெரும் அடிப்படைகளாக உள்ளன என்பது மிகையாகாது.

கேரளத்தில் இடப்பெயராய்வுக் கழகம் (Place Name Society) ஒன்று ஏற்படுத்தப்பட்டுச் செம்மையாகச் செயற்பட்டு வருகிறது. ஊர்ப் பெயர்களை ஆய்ந்து, சிதைந்த பெயர்களை யெல்லாம் மீட்டுருவாக்கும் பணியைச் சிறப்பாகச் செய்து வருகிறது. தென்மாநிலங்களில் கேரளப் பல்கலைக் கழகம்தான் ஊர்ப்பெயராய்வுக்கு முதன் முதலில் முதன்மை கொடுத்தது எனலாம். டாக்டர் நாச்சிமுத்து அவர்கள் கொங்கு நாட்டு ஊர்ப்பெயர்களை ஆய்வு செய்து முனைவர் பட்டம் பெற்றார். தஞ்சை தமிழ்ப்பல்கலைக் கழகத்தில் டாக்டர் தா. வே. வீராச்சாமி அவர்கள் பெரிய புராணத்தில் இடம் பெறும் ஊர்ப்பெயர்களை ஆய்வு செய்து நூலாக வெளி யிட்டுள்ளார்.

தமிழ் நாட்டில் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் ஊர்ப் பெயராய்வுக்குக் களம் அமைத்துக் கொடுத்தது. முனைவர் கு. பகவதி அவர்கள் ஊர்ப் பெயராய்வுகளையே தன் முதன்மைப் பணியாக எடுத்துக் கொண்டு இலக்கியத்தில் ஊர்ப் பெயர்கள் தொகுதி- 2, தமிழக ஊர்ப்பெயர்கள் என்னும் நூல் களை எழுதியுள்ளார். மேலும் அறிஞர் சிலரால் தனிப்பெயர் கள், மாவட்டப் பெயர்கள், கல்வெட்டுப்பெயர்கள் போன்று அங்கொன்றும், இங்கொன்றுமாக நடைபெற்று வரும் இந்த ஆய்வு ஒரு முகப் படுத்தபட்டு விரிவுபடுத்தப்பட வேண்டியது இன்றியமையாதது.

ஊர்ப் பெயராய்வில் இப்போதுள்ள நிலையிலிருந்து ஒரு படி முன்னேறி முனைவர் பகவதி அவர்கள் இத்துறையில்

ஒப்பியலாய்வை மேற்கொண்டுள்ளார். ஒப்பியல் முறையில் ஊராய்வை மேற்கொள்வது இதுவே முதலாவது என்று கருது கிறேன். ஒப்பிலக்கிய வரையறைகளையும், அதில் நேரிடும் சிக்கல்களையும் நன்கு விளக்கியிருக்கும் திருமதி பகவதி தமிழகத்தின் ஊர்ப்பெயர்களையும், இலங்கையில் வடக்கு, கிழக்குப் பகுதிகளில் உள்ள ஊர்ப்பெயர்களையும் ஒப்பிட்டு ஆய்வு செய்திருப்பது பாராட்டுக்குரியது.

இந்த ஆய்வு "தமிழகத்தின், தமிழ் மக்களின் வரலாறு தொடர்பான சில உண்மைகளை உறுதிப்படுத்து தலுக்கும், புதிய சிந்தனைகளை வெளிப்படுத்துதலுக்கும் வழி காட்டியாய் அமையலாம்" என்னும் ஆசிரியரின் கூற்று இந் நூல் வழி நிறைவேறியுள்ளது என்று கூறலாம்.

இலங்கை ஒரு காலத்தில் தமிழ்நிலப் பரப்போடிணைந் திருந்து, பின்னர், கடலால் பிரிக்கப்பட்டுத் தனி நாடாக ஆயிற்று. தமிழர்கள், தொடர்ந்து இலங்கையில் வாழ்ந்து வருகின்றனர். தமிழ் மன்னர்கள் இலங்கையின் பகுதிகளை அவ்வப்போது ஆட்சி செய்துள்ளனர். எனவே தமிழக ஊர்ப் பெயர்களுடன் இலங்கையின் ஊர்ப் பெயர்கள் பெருமளவில் ஒப்புமை கொண்டிருப்பது இயல்பே!

வெள்ளையர்கள் காலத்தில் 'சென்னை இராச்சியம்' என்றழைக்கப்பட்டதைத் தவிர வேறு பெயர் எதையும் தமிழகம் பெற்றதில்லை. தமிழகம் என்ற பெயராலேயே வழங்கி வந்திருக்கிறது. ஆனால் இலங்கையோ இருபத்து நான்குக்கு மேற்பட்ட பெயர்களால் அழைக்கப்பட்டுள்ளது. இலங்கை என்ற பெயர் சூட்டப்பட்ட காலம், காரணத்தை அறிய இதுவரை போதிய சான்றுகள் கிட்டவில்லை.

ஒரு பகுதியில் குடியிருக்கும் மக்கள் பெயர்ந்து வேறோ ரிடம் சென்று புதிதாகக் குடியிருப்பை அமைக்கும்போது தாங்கள் வாழ்ந்த அப்பழையபகுதியின் பெயரையேஅமைத்துக் கொள்வது இயல்பே! இதனாற்றான் ஒரே பெயரைப் பல்வேறு இடங்களில் காணமுடிகிறது. ஈழம் என்னும் சொல்லை விரிவாக ஆராய்ந்துள்ள இந்நூலாசிரியர் இப்பெயர் முதலில் தமிழகத்தில் காணப்பட்டு, தமிழர்கள் இலங்கை சென்று குடியேறிய போது. அப்பகுதியை ஈழம் என்ற தங்கள் பழைய

ஊர்ப்பெயராலேயே அழைத்திருக்கலாம் என்ற எண்ணத்திற்கு வருகிறார்.

ஊர்ப்பெயர் ஆய்வு எளிய செயலன்று. வளர்ந்து வரும் காலச் சூழல்களில் எத்துணையோ மாற்றங்கள் நிகழ்கின்றன. எங்காவது 15, 20 குடிசைகளே கொண்ட குடியிருப்புத் தோன்றினால் இப்போதுள்ள மக்கள் தங்கள் ஆர்வத்தின் காரணமாக, தலைவர்கள்பால் உள்ள அன்பால் 'அண்ணா நகர்,' 'பெரியார் நகர்' என்றெல்லாம் பெயர் சூட்டி அழைக்கக் காண்கிறோம். காலப்போக்கில் அச்சிற்றூர்க்கு 'நகர்' என்ற பெயரே நிலைத்து நிற்கப் போகிறது. ஊர், நகர் என்பதற்கே பொருள் மயக்கம் தரும்படியான நிலையும் தோன்றி விடக்கூடும். இப்படியான சிக்கல் நிறைந்த ஓர் துறையில் செம்மையான பணியினைச் செய்துவரும் முனைவர் கு. பகவதி பாராட்டுக்குரியவராகிறார்.

இவ்வாய்வினை முற்ற முடிந்த ஆய்வு என்று சொல்லிவிட முடியாது. இஃது ஓர் தொடக்கமேயாம். இதே ஆர்வத்தோடு மேலும் தொடர்ந்தால் தமிழ்நாடு, இலங்கை பற்றிய வரலாற்று, நில இயல், சமய, ஆட்சிநிலை, பண்பாடு தொடர்பான பல உண்மைகள் வெளிப்படும் என்பது திண்ணம்.

''மேம்போக்கான ஆய்வு நிலையில் சில சிந்தனைகள் பெற முடிந்தது. இவ்வாய்வு ஆழமாக, முழுமையாக நோக்கப்படின், பல புதிய செய்திகள் புலப்பட வாய்ப்புண்டு'' எனக் கூறும் ஆசிரியர் ஆழமான, முழுமையான ஆய்வை மேற்கொண்டு அரிய பல செய்திகளை நாட்டுக்கு வழங்குவார் என்ற நம்பிக்கையோடு வாழ்த்துகிறேன்.

இத்தகைய நல்லாய்வுகட்கு ஊக்கமளித்து வரும் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் பணி போற்றுதற்குரியது. இதுபோன்று இன்னும் பல ஆய்வு நூல்கள் வெளிவர, நிறுவனம் தூண்டுகோலாய் அமைந்து ஊக்குவிக்க வேண்டுமெனும் விழைவுடன் நிறுவன ஆய்வுப் பணிகளைப் பாராட்டி மகிழ்கிறேன்.

அன்புடன்

**சு. செல்லப்பன்**

# நன்றியுரை

ஊர்ப் பெயராய்வு தொடர்பாக, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் நான்கு நூல்களை வெளியிட்டுள்ளது 5-ஆவது வெளியீடாக இந்நூல அமைகிறது. கல்வெட்டு, இலக்கியம், மாவட்டம் என்ற நிலை அங்கு அமைய, இங்கு 'ஒப்பீட்டுப் பார்வை' இடம் பெறுகிறது. ஊர்ப்பெயர் ஆய்வு என்ற எண்ணம் அமையும்போதே திருவள்ளுவரின் 'தொட்டனைத் தூறும் மணற் கேணி' தான் சிந்தையல் எழுகிறது. தொடத் தொட, படிக்கப்படிக்க இன்னமும் பார்க்க வேண்டும் என்ற உணர்வை எழுப்புவது இவ்வாய்வின் தன்மையாக அமைகிறது. எனினும் இங்கு, காலம், நூலின் அளவு கருதி, கிடைத்த செய்திகளை, ஓர் எல்லைக்குள் கொணர்ந்து, அவை வகைப்படுத்தப்பட்டுள்ளன. இவ்வாய்வில் வரலாற்று வெளிச் சத்திற்கு ஊர்ப்பெயர் ஆய்வு துணைசெய்யும் என்ற எண்ணம் மேலும் உறுதிப்படுகிறது.

புதிய ஆய்வாகவும், ஆழம் அகலம் நிறைந்த ஆய்வாகவும் அமையும் ஊர்ப்பெயராய்வில் முழுமையாக என்னை ஈடுபடுமாறு செய்த டாக்டர் ச. வே. சுப்பிரமணியன் அவர்கள்,

உலகளாவிய பார்வையை ஒப்பீட்டுப் பார்வை தரும் என்ற எண்ணத்தை எடுத்துரைத்த டாக்டர் ஏ.என். பெருமாள் அவர்கள்,

இந்நூல் விரைவில் வெளிவர வேண்டும் என்று விரும்பி யும், அணிந்துரை நல்கியும், சிறப்பித்த டாக்டர் சிலம்பொலி செல்லப்பன் அவர்கள், எழுதியவற்றைச் சரிபார்த்து உதவிய டாக்டர் அ. மணவாளன் அவர்களுக்கும் நன்றி.

அவ்வப்போது இலங்கை தொடர்பான ஐயங்களைத் தெளிவாக்கிய டாக்டர் ர. விஜயலட்சுமி, திரு. ராஜ சிங்கம் அவர்கள், ஆகிய அனைவரையும் நன்றியுடன் நினைத்துக் கொள்கிறேன்.

இந்நூல் வெளிவருவதற்கு ஒத்துழைப்பு கொடுத்த இந்நிறுவன இயக்குநர் பொறுப்பு டாக்டர் அன்னி தாமசு அவர்களுக்கு என் நன்றி.

சிறந்த முறையில் அச்சிட்டுக் கொடுத்த கோமதி அச்சகததார்க்கும் என் நன்றி.

டாக்டர் கு. பகவதி

---

# உள்ளுறை

# தமிழகம் இலங்கை ஊர்ப்பெயர்கள்

## —ஓர் ஒப்பாய்வு

### முதலுரை

உணர்வு முறையில் ஒன்றை அணுகுவதை விடவும், அறிவு அடிப்படையில் அதனை அணுகிப் பார்த்தால், அதுவே முறையானதாகவும், பயன் மிக்கதாகவும் அமையும் என்ற கருத்து இன்று அறிஞர்களிடம் பெருகி வருகிறது. ஆய்வும் அத்தகைய முறையில் அமைந்தால் தான் சிறப்பு என்ற எண்ணமும் ஆய்வாளர்களிடம் வளர்ந்து வருகிறது. தமிழ் ஆய்வுகளும் இவ்வாறு அமைய வேண்டும் என்ற தமிழறிஞர் பலரின் எண்ணத்திற்கு இணங்க, பல நடைபெற்றும் வருகின்றன. இத்தகைய பலபயன் மிக்க ஆய்வுகளுள் ஒப்பிட்டு ஆய்தல் மிகத் தேவையான சிறந்த ஆய்வு என்பது ஒப்பாய்வு அறிஞர் பலரின் எண்ணமாகும்.

ஒப்பாய்வு பரந்தது; விரிந்தது; ஆழ்ந்தது. எனினும் இதன் ஒரு பகுதியான ஒப்பிலக்கிய ஆய்வுகள் இன்று நடைபெற்றுக் கொண்டிருக்கிற அளவிற்கு, பிறதுறை ஒப்பியல் ஆய்வுகள் தமிழ் ஆய்வில் நடைபெறவில்லை. எனவே ஒப்பிலக்கியம் பற்றிய நூல்கள், கட்டுரைகள், திறனாய்வுகள் எழுந்தமை போன்று, பிறதுறை ஒப்பீடுகள் பற்றிய சிந்தனைகளையும் நாம் காணுதல் இயலவில்லை. இன்று பிறதுறை ஒப்பீடுகள் தொடங்கப்பட்டுள்ள நிலையில், ஒப்பாய்வு பற்றிய சில எண்ணங்களை, ஒற்றுமை பற்றி இவண் காணலாம்.

இலக்கிய ஆய்வில் வந்து புகுந்த புது முறைகளில் ஒன்றே ஒப்பியல் ஆய்வு எனக் கூறும் க. கைலாசபதியின் ஒப்பியல் பற்றிய சிந்தனை இவண் எண்ணத்தக்கது.

'ஒரு பொருளை அல்லது நிகழ்வை விஞ்ஞானி கூர்ந்து நோக்கிக் குறித்துக் கொள்வனவற்றைத் தரவுகள் என்கிறோம். ஒரு பொருளைப் பற்றிய தரவுகளுடன், பிறிதொரு தொகுதித் தரவுகளை ஒப்பு நோக்கும் பொழுது, இயற்கையான ஒருமைப் பாடுகள் சிலவற்றையும் பொதுக் குணங்களையும் காண் கிறோம். அதாவது பலமுறை அவதானித்த தரவுகளினின்றும் சில பொது முடிவுகள் அன்றி விதிகள் வகுக்கப்படுகின்றன. சில சமயங்களில் தரவுகளைப் பெறமுன்னரே ஏதாவது ஒரு பொது முடிவை அல்லது விதியை ஊகமாகக் கொள்கிறோம். அதனையே கருதுகோள் என்பர். பரிசோதனையின் போது கிடைக்கும் முடிவு முதற்கொண்ட கருதுகோள் சரியா தவறா என்பதைக் காட்டும். ஆயினும் கருதுகோள் ஆய்விற்கு முதல் தேவையாக அமையும். விஞ்ஞானத்துக்கு ஒவ்வும் இவ்வாய்வுத் துறையை ஒப்பியல் ஆராய்ச்சியின் மூலம் கலை இலக்கியத் துறைக்கும் ஏற்றதாக நாம் அமைத்துக் கொள்ள இயலும்.[1]

அ. அ. மணவாளன், காரல்மார்க்ஸின் கருத்தை எடுத்து இயம்பும் போது, 'அவர் கருத்தின்படி சமுதாயம் என்பது வரலாற்றுப் படைப்பு; கோட்பாடுகள் நடைமுறை என்னும் இருவகை அமைப்புகளை உடையன. கோட்பாடு ஒன்றாகவும். நடைமுறை பல வடிவாகவும் பரிணமிக்கும் தன்மையின. அதாவது ஒரு சமுதாயம் வெளிப்படுத்தும் கலைகள் அல்லது ஒழுகலாறுகள் பலவாயினும் அவையாவும் ஒரே கோட் பாட்டின் அடிப்படையில் மலரும் இயல்பின. எனவே அகவடிவ மான அக்கோட்பாடுகளை அறிய, அதன் வெளிப்பாடுகளான புறவடிவங்களை ஒன்றோடொன்று ஒப்பிட்டு ஆராய்வது அடிப்படைத் தேவையாகிறது என்று விளக்கினார்'[2] என்கின்றார்.

எனவே பொது நிலையில் நோக்க, சில கருத்துகள் அமை கின்றன. ஆய்வு என்பது பலவகையாகப் பிரிந்து மனிதச் சிந்தனைகளைத் தரவல்லதாக அமைகிறது. உயிரினங்கள் அனைத்திலும் மேன்மையும் சிறப்பும் உடையவனாக,

---

1. ஒப்பியல் இலக்கியம் - க. கைலாசபதி - பக். 11-12.
2. ஒப்பிலக்கிய ஆராய்ச்சியில் எழும் சிக்கல்கள் — அ. அ. மணவாளன்—ப-3

பகுத்தறிவு கொண்டவனாகத் திகழும் மனிதன், தன்னுடைய தனித்தன்மை அனைத்தையும் தான் வெளிப்படுத்தும் பல வகைப்பட்ட துறைகளையும் வடிகாலாகக் கொண்டு,அவற்றை வெளிப்படுத்துகின்றான். இவ்வனைத்து வெளிப்பாடுகளிலும் அவனது சிந்தனை, எண்ணம், கோட்பாடுகள் அனைத்தும் பின்னிப்பிணைந்தே காணப்படக் கூடும் என்பது தெளிவுறு கிறது. இதன்விளைவே, புறவடிவங்களைத் தனித்து ஆய்வு செய்வதுடன், ஒன்றோடு ஒன்று ஒப்பிட்டும் ஆய்தல் என்ற சிந்தனையாகும். இதனையே அ.அ. மணவாளன் ஒப்பிலக்கிய ஆய்வு வளர்ச்சி என்றும் காட்டுகின்றார்.

'பிற இலக்கியங்களோடு பொருத்தி பார்ப்பதோடு அமையாமல், பிறமானுட அறிவுத் துறைகளோடும் பொருத்தி ஒப்பிட்டுப் பார்ப்பது இலக்கிய ஒப்பாய்வியல் என்று வரையறுத்தனர்'.[3]

இக்கருத்துகளை நோக்க, ஒப்பியல் ஆய்வு என்பது மனிதனின் அடிப்படைக் கோட்பாடுகளைப் புரிந்து கொள்ள வகை செய்வதோடு, சமுதாயம், சமயம், காலம் போன்ற பல வேறு சூழலுக்கும் ஏற்ப, மனிதன் வேறுபடும், தனித்து நிற்கும் நிலைமைகளையும் புரிந்து கொள்வதற்கு ஏற்றதொரு ஆய்வு என்பது தெளிவுபடுகிறது.

ஒப்பீட்டு ஆய்வு என்பது இவ்வாறு ஆழமான ஆய்விற்குரியதுடன், ஒப்பீட்டுக் களங்களும் ஆழமான நோக்கிலேயே அணுகப்பட வேண்டும் என்ற எண்ணங்களும் உள. 'எதை எதனோடு ஒப்பிட்டுப் பார்க்க வேண்டும் என்ற தெளிந்த கண்ணோட்டத்தை முதலில் பெற வேண்டும். சமுதாயப் பார்வையை வளர்த்துக் கொண்டால் மட்டுமே ஒப்பாய்வுக் களங்களைச் சிறப்பாகத் தேர்ந்தெடுக்க முடியும். இன்று சமுதாய உணர்வோ, இலக்கிய அறிவோ, வரலாற்றுப் பின்னணியோ இல்லாமல் ஒன்றுக்கொன்று தொடர்பில்லாத தலைப்புகளில் எல்லாம் ஆராய்ச்சி செய்ய முற்படும் நிலையினைக் காண்கிறோம். சமுதாய வளர்ச்சி நிலையில் குறிப்பிட்ட கால கட்டங்களில் மட்டுமே குறிப்பிட்ட சிந்தனைகளும் இலக்கிய வடிவங்களும் அணுகுமுறைகளும் தோன்ற

3. ஒப்பிலக்கிய ஆராய்ச்சியில் எழும் சிக்கல்கள்—அ. அ. மணவாளன்—ப-3

முடியும் என்பதைத் தெள்ளத் தெளிவாக உணரவேண்டும்'[4] என்ற கருத்தை இவண் அரணாக்கலாம்.

இந்த ஒப்பியல் ஆய்விற்குரிய அணுகு முறையையும் எண்ணிப்பார்ப்பது அறிஞரிடம் காணப்படுகிறது. இன்று அனைத்து ஆய்வுகட்கும் சுட்டப்படும் காய்தல், உவத்தல் அகற்றி, உண்மை காணவேண்டும் என்ற அடிப்படையில் விழையும் அறிவியல் அணுகு முறையினை இதற்கும் சுட்டுவர். இங்கு, க. கைலாசபதியின் அறிவியல் ஆய்வு எடுகோள்கள் இரண்டும் இந்த ஆய்விற்குத் தேவை என்பதும் உண்மை காணும் முயற்சிக்கு வழிகாட்ட வல்லன என்பதும் எண்ணிப் பார்க்கத் தக்கது. அவர், 'விஞ்ஞான ஆராய்ச்சியிலே எடுகோள் முக்கிய இடம் வகிக்கிறது. பொதுவாக விஞ்ஞானிகள் இரு அடிப்படை மெய்ம்மைகளைத் தமது ஆராய்ச்சிக்கு முதற்படியாக ஏற்றுக் கொள்வர். நடப்பவைகளுக்கெல்லாம் காரணம் இருக்கிறது என்பதும் ஒரே தன்மையான காரணங்கள், நிலைமைகள் மாறாதிருக்குமானால் ஒரே மாதிரியான பயனையே அளிப்பன என்பதும் அவர்கள் ஏற்கும் இரு எடுகோள்கள். முதலாவது எடுகோள் முடிவற்ற ஆராய்ச்சிக்கு ஏதுவாகவும், நம்பிக்கையும் ஊக்கமும் அளிக்கும் சக்தியாகவும் அமைகிறது. இரண்டாவது எடுகோளின் அடிப்படையில் வெவ்வேறு விஞ்ஞானிகள் குறிப்பிட்ட பரிசோதனைகளைத் திரும்ப செய்து சரிபார்க்க வழி பிறக்கிறது'[5] என்கின்றார்.

இவ்வாறு ஒப்பிலக்கியம் பற்றிய ஆய்வு விளக்கங்களை எல்லாம் காணுகின்ற நிலையில், ஒப்பாய்வுகட்கும் இவை பொருந்துமாறு அமைவதை எண்ணிப் பார்க்கலாம். மேலும் ஒப்பிலக்கிய ஆய்வு வளர்ச்சி, பிற துறைகளிலும் விரைந்து பல ஒப்பியல் ஆய்வுகளைத் தொடங்கி, புதிய சிந்தனைகளைக் காண வேண்டும் என்ற உணர்வைத் தரவல்லதாக அமைகிறது. இந்நிலையில், இந்நூல், தமிழகத்தின் ஊர்ப்பெயர்களையும், இலங்கையின் வடக்கு, கிழக்குப் பகுதியில் உள்ள ஊர்ப் பெயர்களையும் ஒப்பிட்டு, ஆயமுனைகிறது. ஊர்ப்பெயர்களை ஒப்பு

4. இலக்கிய ஒப்பாய்வுக் களங்கள் — ஜி. ஜான் சாமுவேல் — ப - 13.
5. ஒப்பியல் இலக்கியம்— ப. 12.

நோக்கி ஆராயும்போது, ஊர்ப்பெயர் பற்றிய விளக்கங்களுடன் ஒப்பியல் நோக்கிலான பார்வைகள் தரும் சிந்தனைகளுடன், உலகளாவிய நிலையில், மனிதனை இனம் கண்டு கொள்ளுதல் இங்கும் இயலலாம் என்ற அடிப்படையில், இவ்வாய்வு அமைகிறது.

## ஒப்பியல் பார்வையில் ஊர்ப்பெயர்கள்

ஒப்பீட்டு முறையில் இரு களங்களை எடுத்து ஆயும் போது அவை அடிப்படையில் ஒற்றுமையும், பிறவற்றுள் வேறுபாடும் கொண்டு இலங்குதல் வேண்டும். இந்நிலையில் தமிழகம் இலங்கை ஊர்ப்பெயர்கள் தமிழ் மொழியால், வாழும் தமிழ் மக்களால், தமிழகத்திற்கு நெருங்கிய நில அமைப்பால், ஒற்றுமையுடையனவாகவும், பிறமொழியினர்ச் சார்பு, அரசியல் மாறுபாடு போன்ற பலவித சூழல் காரணமாக வேற்றுமையுடையனவாகவும் திகழ்வதனைப் பொது நிலையில் மேலோட்டமான பார்வை தருகிறது. எனவே இப்பெயர்கள் ஒப்பாய்வு நிலையில் அணுகுவதற்கு வாய்ப்புத் தருகின்றன. இந்த ஊர்ப்பெயர்களை ஒப்பியல் நோக்கில் ஆயும்போது, இரு நாட்டின் ஊர்ப்பெயர்களிலும் காணப்படும் ஒற்றுமை, வேற்றுமை, குறிப்பிட்ட இடத்தில் குறிப்பிட்ட பெயர்கள் இருப்பதன் அடிப்படை, இல்லாமைக்குரிய காரணங்கள்,மிகுதி, குறைவிற்கான காரணங்கள் இவை புலப்படுத்தும் சிந்தனைகள், வரலாற்றுப் பார்வையில், சிறப்பாகத் தமிழரின் குடிப் பெயர்ச்சி தொடர்பான எண்ணங்கள் அனைத்தும் வெளிப்பட வாய்ப்புண்டு. எனினும் இவ்வாய்வில் சில கூறுகளே புலப்படு கின்றன. எதிர்பார்க்கும் சிந்தனைகள் அனைத்தும் புலப் படாமைக்குரிய காரணங்கள் பல உள. எனினும் அறிஞர்கள் பலரின் பார்வை படாதும், காலத்தின், வரலாற்றின் சுவடுகள் ஆழப்பதிந்தும், பதிந்தன தேய்ந்தும் காணப்படும் ஊர்ப்பெயர்கள் பலகோணப் பார்வை யில் புதிய சிந்தனைகளைத் தருதலுக்கு வாய்ப்பு தருவன என்ற எண்ணத்தில், 'இலக்கியத்தில் ஊர்ப்பெயர்களை'த் தொடர்ந்து 'தமிழக ஊர்ப்பெயர்கள்', இதனைத் தொடர்ந்து 'ஒப்பீட்டு நோக்கில் ஊர்ப்பெயர்கள்' என இவ்வாய்வு தொடர்ந்து அமைகின்ற நிலையைச் சுட்ட வேண்டும். இந்

நிலையில் ஆசை பற்றி அறையலுற்ற இவ்வாய்வு ஒரு சோதனை முயற்சியேயாகும். முழுமையான, நுண்மையான, துல்லியமான ஆய்வு முடிவுகள் இங்கே பெறப்படாமைக்குரிய காரணங்களாகச் சிலவற்றைச் சுட்டலாம்.

1. தமிழகம் இலங்கை இரண்டு நாட்டுப் பகுதிகளிலும் உள்ள அனைத்து ஊர்ப்பெயர்களும் ஆய்வுக்குட் படுத்தப்படவில்லை.
2. தமிழகம் இலங்கை ஊர்ப்பெயர்கள் அனைத்தும் இதுவரையிலும் தொகுக்கப்படவில்லை; எனவே இன்னமும் தனித்தனியே ஊர்ப்பெயர்கள் அனைத்தும் ஆய்வு செய்யப்படவில்லை. தனிமனித சாதனையுள் அடங்காத இவ்வாய்வுப் பரப்பு, குழுவினரின் பார்வைக்குள் படவும் இல்லை.
3. தமிழக கிராமங்களின் அகர வரிசைப்பட்டி நூல் போன்று கூட, இலங்கை ஊர்ப்பெயர்கள் கிடைக்கும் நிலை இல்லை. எனவே, இலங்கையின் வடக்கு கிழக்கு பகுதியில் உள்ள யாழ்ப்பாணம், மட்டக்களப்பு ஊர்ப் பெயர்கள், சில ஆய்வு நூல்களில் கிடைத்தனவே இவண் தரவுகளாக அமைகின்றன.
4. ஊர்ப்பெயர் ஆய்வு களப்பணியால் அன்றி முடிவு பெறுவதில்லை என்ற கி. நாச்சிமுத்துவின் எண்ணம். இங்குத் தமிழகமோ, இலங்கையோ களப்பணி செய்யப் படவில்லை.

இக்குறைகள் அனைத்தையும் உணர்ந்து இருப் பினும், சில செய்திகள், சில கருதுகோள்கள் மேலும் உறுதிப் பெறுவதற்கு வாய்ப்பு உள்ளது என்றதொரு சிந்தனை அமைகின்ற காரணத்தால், இங்கு முன்னமே சொன்னது போன்று, ‘இவண் ஆய்வு செய்ய பரந்ததொரு ஆய்வுக்களம் உண்டு; ஆய்வுச் சிந்தனைகள் பல வெளிப்படவும் வாய்ப்புண்டு’ என்ற நோக்கில் இவ்வூர்ப்பெயர்கள் ஆய்வுக்குட் படுத்தப்படுகின்றன.

## ஊர்ப் பெயர்கள் ஆய்வு

மக்கள் குடியிருக்கும் இடங்களின் பெயர்களே ஊர்ப் பெயர்கள் என்று வழங்கப்படுவன. மனிதனின் அடிப்படைத்

தேவைகளுள் ஒன்றான இவ்வுறைவிடங்கள் பெயர் பெறும் விதங்கள் பல அடிப்படையிலானவை. உலகம் முழுவதும் உள்ள இத்தகைய ஊர்ப்பெயர்கள் வேற்றுமையில் ஒற்றுமையையும் ஒற்றுமையில் வேற்றுமையையும் காட்டி மனிதனின் ஒத்த, வேறுபட்ட மனநிலைகளை வெளிப்படுத்துகின்றன. மனிதனின் அடிப்படை உணர்வுகளில் ஒற்றுமையைக் காணும் நாம், வாழும் சூழல், மதச்சார்பு, பழக்கவழக்கங்கள், அரசியல் போன்ற பலவற்றாலும் மனிதன் வேறுபடுவதையும் காண்கின்ற நிலை, இவ்வூர்ப் பெயர் ஆய்வாலும் உறுதிப்படுத்தப்படுகின்றது.

சில நாடுகளில் மிகவும் முன்னேறிய நிலையிலும், பல நாடுகளில் வளர்ந்து வரும் நிலையிலும் ஊர்ப் பெயர்த் தொடர்பான ஆய்வுகள் அமைகின்றன, இந்தியாவில் முன்னேறிக் கொண்டிருக்கும் இவ்வாய்வு, தமிழகத்திலும் முன்னேற்றப் பாதையை நோக்கிச் சென்று கொண்டிருக்கிறது. எனினும், போதுமான ஆய்வாளரின் பார்வைகள் இதன் மேற்படவில்லை. தமிழகத்தில் சில மாவட்ட ஊர்ப் பெயர்கள் ஆய்வு செய்யப்பட்டுள்ளன. கல்வெட்டுகளில் உள்ள ஊர்ப் பெயர்கள், ஊர்ப்பெயர் மாற்றங்கள், பிறமொழி ஊர்ப் பெயர்கள், பொதுக்கூறுகள், சிறப்புக் கூறுகள் போன்ற சில ஆய்வுகளும் மேற்கொள்ளப்பட்டுள்ளன. இந்நிலையினின்றும் சிறிது முன்னேற்ற நிலையில் தமிழகத்தில் உள்ள ஊர்ப் பெயர்கள் முழுவதையும் பரவலாகப் பார்த்த நிலையில் சில எண்ணங்களைத் தந்து அமைந்துள்ளது 'தமிழக ஊர்ப் பெயர்கள்' நூல். தமிழகத்தில் உள்ள அனைத்து ஊர்ப் பெயர்களையும் ஆழ்ந்து தனித்தனியே நோக்கி ஆய்வு செய்து முடிப்பின், மேலும் பல புதிய எண்ணங்களைத் தமிழக வரலாற்றிற்குத் தருதல் இயலும் என்ற எண்ணம் அடிப்படையாக எழுந்தது இந்நூல். இந்நிலையில் தமிழ் நாட்டுடன் தமிழ் மொழியாலும், தமிழ் மக்களாலும் தொடர்புள்ள தமிழர்வாழும் பிற பகுதிகள் அதாவது உலகில் உள்ள பிறபகுதிகளையும் ஒப்பிட வேண்டும். அவ்வாறு ஒப்பிட்டுக் காணும்போது மேலும் பல புதிய சிந்தனைகள் காணவும், கருத்துகள் பலவற்றை உறுதிபடுத்தவும் சான்றுகள் கிடைக்க வழியுண்டு என்ற எண்ணத்தில் இவண்

முதன் முதலாக தமிழகம்—இலங்கை ஊர்ப்பெயர்கள் ஒப்பியல் நோக்கில் ஆய்வு செய்யப்படுகின்றன. இங்கு டாக்டர் பொற்கோ அவர்களின், 'வரலாற்றாராய்ச்சியும், பண்பாட்டாராய்ச்சியும் சிறப்பாக வளர வேண்டுமானால், மேற்கண்ட நாடுகளில் நம் வரலாறு பண்பாடு தொடர்புடையனவாகச் காணும் செய்திகளையும் நாம் ஆய்வுக்கு எடுத்துக் கொண்டு ஒப்பிட்டு ஆராய வேண்டும்'[6] என்ற கருத்துப் பொருத்தமாக இணைகிறது.

ஊர்ப்பெயர்களைப் பற்றிக் கூறும்போது கி. நாச்சிமுத்து ஊர்ப்பெயர்கள் வெறும் சொல் விளையாட்டு என்று எண்ணி வாளாவிருக்கும் தமிழரைப்பார்த்து, (இடப்பெயர்களின் மிகச் சிறப்பான விளக்கத்தையும், அணுகுமுறையையும் சுட்டிய பின்னர்) 'இதுவரைக்கும் விளக்கம் செய்யப்பட்ட கருத்துகள் எல்லாம் இலக்கிய வாதம் போல் தோன்றக்கூடும். இன்னும் சிலர் மூலையிலிருந்து கொண்டு, இடப்பெயர் ஆய்வா? அதற்கென்ன தேவை? என்ன அவசரம்? என்று முனகக்கூடும். நாம் இனியும் கண்ணிருந்தும் குருடராய், காதிருந்தும் செவிடராய் நம் வரலாறும், வாழ்வும் எந்தத் தடயங்களும் இன்றி முன்பு போல அழியச் சம்மதிப்போமா? நம் வறுமையையும் பொருளின்மையையும் நினைத்துக் கொண்டு முடங்கிக் கிடப்போமா? என்ன செய்யப் போகிறோம்? இடப்பெயர்களைத்தொகுக்கவும் ஆயவும் சோதனைகள்மூலம் எளிய சிக்கன வழியொன்றைக் காண்போம்'[7] என்று சுட்டும் எண்ணம் விரைவாகச் செயற்படுத்தற்குரியது. இவ்வாறு சுட்டுவதுடன் இவர் நின்றுவிடாது. இவ்வாய்வு எந்தெந்த புலம்பற்றிய அறிவையெல்லாம் வெளிக்கொணரத் தக்கது என்பதையும் மிகச் சிறப்பாகத் தெளிவுபடுத்துவதும் இவண் எடுத்தியம்புதற்குரியது. இந்நிலையில் இவ்வாய்வு மொழியியல் துறை, வரலாறு, தொல்பொருளியல், நிலநூல், சமூகவியல், மானிடவியல், நாட்டுப்புறவியல், இயற்கை, அறிவியல் போன்ற பல துறைகள் ஆய்விற்கு மிகுந்த துணையாக இருக்கும் என்பதுடன் 'மனிதப் பண்பாட்டையும் நாகரிகத்தை

6. உலக நாடுகளில் தமிழர்கள் —டாக்டர். பொற்கோ ப-89.

7. தமிழ் இடப்பெயராய்வு —கி. நாச்சிமுத்து -ப-65

யும் ஆராய்ந்து வெளிப்படுத்துவதில் வரலாற்றுக்கும், தொல்பொருளாய்விற்கும் என்ன பங்கு உண்டோ அப்பங்கு இடப்பெயராய்விற்கும் உண்டு'[8] என்றியம்பும் எண்ணத்தை யும் நாம் உறுதியாக வரவேற்கலாம்.

பொது நிலை நோக்குடன் அமையாது, சிறப்பாக நோக்கும் நோக்கு மேலும் பல ஆழ்ந்த சிறந்த பயனைத் தர இயலும் என்பது இவண் கருதத்தக்கது. சான்றாகப் பிறநாடு களில் குடியேறிய தமிழர் பற்றிய ஆய்வு தமிழரின் குடிப் பெயர்ச்சி பற்றிய சிந்தனைகளைச் சிறப்பாகத் தர இயலும் என்ற எண்ணம் தோன்றுகிறது. தமிழர் பல காலங்களில் இலங்கையில் குடியேறினர் என்பது வரலாறு தரும் செய்தி. இந்தக் குடிப்பெயர்ச்சி பற்றிய செய்திகளையும், ஊர்ப்பெயர் களையும் இணைத்து ஆராயும்போது, தமிழர் எந்தப்பகுதியில் இருந்து இலங்கைக்குச் சென்றனர்? என்ன நோக்கம் கருதிச் சென்றனர்? எந்தக் காலத்தில் சென்றனர்? எந்தப்பகுதியில் சென்று குடியேறினர்? போன்ற பல எண்ணங்களை நாம் அறிதல்கூடும். இந்நிலையில் தமிழ் நாட்டிற்கு இலங்கை மக்கள் வந்து குடியேறாததன் காரணம் என்ன? போன்ற எண்ணங்களும் தெளிவுபடுதல் கூடும். இங்கு, கி. நாச்சிமுத்துவின் எண்ணமும் ஒப்பு நோக்குதற்குரியதாக அமைகிறது. 'இனவரலாற்றில் பழங்காலத்தில் எவ்வெவ் பகுதியில், எவ்வெவ் இனங்கள் வாழ்ந்தன என்பதை இடப்பெயர்களைக் கொண்டு அறியமுடியும். வாழ்ந்து எந்தவிதச் சுவடும் இல்லாமல் மறைந்துபோன இனங்களைப் பற்றியும்அறியலாம். காட்டாக, இலங்கையின் தமிழ் பேசும் வடபகுதியில் காணப்படும் சிங்கள ஊர்ப்பெயர்களும் சிங்களம் பேசும் வடபகுதியில் உள்ள தமிழ்ப்பெயர்களும் பண்டு அப்பகுதிகளில் முறையே சிங்களவரும், தமிழரும் வாழ்ந்ததை உறுதிப்படுத்து கின்றன. பாரசீகப்பகுதியில் முன்பு திராவிடர் வாழ்ந்தனர் என்பதற்குத் திராவிட ஊர்ப்பெயர்களைச் சுட்டிக்காட்டுவர் அறிஞர் எல். வி. இராமசாமி ஐயர். இதே போல் திராவிடர்க்கு முன் தென்னகத்தில் வாழ்ந்திருந்த தொல் மக்களைப்பற்றியும் இடப்பெயராய்வு புதிய செய்திகளைத் தரக்கூடும். வரலாற்றுக்கும் முற்பட்ட காலத்தில் நிகழ்ந்த வெளி, உள் குடிப்பெயர்ச்சிகளையும் பெயர்களைக் கொண்டு ஊகிக்கலாம்.

8. தமிழ் இடப்பெயராய்வு ,, ப-51

வஞ்சி, கருவூர், முசிறி, கழுமலம், செங்குன்றூர் போன்ற பெயர்கள் மேற்குக் கரையிலும், கொங்கு நாட்டிலும் இருப்பது குடிப்பெயர்ச்சிகளின் விளைவாகலாம்'[9] எனக் கூறியிருப்பது ஊர்ப்பெயர்களின் ஆய்வுப்பயனுக்குச்சிறந்ததொருவிளக்கமாக அமைகிறது. மேலும் இவர் 'பெயர்களின் தோற்றத்தை அறிய மொழியியல் அல்லாத பிற துறை அறிவு தேவை. பெயர்களின் பின்புலத்தை அறிய அப்பகுதியில் வாழும் மக்கள் பேசும் மொழிகள், வழக்கியல்புகள் மட்டுமின்றி, அதன் வரலாறு, வாழும் இனங்கள், சாதி சமயப் பிரிவுகள், பழக்கவழக்கங்கள் புராணக் கதைகள், மரபுக்கதைகள், செவிவழிச் செய்திகள் ஆகியவற்றையும் பயன்படுத்த வேண்டியிருக்கும். எல்லா வற்றிற்கும் மேலாக அப்பகுதியின் பூகோள, இயற்கை அமைப்பைப்பற்றியஅறிவும் தேவை. எனவே இத்துறைகளில் எல்லாம் பெயராய்வாளன் ஓரளவு அறிவு பெற்றிருத்தல் நல்லது'[10] என்கிறார்.

இன்று திறனாய்வு முறை மிகவும் வளர்ந்து வருகின்ற ஒரு துறையாக உள்ளது. ஓர் இலக்கியத்தை வரலாற்று அணுகுமுறை, உளவியல் அணுகுமுறை சமுதாய அணுகு முறை போன்ற பல அணுகு முறைகளில் அணுகுவது என்ற நிலையில், அவ்விலக்கியத்தை முழுமையாகத் தெரிந்து கொள்ள, இத்தகைய அறிவுகள் அனைத்தும் தேவை என்ற எண்ணம் புலப்படுகின்றது. இந்நிலையிலேயே கி. நாச்சிமுத்து வின் கருத்துப்படி ஊர்ப்பெயராய்விற்கும் அனைத்து அணுகு முறைகளும் அல்லது பல கோணப்பார்வைகளும் அமையின் அவ்வூர்ப் பெயர் பற்றிய சிறந்த உண்மையான சிந்தனையைத் தரவியலும் என்பது உறுதியானதாகும். மேலும் உண்மையான சில சிந்தனைத்தொகுப்பின் முடிவிலேயே பெரும் உண்மை களைப் புலப்படுத்துதல் இயலும் என்ற அடிப்படை எண்ணமும் இவண் சுட்டுதற்குரியது.

---

9. தமிழ் இடப்பெயராய்வு - பக் 56- 57
10. ,, - ப 49

## ஆய்வின் கருதுகோள்

1. பொதுவாக ஊர்ப்பெயர்கள் முப்பகுப்பாக வகைப் படுத்தப்படுகின்றன. 1. பொதுக் கூறுகள் 2. சிறப்புக் கூறுகள் 3. தனிப்பெயர்களும் மரூஉப்பெயர்களும். இம்மூன்றுக் கூறுகளும் பொதுவாக, சமுதாயம், அரசியல், சமயம், உளவியல்' நிலவியல், மொழி போன்ற அனைத்தையும் உணர்வதற்கு வழி கோலுகின்றன. இருப்பினும் இவற்றுள், சிறப்பாகப்பொதுக்கூறு நில வரலாற்றையும், சிறப்புக்கூறு மக்களின் வரலாற்றையும், தனிப்பெயர்களும் மரூஉப்பெயர்களும் மொழி வரலாற்றையும் மிகுதியாக வெளிப்படுத்த உதவுவன. இவ்வெண்ணம் இவ்வாய்விலும் உறுதிப்படுமா?

2. ஊர்ப்பெயர்களில் இயற்கைப் பெயர்களே முதலிலும் முதன்மையிலும், மிக்கு அமைகின்றன. இவற்றுள்ளும் தாவரப் பெயர்களே முதலில் சூட்டப்பெற்ற ஊர்ப்பெயர்களாக இருக்கலாம் என்ற கருத்து உறுதிப்படுமா?

3. 'ஊர்ப்பெயர்கள் திட்டமிடுதல் தேவை' எந்த அளவிற்கு இக்கருத்து ஏற்புடையது?

4. தமிழரின் தாயகமாகிய கடல் கொண்ட பகுதி பற்றிய முடிவும், இலங்கை அதன் ஒரு பகுதி என்பதும் எந்த அளவிற்கு உறுதிப்படும்?

## ஆய்வின் அமைப்பு

இத்தகைய சில கருத்துகளின் மேல் எழும்பும் இந்நூல், கீழ்வரும் 7 இயல்களாக அமைகிறது.

முதல் இயல்—தமிழகம் இலங்கை நில அமைப்பு அவற்றின் தொடர்பும் நெருக்கமும் கருதி இணைத்து நோக்கப் படுகிறது. தொடர்ந்து இருபகுதிகளின் அரசியல், சமயம் போன்ற சில கூறுகள் சுட்டப்படுகின்றன.

இரண்டாம் இயல்—தமிழகம் பெயர்க்காரணம்—இலங்கை பெயர்க் காரணம் - இலங்கையின் பிறபெயர்கள் ஆய்வுக்குட் படுத்தப் படுகின்றன.

மூன்றாம் இயல் - தமிழகம் இலங்கை ஊர்ப்பெயர்களின் அமைப்பு முறை குறித்த ஆய்வாக அமைகிறது.

நான்காம் இயல் - இரண்டு நாடுகளிலும் காணப்படும் ஊர்ப்பெயர் பொதுக் கூறுகள் ஆய்வு செய்யப்படுகின்றன. ஒப்புமை கூறுகள், வேறுபடும் கூறுகள் சுட்டப்படுகின்றன. காரணங்கள் அறியும் முயற்சி மேற்கொள்ளப்படுகின்றது.

ஐந்தாம் இயல் - தமிழகம் இலங்கை ஊர்ப்பெயர்களில் அமையும் சிறப்புக் கூறுகள் வகைப்படுத்தலுக்குட்படுத்தப் பட்டு, விளக்கங்கள் தரப்படுகின்றன. உண்மைகள் கண்டறியும் முயற்சி மேற்கொள்ளப் படுகின்றது.

ஆறாம் இயல் - ஒரு சில தனிப் பெயர்களும் மரூஉப் பெயர்களும் பற்றிய செய்திகள் சுட்டப்படுகின்றன.

ஏழாம் இயல் - இரண்டு நாடுகளிலும் இருப்பதாகத் தெரியவரும் ஒரு சில ஒத்த ஊர்ப்பெயர்கள் தொகுத்துத் தரப் படுகின்றன.

முடிவுரையில் ஆய்வு முடிவுகள் தொகுக்கப்பட்டுத் தரப்படுகின்றன. கருதுகோள்களின் நிலை குறித்த எண்ணங்கள் சுட்டப் படுகின்றன. தமிழகத்தின், தமிழ் மக்களின், வரலாறு தொடர்பான சில உண்மைகள் உறுதிப்படுத்தலுக்கும், புதிய சிந்தனைகள் வெளிப்படுத்துதலுக்கும் இவ்வாய்வு வழி காட்டுதல் இயலலாம் என்ற நோக்கில் இப்பகுதியில் இவ்வெண்ணங்கள் சுட்டிக் காட்டப்படுகின்றன.

# இயல் 1

# தமிழகம் - இலங்கை

## நில அமைப்பும் தொடர்பும்

தமிழ் நாட்டின் தென்பகுதியில், பல்வகை அரிய பெரிய கருவூலங்களைத் தன்னுள் அடக்கி, நிற்கும் ஆழ்பெரும் கடலினுள் எழில் மிகு நித்திலமாகப் பேரும் புகழும் பெற்று விளங்குவது இலங்கைத் திருநாடு. இரண்டு வளநாடுகளின் அருகாமை, தமிழர்களின் வாழ்விலும் நெருக்கத்தினை அளித்துள்ளமையை வரலாறு கொண்டு நாம் உணர இயலுகிறது. பல அறிஞர்களின் கருத்துகளும் இவற்றை மிகத் தெளிவாக எடுத்தியம்புகின்றன.[1]

---

1. The location of Sri Lanka in close proximity to South India was responsible for a large measure of mutual influence. Sri Lanka the pearl shaped island, approximately 65610 square kilometres in area, lies off the Southern tip of India. Sri Lanka is seperated from the Southern extremity of the peninsula of India by the Gulf of Mannar and the palk strait, :he width of the intervening sea at the narrowest point (Adam bridge) being about 32.2 Kilometres. Little wonder that Sri Lanka played practically the role of an out-house of South India and that there existed close contact between the two countries. Generally the developments political social religious and cultural which appeared in one country exercised their influence on the other country.

—South India and Sri Lanka—K. K. Pillai—P.1.

இவ்வாறு தொடர்புபட்டு கிடக்கும் இரு நாடுகளும் ஒரு காலத்தில் ஒரே நிலமாக ஒன்றுபட்டு கிடந்தன என்பதையும் வரலாறு தெரிவிப்பதை அறிஞர் சுட்டுகின்றனர். தமிழகத்தின் ஒரு பகுதியே இலங்கை. கடல் இவ்விரண்டையும் பிரித்துத் தனித்தனி நாடுகளாகத் திகழச் செய்து விட்ட நிலையைத் தக்க சான்றுகளுடன் ஆய்வாளர் உரைக்கின்றனர். பல சான்றுகளும் வரலாற்று மூலங்களும் இக்கருத்தினை ஏற்கச் செய்கின்றன. அறிஞர் கூற்றுகளாகச் சிலவற்றைச் சுட்டி, பின்னர்,அதற்குரிய தகவுகளைக் கூறுதல் சரியாக அமையும் என்ற நிலையில், சில அறிஞர் சான்றுகளை இவண் காணலாம்.

'குமரிக் கண்டம் என்பது தமிழக நிலப்பகுதியை ஒட்டிக் கடலுள் மூழ்கிய நிலப்பரப்பாக இருந்திருக்கலாம் என்றும் கடல் மட்ட வேறுபாட்டால் அது கடலால் கொள்ளப்பட்டிருக் கலாம் என்றும் அறியலாம்.

மன்னார் வளைகுடாவைச் சேர்ந்த பெரு நிலப் பகுதியும் தமிழகம் இலங்கை ஆகிய நாடுகளுக்கிடையே உள்ள பாக் கடலிடுக்கும் அண்மைக் காலத்தில் மூழ்கியனவாகத் தெரிய வருகின்றன. கி. மு. 8000 ஆண்டுகளுக்கு முன் பனிப்படர்வு ஊழி இருந்ததால், இந்நிகழ்ச்சி கி. மு. 8000 ஆண்டுகளுக்குப் பின்னரே நிகழ்ந்திருத்தல் வேண்டும்.

கி. மு. எட்டாயிரத்திற்குப் பிறகு பனிப்படர்வு ஊழிக் காலம் முடிவுற, வெப்பத்தால் பனிக்கட்டிகள் உருகத் தொடங்கி, கடல் மட்டம் உயர்ந்தது. கி. மு. 6000இல் கடல் மட்டம் உயர்ந்து பிரிட்டனும் ஐரோப்பாக் கண்டமும் துண்டிக்கப்பட்டன என்று கூறப்படுகிறது. ஆகையால் ஏறத்தாழ அதே காலத்தில் மூழ்கிய நிலப்பகுதியால் மன்னார் வளைகுடாவும், பாக் கடலிடுக்கும் தோன்றியிருக்கலாம். மாமல்லபுர அழிவும் இவ்வாறாகவே நேர்ந்திருக்கலாம். இதற்குச் சான்றாகத் திருநெல்வேலி மாவட்டத்தைச் சார்ந்த கடற்கரையிலும், வாலி நோக்கம் வளைகுடாவிலும், அக்காலத்தில் கடற்கரையோரம் வளர்ந்த காடுகள் இன்று கடலுள் மூழ்கியிருப்பதைக் கொள்ளலாம். இக்காடுகளில் இருந்த மரங்களின் அடிமரப்பகுதிகள் இரண்டடி அளவு விட்டம் கொண்டவை. இம்மரங்கள் அக்காலத்துக் கடற்கரை

யோரங்களில் வளர்ந்திருக்கலாம். பிரிட்டனிலும் இவை போன்ற கடலுள் மூழ்கிய காடுகள் காணப்படுகின்றனவாதலால் மேற்கூறிய கால வரையறை தமிழகத்திற்கும் பொருந்தும்.

லெமூரியாக் கண்டம், அட்லாண்டிக் கண்டம், 'மூ' என்னும் பசிபிக் கண்டம் ஆகியவை அறிவியலாளரால் முழுமையான அளவில் ஒப்புக் கொள்ளப்படவில்லை. எனினும் இலங்கை தென்னகத்துடன் இணைந்திருந்தது என்பதும் குமரி முனைக்குத் தெற்கே நிலப்பரப்பு இருந்தது என்பதும் ஏற்றுக் கொள்ளப்பட்ட உண்மைகளே ஆகும். இலக்கியங்களில் குறிப்பிடப்படும் குமரிக்கண்டம் இந்நிலப்பரப்பே ஆகலாம்' போன்ற கருத்துகள் தமிழ் நாட்டு வரலாற்றுக்குழு வெளியிட்டுள்ள 'தமிழ் நாட்டு வரலாறு — தொல் பழங்காலம்' என்ற நூல் சுட்டுவனவாக அமைகின்றன (பக். 24, 25).

கே. கே. பிள்ளை தம் நூலில் தென்னகத்தின் பகுதியே இலங்கை என்பதை இயம்புகின்றார்.[2] இலங்கையைச் சுற்றியும் உள்ள நீரின் ஆழமின்மை, பாறைகளின் ஒற்றுமை, தாவரங்கள், விலங்குகள், பறவைகள் ஒன்றுபட்டுக்காணும் நிலை, பொன் வெள்ளி போன்ற பொன்வகைகள் கிடைக்கும் நிலை, கற்கள், முத்துகள் காரணமாகச் சிறப்புற்ற நிலை, தாம்பபன்னி என்ற ஊர்ப்பெயரின் ஒற்றுமை போன்றவற்றையும் சான்றாக்குகின்றார்.[3]

---

2. 'The question of migration and influence arises only in respect of historical times, for, in all probability in the pre historic ages of old, Sri Lanka did not exist as a seperate extity. It was but a part and parcel of South India. The geological and geographical features of both South India and Sri Lanka are similar in several respects on the basis of which, Wilherm Geiger rightly concludes that in times gone by Sri Lanka was an out-stretched region of the Dekkan Plateau. He says, 'Ceylon is essentially a part of the Dekkan the vast plateau of South India and consists geologically of a solid mass of pre-cambrian crystalline rock chiefly Biotitgneiss with bands of white crystalline limestone'. —South India and Sir Lanka— P.2.

3. ,, ,, Pa. 3—5.

க. த. திருநாவுக்கரசு தம் நூலில், 'கடல் கொண்ட தென்னாட்டைக் குமரிநாடு என்று குறிப்பிடுவது மரபு... கடல் கொள்ளப்பட்ட தென்னாட்டைப் பற்றிய குறிப்புகள் இலங்கையின் காலவழிச் செய்திக் கோவையான மகாவமிசத்திலும் காணப்படுகின்றன. அப்பெரும் நிலப் பரப்பு அழிந்த பொழுது அதன் பகுதி ஒன்று அழியாமல் நின்றதென்று புவியியல் ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர். அப் பகுதியைச் சார்ந்து புதிய நிலப்பரப்பு ஒன்று தோன்றியது என்றும் தெரிவிக்கின்றனர். மறைந்து போன குமரிக் கண்டத் திலிருந்த 'ஏழ்பனை நாடு' இருந்த இடமே ஒரு தீவாக மாறிய தென்றும், அதனால் தான் அத் தீவு ஈழம் என்ற பெயர் பெற்ற தாகவும் அறிஞர்கள் சிலர் கருதுகின்றனர்... தமிழர்கள் கடல் கொண்ட குமரிக் கண்டத்தில் தோன்றினர் என்று திருத்தந்தை ஹீராசுப்பெருந்தகை போன்றவர்கள் கருதுகின்றனர். இக் கருத்தினை அரண் செய்யும் வகையில் அண்மைக் காலத்திய ருஷியநாட்டு அறிஞர்களின் ஆராய்ச்சி அமைந்திருக்கிறது. எனவே தொல்பழங்காலத்தில் தமிழரின் தாயகமாக விளங்கிய நிலப்பரப்பின் ஒரு பகுதியே இலங்கை என்று கூறினால் அது தவறாகாது' என்று உரைக்கின்றார்.[4]

எனவே மேற்சுட்டிய அறிஞர் கருத்துகள் அனைத்தும் தமிழகத்தின் தெற்கில் நிலம் இருந்தது என்பதையும், அதன் ஒரு பகுதியே இலங்கை என்பதையும் தெளிவாகச் சுட்டுகின்றன. தமிழக அறிஞர் மட்டுமல்லாமல் இலங்கை அறிஞர்களும் இக் கருத்தினை ஒத்துக் கொள்கின்றனர். சான்றாக,

'குமரிப் பெருநிலமும் இத்தீபகற்பமுமே பழந்தமிழரின் தாயகம். அவன் அரும்பியதும் மலர்ந்ததும் கனிந்ததும் இப் பகுதிகளில் தான். குமரிப்பெருநிலம் கடல் கோளால் அழிந்தபின் நமக்கு எஞ்சியது இத்தென்னகமும் அதனைச் சார்ந்து கடலால் பிரிக்கப்பட்டுத் தீவாய் நின்றதுமான இலங்கையுமேயாகும். தென்னகத்தின் உறுப்பேயான இவ்விலங்கைத்தீவு கடல் கால்வாயால் பிரிக்கப் பட்டுள்ளது. தமிழ் நிலப்பரப்பு கடல் கோள்களுக்கு இலக்காகி மறைய மறைய, தென்னகத்திலிருந்தும் இலங்கை மண் வெட்டுண்டது.[5]

4. இலங்கையில் தமிழ்ப் பண்பாடு - பக் 37- 38
5. இலங்கையில் இனவெறி ஆட்சி-செ. வைத்திலிங்கம். ப- 3

'ஏனைய நாடுகளில் இலங்கை மட்டுமே மிகப் பழைய காலந்தொட்டே தமிழகத்துடன் தொடர்புடையதாயிருக்கிறது. கடல் பிரிவுக்கு முன் ஒரே பகுதியாக இருந்திருக்கவேண்டும்.'[6]

லெமூரியாக் கண்டம் அல்லது கடல் கொண்ட தமிழ் நிலப் பகுதி என்பதில் சில ஐயுறவு இருப்பினும், இதனையும் பல அறிஞர்கள் சான்று காட்டித் தெளிவுறுத்துகின்றனர். ஞா. தேவநேயன்மிக நம்பிக்கையோடு இக்கருத்தினைத் தெளிவு படுத்துகின்றார். 'தமிழன் என்னும் இனம் தமிழ் பற்றியதே யாதலால், தமிழன் தோன்றிய இடமே தமிழன் பிறந்தகமாம். அது தென்வாரியில் மூழ்கிப் போன குமரிநாடே. அதற்குச் சான்றுகள் உள.' என 16 குறிப்புகளை எடுத்துக் காட்டுகின்றார் இவர்.[7]

ச. சோமசுந்தர பாரதியார், 'முதலூழியில் கடல்கோளால் அளவறியாத பிற தென்னாட்டுடன் அழிந்த தமிழ் நிலப்பரப்பு தெற்கே குமரியின் வடகரை முதல் அதன் வடக்கே பஃறுளி யாற்றளவும் எழுநூற்றுக் காவதம் அல்லது ஏழாயிரம் சதுர மைல் அளவு என்பதும் அந்நிலத்தின் கிழக்கும் மேற்கும் முன் கடல்களே எல்லையாயிருந்தன என்பதும் அழியுமுன் குமரிக்குத் தெற்கே தமிழ் வழங்காத தமிழ் நாடேயிருந்ததென்பதும் அம்முதற் கடல்கோளால் அழிந்தவை அப்பிற நாடும் பாண்டியரின் தமிழ் நாட்டில் குமரி முதல் பஃறுளி வரையுள்ள தென் பகுதி மட்டுமே என்பதும் அடியார்க்கு நல்லார் உரையாலும் மற்றும் பழம் புலவர்கள் கூறும் செய்தியாலும் ஒருங்கே தெளிந்து துணியப்படும் உண்மைகளாகும்' என நம் தமிழ் இலக்கியச் சான்றுகளையும், உரைகளையும் அவற்றின் நுண்மையான விளக்கங்களையும் காட்டி உரைப்பது சிறப்பாக அமைகிறது.[8]

இத்தகைய பல முன்னைய அறிவு சார் அறிஞர்களின் கருத்துகளையெல்லாம் மிகத் தெளிவாக விளக்கி, மேலும்

6. தமிழ் உணர்ச்சி - கா. பொ. இரத்தினம் - பக் - 77
7. தமிழர் வரலாறு - பக் - 12 - 14.
8. தமிழும் தமிழரும் - பக் - 21.

இக்கருத்திற்கு அழுத்தம் கொடுத்துள்ளார் க. ப. அறவாணன், தமிழரின் தாயகம் குமரியின் தென்பகுதி என இவர் அளிக்கும், காட்டும் வரலாற்று மூலங்கள் மிகுதி.

தமிழரின் தாயகம் தொடர்பாக இதுவரையிலும் வெளி வந்துள்ள அறிஞர் பலரின் சிந்தனைகளை எடுத்துக் காட்டு கின்றார். உலகின் பிறபகுதியிலிருந்து வந்தோர் என்பவரின் கருத்துகளைத் தருகின்றார். அவை எல்லாம் மறுக்கப்படு மாற்றைத் தொகுத்துத் தருகின்றார். தமிழரின் தாயகம் குமரிப்பகுதியே என்பதற்குரிய தமிழ்இலக்கியச்சான்றுகளுடன், பிற பல மானிடவியல் கூறுகள், தமிழகம் தவிர, அயல்நாட்டு மக்களிடம் காணப்படும் நம்பிக்கைகள், பழக்க வழக்கங்கள், போன்ற பல சான்றுகளையும் எடுத்துத்தரும் தன்மை சிறப் பானது; மேன்மையானது. மேலும் இவர் பலர் ஐயுறும் லெமூரியாக் கண்டம் அழிவு பற்றிய எண்ணத்தையும் குறிப்பிட்டு மேற்சுட்டிய சான்றுகள் அனைத்தும் லெமூரியாக் கண்டம் பற்றிய தெளிவைக் காட்டாவிடினும், குமரியின் தெற்கில் நிலப்பகுதி இருந்தது என்பதற்கும், தமிழர் அப்பகுதி யைத் தாயகமாகக் கொண்டவர் என்பதற்கும் மறுக்க முடியாத அரண்களாக அவை அமைவன என்பதில் உறுதியாக இருக் கின்றார். இக்கருத்து ஏற்கத் தக்கதே. குமரியின் தெற்குப் பகுதி நிலமாக இருந்து கடல் கொள்ளப்பட்டது என்பதற்கு மேலும் சான்றுகள் தேவையில்லை என்னுமளவிற்கு இத்தகைய அறிஞர் கருத்துகள் துணையாகின்றன.

இந்நிலையில் இக்கருத்துகளைச் சான்றாகக் கொண்டு பார்க்கும் போது தென்னிந்தியாவின், மூழ்கிப் போன பகுதி யின் ஒரு பகுதியாகவே இலங்கை இருந்திருத்தல் வேண்டும் என்னும் எண்ணம் மிகப் பொருத்தமானதே என்ற எண்ணம் உறுதிப் படுகின்றது. பண்டைய சான்றுகளைக் கொண்டு மட்டுமல்லாது இன்றைய பிறதுறை ஆய்வாளரும் இக்கருத்தில் ஒன்றுபடுகின்றனர்.[9]

9. இக்கருத்துகள் அனைத்தும் திராவிடர்கள் தமிழ கத்தின் தெற்கே இருந்த நிலப்பரப்பு ஒன்றில் தோன்றிய வர்கள்; அந்நிலப்பரப்பு பெரு வெள்ளத்தினால் கடலினுள் மூழ்கியபொழுது அவர்கள் வடக்கு நோக்கிக் குடியேறினர்.

அன்றைய தமிழகம் வடக்கே வேங்கடத்தையும் தெற்கே குமரியுடன் கடல் கொண்ட பகுதியையும் கொண்டு திகழ்ந்தது என்பது புலனாகின்றது. கடல் பிரித்தபின்னர் இலங்கைமட்டும் தீவாகத் தனித்துக் காணப்பட்டது. இருப்பினும் இலங்கை தொடர்பாகத்தெரியவரும் சிலசெய்திகளில் அன்றைய இலங்கை இன்றைய இலங்கையின் அளவைக் காட்டிலும், அகன்ற பரப்புடன் அமைந்திருந்ததாகத் தெரிகிறது.[10] ஏற்பட்ட சில கடல் அரிப்புகள், இதனை மேலும் குறுகியதாக்கி விட்டிருக்கின்றன என்பதை இவை எண்ணச் செய்கின்றன.

பெரிப்புளூஸ் (கி.பி. முதல் நூற்), தாலமி(கி.பி5 ஆம் நூற்) குறிப்புகள் கி. பி. முதல் நூற்றாண்டுக்கு முன்னமேயே இலங்கை தனியாகப் பிரிந்து விட்டதைத் தெரிவிக்கின்றன. பிளினி,மெகஸ்தனிஸ் குறிப்புகள் இலங்கை இன்றைய அளவைக் காட்டிலும் மிக அதிகப் பரப்புள்ளது என்பதை எண்ணச் செய்கின்றன. மேலும் இலங்கை சரித்திரங்களைக் கூறும் நூலான இராசாவளி, இலங்கையின் நிலப்பரப்பைக் கடல்

---

அவ்வாறு அவர்கள் குடியேறிய பகுதி இன்றைய தமிழகத்தின் தெற்குப் பகுதியாகும் என்பனவற்றைத் தெரிவிக்கின்றன. இக்கருத்தினை வெளியிட்ட அறிஞர்கள் வெறும் இலக்கிய ஆராய்ச்சியாளர்களோ, வரலாற்றாசிரியர்களோ அல்லர்; தங்களுடைய காலத்தில் சிறப்பு மிக்க நிலப்பொதியியல் ஆராய்ச்சியாளர்களாகவும், இனமரபியல் அறிஞர்களாகவும்,மானிடவியல் வல்லுநர்களாகவும் அவர்கள் விளங்கினர் என்பதை நாம் நினைவு கூர்தல் வேண்டும்.

தமிழ்நாடு - தொல்பழங்காலம் — பக் - 116.

10. ரெடாஸ்தெனிஸ் என்பவரும் இத்தீவின் அளவினைத் தொகுத்துக் கொடுத்துள்ளார். அவர் கூறுகிறார் இத்தீவின் நீளம் 7000 ஸ்டேடியாவும், அகலம் 5000 ஸ்டேடியாவும் ஆகும். இத்தீவில் பெரு நகரம் என்று கூறப்படுவதற்கு ஒன்றும் இல்லை. இருப்பன யாவும் கிராமங்களே. அக்கிராமங்களின் எண்ணிக்கை 700 ஆகும்—பிளினி ப - 67. மெகஸ்தனிஸ் தப்பிரபனேயின் நீளம் 9000 ஸ்டேடியா என்றும் அகலம் 5000 ஸ்டேடியா என்றும் குறித்துள்ளார்.

கொண்டுவிட்ட செய்தியைக் குறிப்பிடுகின்றது.[11] எனவே இலங்கை, தமிழகத்தினின்றும் பிரிந்த பின்னர், தம் நிலப்பரப்பி லும் குறைந்து இன்றைய அளவிற்குச் சுருங்கி விட்டநிலை தெரிகிறது.

அரசியல்—தமிழகத்தின் அரசியல் நிலை என்று எடுத்துக் காணும்போது வரலாற்றுத் தொடக்க முதல் முப்பகுதி களாகப் பிரிக்கப் பட்டிருந்த தமிழகம் முப்பெரும் வேந்தர் களால் ஆளப்பட்டு வந்தமையைத் தெரிகின்றோம். இம்முப் பெருவேந்தர்களின் ஆட்சியும் பின்னர் மங்கி விட, களப்பிரர் ஆண்டதாகக் குறிப்பிடுகின்றனர். தொடர்ந்து பல்லவர்களும் பின்னர் சோழர்களும் அதன் பின்னர் பாண்டியர்களும் ஆட்சி செய்துள்ளனர். பின்னர் முகம்மதியர்களின் ஆட்சி தொடர, நாயக்கர் பரம்பரை பின்னர் தொடர்கிறது. பின்னர் அயல் நாட்டார் வரவில், ஆங்கிலேயர் ஆட்சி நிலை பெறுகிறது. 1947 - க்குப் பின்னர் சுதந்திர இந்தியாவின் ஒரு பகுதியாகத் தமிழகம் முதலமைச்சரால் ஆட்சி செய்யப்படுவதைக் காண்கின் றோம்.

இந்நிலையில் தமிழகத்தின் ஆட்சியில், பெருவேந்தர் களுடன், குறுநில மன்னர்களும் சிற்சிலபகுதிகளைத் தனித்து ஆண்டமையையும் அறிகிறோம்.

தமிழ் மாநிலப்பரப்பின் ஒரு பகுதியாக இருந்த இலங்கை கடலால் பிரிவுற்றது. முதல் அரசாக இயக்கர் அரசு தெரிய வருகிறது தொடர்ந்து நாக அரசு கி. மு. 6 முதல் ஆளத் தொடங்கியுள்ளது.[12] கி. மு. 6 ஆம் நூற்றாண்டி

11. கடல்கோளினால் இராவணன் கட்டியாண்ட இலங்கை யின் பெரும் நிலப்பரப்பைக் கடல் கொண்டு விட்டது. மேலும் ஒரு தடவை கல்யாணியைத் தலைநகராகக் கொண்டு இலங்கையில் ஆட்சி செலுத்திய களனித்தீசன் காலத்திலும் கடல் பொங்கி எழுந்தது. இக்கடல் கோள் இலங்கையின் ஏராளமான பட்டினங்களையும் நாடுகளை யும் தன்னுள் அடக்கிக் கொண்டது. 100000 பட்டினங் களையும், 970 மீன் பிடிகாரர் குடும்பங்களையும், 400 முத்துகுளிகாரர் குறிச்சிகளையும் கடல் விழுங்கி விட்டது. எல்லாமாகப் பன்னிரண்டில் பதினொரு பாகத்தைக் கடல் கொண்டது - ஈழமும் தமிழரும் - பக் - 17 - 18

12. ஈழமும் தமிழரும் — ப-62.

லேயே முதல் சிங்கள மன்னனான விசயனும் இலங்கையை ஆளத் தொடங்கினான் எனக் காண்கின்றோம்.[13] எனவே இலங்கையும் பல பிரிவுகளாக, பல மன்னர்களால் ஆளப்பட்டு வந்த நிலை புலப்படுகிறது.[14]

தமிழர்கள் அடிக்கடி தலையிட்டு இலங்கையின் பகுதிகளை ஆண்டனர். தமிழர்களும் சிங்களவர்களும் அரியணைக்காகப் போர் புரிந்து வென்ற செய்தியையும் ஆண்ட செய்தியையும் இவை தெளிவுபடுத்துகின்றன. தமிழ் முப்பெரும் வேந்தர்களும் பல்லவர்களும் சோழர்களும் பாண்டியர்களும் தம் படைத் தலைவர்களை அனுப்பி, போரிட்டு வெற்றி பெற்ற செய்தியையும் காண்கிறோம். பின்னர் போர்த்துக்கீசியர், டச்சுக்காரர், ஆங்கிலேயர் ஆட்சியில் இலங்கை இருந்தது. 1948 இல் விடுதலை பெற்று, சுதந்திர நாடாயிற்று.

---

13. இலங்கையில் தமிழ்ப்பண்பாடு - ப - 15

14. கி. மு. 250 இல் திசன் ஆட்சி. அவனுக்குப் பின்னர் அவனது தம்பியர் மூவர் அடுத்தடுத்து ஆட்சி செய்தனர். சூரத்திசன் (கி. மு. 206 -இல்) காலத்தில் சேனன், குந்தகன் என்னும் இரு தமிழ் நாட்டு வீரர்கள் படையெடுத்து ஆட்சியைக் கைப்பற்றினர். பின்னர் ஏலேலசிங்கன் என்ற சோழ மன்னனின் படைத்தலைவன் இலங்கையை ஆண்டான். கி. மு. 161 - இல் துட்டகாமணி என்ற சிங்கள அரசன் அரசைக் கைப்பற்றினான். கி. மு. 89 - 77 இல் மீண்டும் ஏழு தமிழ்த் தலைவர்கள் இலங்கையை வென்றனர். 14 ஆண்டுகள் ஆண்டனர். இவர்கள் பாண்டிய அரசனுடைய பிரதிநிதிகள் என்ற எண்ணமுண்டு. பின்னர் வட்டகாமணி வெற்றி பெற்றான். பின்னர் கரிகாலன் இலங்கையில் படையெடுத்துப் பெரும் வெற்றி பெற்றான். பழிக்குப் பழியாக, கயவாகு சோழ நாட்டின் மேல் படையெடுத்தான். கி. பி. 410 - 432 - க்குப் பிறகு பாண்டு என்னும் தலைவனால் மீண்டும் தமிழர் ஆதிக்கம் நிலை நாட்டப்பட்டது. இவனுடைய ஆட்சி மத்திய - வட இலங்கை முழுவதும் பரவியது. கி. பி. 6 முதல் 11 வரை இலங்கையின் வரலாறு தென்னிந்திய அரசுகளோடு போரிட்டு, குருதியைக் கொட்டிய தொடர்கதையாகவே

இத்தகைய இலங்கையின் அரசியல் வரலாற்றிலும், தமிழர்கள் தொடர்ந்து தொடர்பு கொண்டிருந்தது தெளிவாகின்றது. எனவே இங்கே தமிழர்கள் தொடர்ந்து வாழ்ந்து வந்திருக்கின்றனர் என்பதும் தெளிவாகிறது. இந்நிலையில், இலங்கை முழுவதும் தமிழ் ஊர்ப்பெயர்கள் இருந்திருக்க வேண்டும் என்ற கருத்தும் தெளிவுபடுகிறது. இன்று காணப்படும் ஊர்ப்பெயர்கள் மட்டக்களப்பு, யாழ்ப்பாணம் பகுதிகளில் மிகுந்து காணப்படினும், சில பெயர்கள் இலங்கையின் எல்லாப் பகுதிகளிலும், தமிழர்கள் வாழ்ந்து வந்துள்ளனர் என்பதைத் தெளிவாக்குகிறது. இருப்பினும், இலங்கையின் கிழக்கு வடக்குப் பகுதிகள் மிக அருகாமையில்

---

காணப்படுகின்றது. இப்போராட்டத்தில் சிங்களவர்கள் தொடர்ந்து தோல்வியுற்றனர். பிற்காலச் சோழப் பேரரசர்களுள் தன்னிகரற்று விளங்கிய இராசராசனும், அவன் மகன் இராசேந்திரனும் இலங்கையின் பெரும் பகுதியைக் கைப்பற்றி, தங்கள் ஆட்சியின் கீழ்க் கொண்டு வந்தனர். இராசேந்திரன் படையெடுப்பில் இலங்கை முழுவதும் சோழர் ஆதிக்கத்தின் கீழ்க்கொணரப்பட்டது. பின்னர் விசயவாகு (கி. பி. 1055 - 11;0) சில ஆண்டு கட்குப் பிறகு ரோகணத்திற்குச் சென்று, மீண்டும் இலங்கையைக் கைப்பற்றி ஆளத் தொடங்கினான், இராசராசன் காலம் முதல் சோழப் பேரரசின் ஒரு பகுதியாக விளங்கிய இலங்கை, இக்காலத்தில் முழு விடுதலை பெற்ற சுதந்திரநாடாக விளங்கியது. சோழரின் மேலாதிக்கம் இலங்கையில் முறியடிக்கப்பட்ட பின்பு, இலங்கையின் வடபகுதியில் தனியரசு ஒன்று தோன்றியது. இதனை யாழ்ப்பாணத் தமிழரசு என்று சுட்டுவது மரபு. இவ்யாழ்ப்பாணம் ஆரியச் சக்கரவர்த்திகளால் ஆளப்பட்டது. இவர்கள் மணவினைத் தொடர்பாகச் சிறிது காலத்தில் தமிழர்களாகவே மாறிவிட்டனர். நாயக்க மன்னர்கள் காலத்திலும் இந்நிலை தொடர்ந்து நீடித்தது. பராக்கிரமபாகுவிற்குப் பின்னர் கி. பி. 1215 - இல் மாகன் என்ற கலிங்க மன்னன் ஆட்சி செய்தான். 1283 முதல் 1302 வரை இலங்கையின் வரலாறு இருள் செறிந்து காணப்படுகிறது-இலங்கையில் தமிழ்ப்பண்பாடு-ப-23-116

இருப்பதும், மிகுதியாகத் தமிழர் குடியிருப்புகளை இன்று வரை பெற்று வந்திருப்பதும் காரணமாக இங்கே இன்று வரையிலும் தொடர்ந்து தமிழ் ஊர்ப்பெயர்களை மிகுதியாகக் காண இயலுகிறது. எனவே இவையிரண்டு பகுதிகளின் வரலாற்றையும் சிறிது விளக்கமாக இவண் நோக்கலாம்.

**யாழ்ப்பாணம்**—யாழ்ப்பாணத்தின் வரலாறு, பல அறிஞர்களால் ஆய்வுக்குட்படுத்தப் பட்ட போதிலும், முடிந்த முடிபான வரலாற்றுத் தெளிவினைச் சுட்டமுடியவில்லை என்பது ஆய்வாளர் தம் முடிவு. இருப்பினும் ஓரளவிற்குத் தெளிவான எண்ணங்களைத் தர முயன்றுள்ளனர் வரலாற்று ஆய்வாளர்கள்.

தன்னுடைய யாழ்ப்பாணச்சரித்திரம் என்ற நூலினை, பழைய யாழ்ப்பாண சரித்திர நூல்களான,

1. வைபவ மாலை— மேக்கறூன் என்னும் ஒல்லாந்த சேனாபதி.
2. கைலாய மாலை — முத்தராசகவி.
3. பரராசசேகரன் உலா — மனப்புலி முதலியார் (ஐயமுடையது)
4. இராசமுறை — ?
5. வையை பாடல் — வையாபுரி ஐயர்

என்ற நூல்களை ஆதாரமாகக் கொண்டு எழுதியுள்ளார் அ. முத்துத் தம்பி பிள்ளை. இவரது வரலாறு தமிழகத்தில் இருந்து சென்ற யாழ்ப்பாடி உருவாக்கிய நிலையிலேயே யாழ்ப்பாணம் பெயர் பெற்று, தனிப்பகுதியாக உருவாயிற்று என்ற நோக்கத்திலேயே செல்கிறது. சங்கிலி வரை தொடர்ந்திருந்த இவ்வரலாற்றில் பின்னர் பிற நாட்டாரிடம் அடிமைப்பட்டுக் கிடந்ததையும் பின்னர் ஆங்கிலேயர் அரசு செய்ததையும் கூறிச் செல்லும் இவ்வாசிரியர் இறுதியில்,

'இவ்வாறாகக் காடு கொண்டு நாடுவாரற்று நெடுங்காலம் கிடந்த இந்நாட்டை, ஓரந்தகன் தான் செய்த நன் முயற்சியாற் பரிசாகப் பெற்றுக் குடியேற்றி, திருத்திச் சிறந்த நாடாக்கி, அதிலே நல்லரணையுடைய நகரமைத்து இராசதானியாக்கி, வேற்றரசரும் வணங்கப் பன்னூறு வருஷம் அரசு நிலையிட்டுத் தன் பெயரை உலகுள்ள வரைக்கும் அழியாது

வைத்ததும், அங்ஙனம் வாய்த்த பெருமையால் தருக்குற்ற குடிகளும் அரசும் தமது அறநெறி கடந்து தாமச குணத்தை மேற்கொண்ட கன்மத்தால் வேற்றரசன் கைப்பட்டுத் துன்புற்று வருந்தியதும் பழைய நல்வினை விசேடத்தால் ஆங்கில அரசு வந்து நமக்கு அபயந் தந்து செங்கோல் நடாத்து வதும் அதனால் நாம் பழைய சுவாதீனம் பெற்றுத் தழைத்து வருவதும் இச்சரித்திரத்தை வாசிப்போர் ஊன்றிச் சிந்திக்கத் தக்கன'' என முடிக்கின்றார்.[15] 1933—இல் எழுதப்பட்ட இந்நூலில் பல செய்திகள் மேலும் தெளிவாக அறிஞர்களால் ஆய்வு செய்யப்பட்ட நிலையில் யாழ்ப்பாணத்தின் வரலாறு புதிய உண்மைகளை வெளிக் காட்டி நிற்கின்றன. மிகச் சிறந்த முறையில் அவற்றை ஆராய்ந்து, விளக்கம் பெறத் துணை நிற்கின்றவர் டாக்டர் கே. கே. பிள்ளை. தமது நூலில், யாழ்ப்பாண அரசுபற்றி ஒரு தனி இயலையே அமைத்து ஆராய்ந்துள்ளார்.[16]

யாழ்ப்பாணப் பேரரசின் தோற்றம் கி.மு. 205 எனக் கூறிய யாழ்ப்பாணச் சரித்திர ஆசிரியரின் எண்ணம் இவண் மாறுபடுகின்றது. இடைக்காலத்தில் யாழ்ப்பாணம் தனித்த, உரிமையுடைய அரசாக இயங்கத் தொடங்கிற்று என்பதையும், கி. பி. 795-இல் உக்கிர சிங்கன் என்பவனால் தொடங்கப் பட்டது இவ்வரசு என்பதாகவும் இவர் தம் ஆய்வைத் தொடங்குகின்றார்[17] இவர், யாழ்ப்பாண வைபவமாலை,

15. யாழ்ப்பாணச் சரித்திரம் - பக் - 148

16 South India and Sri Lanka—The kingdom of Jaffna—Pa—116—133

17. During the medieval times Jaffna was constituted into a seperate and independent kingdom. Regarding the origin of the Kings of Jaffna certain tradition are found embodied in the quasi-historical works like the Yalppane Vaipava Malai and Kailaya Malai. The Yalppana Vaipava Malai states that "in 717 Salivahana (A. D. 795) Vgra Singan, a prince of the dynasty founded by king Vijaya's brother, made a descent upon Lanka with a numerous force from Vada-dēsam(India)and after a severe

கயிலாயமாலை, சிலப்பதிகாரம், மணிமேகலை, சூளவம்சம், செகராசசேகரம், ரகுவம்சம், தட்சணகைலாசபுராணம் போன்ற பல நூல்கள் சுட்டும் எண்ணங்களை நோக்கியுள்ளார். சி. இராசநாயகம் எழுதிய, பழைய யாழ்ப்பாணம், (Ancient Jaffna), எஸ். ஞானப்பிரகாசரின் 'Forgotton Coinage of the king of Jaffna, எஸ்.பரணவிதான எழுதிய 'இலங்கை வரலாறு' போன்ற பல வரலாற்று நூல்களை ஆராய்ந்துள்ளார். கல்வெட்டுகள் பலவற்றைச் சுட்டுகின்றார். இத்தகைய பல வரலாற்று மூலங்களைக் கொண்டு சில, தற்காலிகமான உண்மைகளைத் தரும் நிலையில் இவரது கருத்துகளாகச் சில அமைகின்றன.

யாழ்ப்பாண அரசு உக்கிரசிங்கனால் கி.பி. 795-இல் தனித்த அரசாகத் துவங்கப்பெற்றது. இவர்கள் கலிங்கநாட்டு கங்கமரபு சார்ந்தவர்கள்.

கி.பி. 12-ஆம் நூற்றாண்டுக்கு முன்னர். இம்மன்னர்கள் ஆரியச்சக்கரவர்த்தி என்றப் பட்டப்பெயரைச் சூட்டத் தொடங்கினர். சேதுபதி, இராமேஸ்வரம் தொடர்பான செய்திகள் கொண்டு, நோக்க, பிராமணர் அல்லது ஷத்திரியர் உடனான இவர் தம் தொடர்பே இப் பெயர்க்குரிய காரணமாகும்.[18]

---

struggle possessed himself of one half of the Lanka which had been lost to his dynasty for a long time. He reigned at Kadiramalai while another king reigned over the Southern territories. Ugra Singa is stated to have belonged to the dynasty of Panduvasa, Vijayas nephew. Thus he is taken to have been a descendant of one of those original kalinga colanists who had come with Vijaya and settled down at Singai Nagar or Sinhapura—South India and Sri Lanka-page-116.

18. "On the whole the most reasonable conclusions on the basis of the available data are the following:

The Gangas of the kalinga country were the ancestors of the line of Jaffna king who established their power in A. D 795. Some time about the 12th century A D probable an account of matrimonial alliances with some Brahmins or Kshratriyar of Ramesvaram these king described themselves as Arya Chakravartis.

-- South India and Sri Lanka -pa-124-125

ஆரியச் சக்கரவர்த்திகட்கும் தென்னகத்தில் பாண்டிய மன்னர்கட்கும் மிகுந்த தொடர்பு இருந்தது.[19]

அரசியலில் மட்டுமல்லாது [20] பண்பாட்டுத் தொடர்பும் உடையவர்களாக இவர்கள் இருவரும் இருந்தனர் என்பதையும் அத்துடன் தமிழ் மொழி வளர்ச்சிக்கும் உறுதுணையாக இருந்தனர்'[21] என்பதையும் இவர் எடுத்தியம்புகிறார்.

கி.பி. 795-ஆம் ஆண்டு தனியரசு அமைத்த உக்கிரசிங்கன் காலந்தொடங்கி யாழ்ப்பாணம் தனித்த பகுதி அரசாகஇயங்கத் தொடங்கிற்று என்பதைக் காண்கின்றோம். ஆயினும் கி.பி. 12-ஆம் நூற்றாண்டு தொடக்கம் முதலாகத்தான் ஆரியச் சக்கரவர்த்திகள் என்ற பெயரைப் பூணத்தொடங்கினர் என்பதைக் காணவும், அதுவரையிலும் பெரிய அரசாக யாழ்ப்பாணம் திகழவில்லை என்பது தெரிகிறது. மேலும் சோழமன்னர்கள் இராசராசன், இராசேந்திரன் காலத்தில் இலங்கை முழுவதையும் அவர்கள் சோழ நாட்டின் ஒரு பகுதி யாகக் கொணர்ந்தார்கள் என்பதையும் வரலாறு நமக்குக் காட்டுகிறது. இந்நிலையில் சோழர்கள் கீழ் இவ்வரசு இயங்கியிருக்க வேண்டும் என்பது தெரிகிறது.

---

19. Frequently the Arya chakravartis had dealings with Tamil Nadu of South India and particularly with Pandian king during several stages of their history.- ,, ,, p-126

20. On the whole, the Arya Chakravartis of Jaffna were bound by ties of loyalty to the pandyas of South India. The rulers of these dynasties aided eaeh other in times of trouble.— ,, ,, p-128.

21. It was not only in the political sphere that there existed a close contact between the Arya chakravartis of Jaffna and the Pandyas of South India; it extended to the cultural sphere as well. During the reign of one Pararaja sekaran, the Arya Chakravarthi a Tamil academy was established at Jaffna by his brother Segaraja Sekaran. It is said that Segarajasekaran who was himself an authar of works on astrology and medicine brought a large collection of Tamil Manuseripts from South India and founded the academy.

— ,, ,, p-130

எனினும் கி. பி. 10-ஆம் நூற்றாண்டிலேயே இவர்கள் இப்பெயரைப் பெற்றிருக்கிறார்கள் என்னுமொரு கருத்தைக் காண இராசேந்திரன் காலத்திற்குப் பின்னரே இப்பெயரைப் பெற்றிருந்திருக்கலாம் எனத் தோன்றுகிறது. மேலும், இராசராசன், இராசேந்திரன் காலத்தில் இப்பெயர் பெற்றவர் களாக இருந்திருப்பின், இச்சோழர்கள் கல்வெட்டுகளில் ஏதேனும் குறிப்புகள் இருந்திருக்க வாய்ப்புண்டு. பாண்டியர்கள் காலத்திலே தான் இவர்கள் ஆரியச் சக்கரவர்த்திகள் என்னும் பெயரைப் பூணத் தொடங்கினர் என்பதை நோக்க, பாண்டியத் தளபதியாகிய ஆரியச் சக்கரவர்த்திக்கும், யாழ்ப்பாண அரச மரபினர்க்குரிய பெயருக்கும் உரிய தொடர்பினை மேலும் ஆழமாக நோக்க புதிய செய்திகள் கிடைக்கக் கூடும். இவண் க.த.திருநாவுக்கரசு அவர்களின் எண்ணமும் சுட்டத்தக்கது.[22]

இவ்வரசு பற்றி எழுதும்போது க. த. திருநாவுக்கரசு, 'இவ்வரசு பன்னிரண்டாம் நூற்றாண்டு இடைப்பகுதி முதல் தனியரசாக விளங்கலாயிற்று. இவ்வரச குடும்பத்தினர் தமிழகத்துப் பாண்டிய சோழ அரசர் குடிகளின் பெண்களை மணந்து தங்கள் வாழ்க்கையை வலிவும், பொலிவும் உடையதாக்கிக் கொண்டனர். நான்கைந்து தலைமுறை களுக்குள் இவர்கள் தமிழர்களாகவே மாறிவிட்டனர். இவர்கள் பரராச சேகரன் என்ற பட்டத்தையும், செகராச சேகரன் என்னும் பட்டத்தையும் அடுத்தடுத்துச் சூட்டிக் கொண்டனர்' என்கின்றார்.[23] நாயக்கர் காலத்திலும் இவர்கள் உறவு தொடர்ந்திருக்கின்றது. போர்த்துக்கீசியர் திருக்கோண மலையில் கோட்டை அமைத்து, பிறநாட்டார் ஆட்சியைத் தொடங்கி வைத்தனர். இதனை, 'சங்கிலியன் என்னும் அரசன் 17ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் யாழ்ப்பாணத்தை ஆண்டு வந்தான். அவனுடைய ஆட்சிக் காலத்தில்

22. சோழரின் மேலாதிக்கம் இலங்கையில் முறியடிக்கப்பட்ட பிறகு, இலங்கையின் வடபகுதியில் தனியரசு ஒன்று தோன்றியது. அதனை யாழ்ப்பாணத் தமிழரசு எனச் சுட்டுவது மரபு —இலங்கையில் தமிழ்ப் பண்பாடு-ப-97
23. ,, ,, ப-103

(கி. பி.1619இல்) போர்த்துக்கீசியர் யாழ்ப்பாண அரசைக் கைப்பற்றி, தமிழரின் ஆட்சியை அழித்தனர்' என்ற எண்ணம் புலப்படுத்துகிறது.[24] மேலும் கி.பி. 17ஆம் நூற்றாண்டில் இலங்கைக்கு டச்சுக்காரர்கள் வந்து சேர்ந்தனர். தொடர்ந்து ஆங்கிலேயரின் ஆளுகைக்கு உட்பட்ட நிலையில் யாழ்ப்பாண மும் தன் தனித் தன்மையான அரசு நிலை இழந்தது. அடிமைப் பட்டது. 1948ஆம் ஆண்டு முதல் சுதந்திர இலங்கையின் ஒரு பகுதியாகத் தமிழகத்தின் நிலையில் காணப்படுகின்றதை வரலாறு காட்டுகிறது.

**மட்டக்களப்பு**—'இலங்கையின் வடக்கு மாவட்டத்திலும், கிழக்குமாவட்டத்திலும் வாழும் தமிழர்கள் பன்னெடுங்கால மாக அங்கு வாழ்ந்து வரும் இலங்கையின் பழம்பெரும் தமிழ்க் குடிகளாவர். இவர்களுடைய தொகை இருபது லட்சத்திற்கு மேற்பட்டதாகும். இலங்கையில் உள்ள ஒன்பது மாவட்டங் களுள், இந்த இரு மாவட்டங்களையும் ஒன்றாகச் சேர்த்து ஈழத் தமிழகம் என்பர். இவ்வீழத் தமிழகம் இலங்கையின் மொத்தப் பரப்பில் மூன்றில் ஒருபகுதியாகும். இப்பகுதியில் வாழும் தமிழர்களின் முன்னோர் சோழப் பேரரசு இலங்கைத் தீவைத் தனது ஆட்சிக்குட்படுத்திய பொழுது, சிலாபம் முதல் பூநகரி வரையில் உள்ள மேற்குக் கரையோரப் பகுதிகளில் நெருங்கி வாழ்ந்தனர். யாழ்ப்பாணம் தொடக்கம் பாணமை வரையுள்ள கிழக்குக் கரையோரப் பகுதிகளிலும் பொலநறு வைக்கு வடக்கேயுள்ள நிலப்பகுதிகளிலும் வாழ்ந்தனர்' என்பர்.[25] இலங்கையின் கிழக்குப் பகுதியில் அமைகின்றது மட்டக்களப்பு மாவட்டம்.

மட்டக்களப்பு மாவட்டம் பற்றி கூறும் போது 'ஈழத்து நாட்டார் பாடல்கள்' என்னும் தமது நூலில் கலாநிதி இளைய தம்பி பாலசுந்தரம், 'இம்மாவட்டத்து வரலாறு பற்றி அறிதற்குப் போதிய சான்றுகள் இல்லாமையும், இத்துறையில் வரலாற்று ஆய்வாளர் அதிக ஊக்கம் கொள்ளாமையும் இவ்வரலாற்றினை விரிவாக்குதற்குத் தடையாயுள்ளன,

24. இலங்கையில் தமிழ்ப்பண்பாடு. ப—164
25. ,, —ப—131

எனக் குறிப்பிடுகின்றார் (பக்-31). யாழ்ப்பாணம் பற்றிய நூல்களின் மிகுதியைக் காணும் நாம் மட்டக்களப்புப் பற்றிய நூல்களின்மிகுதியைக் காண முடியாமையையும் இவண் சுட்டலாம். எனினும் மட்டக்களப்பு மான்மியம், தட்சிண கைலாசபுராணம், குளக்கோட்டன் கல்வெட்டு, கோயில் செப்பேடுகள் மேலும் ஆராயப்படும் போது, மட்டக்களப்பு பற்றிய மேலும் விரிவான செய்திகள் தெளிவாகலாம். இப்பகுதியின் அரசியல் வரலாறு என நோக்க தமிழ்மன்னர்கள், கண்டி மன்னர்கள், சிங்களவர், பிற நாட்டார் கீழ் இருந்த நிலை தெரிகிறது. ஈழத்து நாட்டார்ப் பாடல்கள் நூல மூலம், சில ஆட்சிக் காலங்களை நாம் உணரமுடிகிறது. 'ஈழம் பற்றிய வரலாறு சுட்டுவது போன்று, முதலில் தமிழ் மன்னர்கள் வாழ்ந்த பகுதியாகவே இதுவும் கருதப்படுகிறது. விஜயனின் ஆட்சியின் கீழ் இருந்த இப்பிரதேசம், பின்னர் சேனன் கூத்திகன் என்ற இரண்டு சேர நாட்டு வீரர்கள் ஆட்சியிலும், பின்னர் கஜபாகு மன்னன் ஆட்சியிலும் இருந்துள்ளது'[26] எனவே இலங்கை வடபகுதி மன்னர்களின் ஆட்சியில் யாழ்ப்பாண பகுதியுடன் ஒருமித்த பகுதியாகவே இதுவும் இருந்துள்ளது என்பது தெரிகிறது.

பின்னர் தமிழ் மன்னர்களின் தனி ஆட்சியின் பின் இப்பிரதேசம், உறுகுணை, சிங்கள மன்னரின் ஆட்சிப் பகுதியின் ஒரு பிரிவாக இணைக்கப்பட்டு, அவர்களின் ஆட்சிக் குட்பட்டத் தமிழ்ச் சிற்றரசர்களால் ஆளப்பட்டதாக மட்டக் களப்பு மான்மியம் கூறுகின்றது. கி. பி. 8ஆம் நூற்றாண்டு வரையும் தமிழ்ச் சிற்றரசர்களும் பிரதானிகளும் சிங்கள மன்னரின் கீழ் குறுநில மன்னர்களாக இருந்து மட்டக்களப்பை ஏழு உட்பிரிவுகளாகப் பிரித்து ஆட்சி செய்தனர். இரண்டாம் மகிந்தன் கி. பி. 8ஆம் நூற்றாண்டில் அனுராதபுரியைத் தலை நகராகக் கொண்ட இராசரட்டை இராச்சியத்துடன் மட்டக்களப்பு மாவட்டத்தை இணைத்தான். சோழ சாம்ராச் சியத்தின் ஒரு மாகாணமாக ஈழம் இணைக்கப் பட்டபோது மட்டக்களப்பு மாவட்டமும் (கி. பி. 1017-1070) சோழ நிர்வாகத்தின் கீழ்க் கொண்டு வரப்பட்டது. சோழர் ஆட்சி தளர்ந்ததும், இப்பிரதேசம் முதலாம் விஜயபாகு மன்னனின் ஆட்சியின் கீழ் உட்படுத்தப்பட்டது.

26. ஈழத்து நாட்டார்ப் பாடல்கள்—ப-32

கி. பி. 1215 இல் பொலநறுவையில் நடைபெற்ற கலிங்க மாகனின் படையெடுப்பின் பின்பு, மட்டக்களப்பு மாவட்டமும் மாகனின் ஆட்சிப் பிரதேசங்களுடன் இணைக்கப்பட்டது. அவனது ஆட்சியினை அடுத்து, இப்பிரதேசம் கண்டிச் சிங்கள மன்னரின் ஆட்சியின் கீழ்க் கொண்டு வரப்பட்டது.

போர்த்துக்கீசியர் கரையோர மாகாணங்களைக் கைப்பற்றியபோது மட்டக்களப்பையும் தமது ஆட்சியின் கீழ் அடக்கினர். கண்டி மன்னன் இராசசிங்கனின் காலத்தில் (கி. பி. 1635-1687) இப்பிரதேசம் ஒல்லாந்தரின் நேரடி ஆட்சியில் அடக்கப்பட்டது. டச்சுக்காரருக்குப்பின் ஆங்கிலேயர் இம்மாவட்டத்தைக் கைப்பற்றி அதனையும் ஈழத்தின் ஏனைய மாகாணங்களுடன் இணைத்துப் பொது நிர்வாகத்தின் கீழ் கொணர்ந்தனர். ஆங்கிலேய ஆட்சியின் போதே மட்டக் களப்பு மாவட்டம் பிற மாகாணங்களுடன் தொடர்பு கொண்டது என்பதும் குறிப்பிடத்தக்கது.'[27]

**சமயம்**—தமிழருக்கு முன்பு தமிழகத்தில் வாழ்ந்திருந்த ஆதி குடிகளின் கடவுட் கொள்கைகளும், தமிழ் மக்களின் சமயக் கொள்கைகளும் ஆரியரின் சமயக் கொள்கைகளும் ஒன்று கலந்து சங்க காலத்து மக்கள் சமுதாயத்தில் இடம் பெற்றிருந்தன. வீர வணக்கம், சிவலிங்க வழிபாடு, சிறுதெய்வ வழிபாடு போன்றன சுட்டத்தக்கன. கடவுட் தொடர்பான புராணக் கதைகள் பலவும் காணப்பட்டன.[28]

சங்கம் கலைந்து களப்பிரர் ஆட்சியின் போதும், பிறகும் மூன்று சமயங்கள் தமிழகத்தில் வளர்ந்து வந்தன. வைதிக சமயம், சமணம், பௌத்தம் என்பன அவை. முதலில் ஓங்கி காணப்பட்ட சமணம்—பௌத்தம் இரண்டும், சைவ, வைணவ எழுச்சியில் அடங்கி விட்டன. பௌத்த மதம் இன்று இல்லை என்ற அளவிலாயிற்று.[29] நாயக்கர்கள் காலத்தில் சைவ வைணவப் பூசல்கள் காணப்படவில்லை. நாயக்க மன்னர்கள் கிறித்தவர்கட்கும், முஸ்லீம்களுக்கும் பல நிவந்தங்களை

27. ஈழத்து நாட்டார் பாடல்கள்—ப-32-35.
28. தமிழக வரலாறு பண்பாடும் மக்களும்-ப-167-168.
29. „ „ „ ப—216.

வழங்கினர்[30] எனத் தெரிகிறது. பதினெட்டாம் நூற்றாண்டில் கிறித்தவ, இஸ்லாம் சமயங்கள் ஏற்றம் கண்டதாலும் இந்து மன்னர்கள் ஆற்றல் இழந்தமையாலும் இந்துக் கோயில்கள் பாதுகாப்பற்று பேணுவார் அற்றுக் கிடந்தன[31] என்பதும் தெரிகிறது. கிறித்தவ சமயம் வளர்ச்சியடைந்துவர, 19ஆம் நூற்றாண்டில் இந்து சமய மறுமலர்ச்சிக்குப் பாடு பட்டவர்களாக ராஜாராம் மோகன் ராய், தேவேந்திர நாத் தாகூர், கேசவ சந்திரசென், தயானந்த சரசுவதி, இராம கிருஷ்ண பரமஹம்சர் போன்றோர் காணப்படுகின்றனர். இவற்றை உலக நிலையில் இயம்பியவர் விவேகானந்தர். தமிழகத்தில் இராமலிங்கரின் ஒளி வழிபாடும் மக்களிடையே பரவிற்று. 20ஆம் நூற்றாண்டில் சுயமரியாதை இயக்கத்தையும் அதே சமயத்தில் சமய எழுச்சியையும் இணையாகக் காண் கின்றோம்.

இலங்கையின் சமயம் பற்றிய தனது கருத்துகளைச் சொல்லும் போது, தமிழகத்திலிருந்தும் வேறுபட்டுள்ளதை கே.கே. பிள்ளை எடுத்துக் காட்டுகின்றார்.[32] ஈழத்தில் முதலில்

---

30. ,, ,, ,, ப—432.

31. ,, ப—440-441

32. In South India, Hinduism which emerged as a result of the fusion of the Aryan and the Dravidian beliefs came into vogue, as early as the Sangam age. From about the 3rd century B. C, Buddlist and Jain influences penetrated into the land. Several Tamils of South India embraced Buddhism or Jainism, while the bulk of the people maintained their faith in Hinduism. During the 7th and 8th centuries A.D, there was acute rivalry between these religions in South India. It may be said, that ultimately by the 9th Century A. D, Hinduism triumphed in a large measure. In Sri Lanka, as the other hand, the bulk of the people were converted to Buddhism beginning from tha 3rd century B.C. The island excepting the northern parf of it adopted Buddhism—South India and Sri Lanke —Pa-152—153.

இயக்கர்களின் ஆட்சி நடந்தது என்பதும் இராவணன் இயக்கர்களின் அரசனாகச் சிறப்புற்று விளங்கினான் என்பதும் இலங்கை வரலாறு தரும் செய்தி. (மாறுபட்ட கருத்தும் உண்டு) இராவணன் சிறந்த சிவபக்தனாகக் காட்டப்படும் நிலையிலும், திருக்கோணேச்சுரம், திருக்கேதீச்சுரம் போன்ற சிவன் கோயில்களின் பழமையையுணர்ந்து கொள்ளும் நிலையிலும் முதலில், சிவவழிபாடு இவண் பரந்து காணப்பட்டிருக்க வேண்டும் என்பதையுணரக் கூடுகின்றது.[33] மேலும் நாகர் வாழ்ந்த வரலாற்றுக் குறிப்பு நாகவழிபாடும் இவண் இருந்திருக்க வேண்டும் என்ற எண்ணத்தைத் தருகிறது. தமிழர்களின் வணக்கத்திற்குரியதாக இருந்த வருண வழிபாட்டையுடையவர்களாகச் சிங்களவர்கள் இருந்துள்ளார்கள் என்பதையும் அறிஞர் சுட்டுகின்றனர்.[34]

கி. மு. 3ஆம் நூற்றாண்டில் அசோகர், இலங்கைக்கு அனுப்பிய புத்தமதத் தூதர்கள், இலங்கையில் புத்த மதத்தைப் பரப்பச் செய்தனர், அன்று தொடங்கிய புத்த மதம் இன்று வரையிலும், மிகச் செழிப்பாக வளர்ந்து வந்துள்ளதை வரலாறு காட்டுகிறது. சிங்களவர்கள் புத்தமதச் சார்புடையவர்களாக இருப்பினும் சைவ மதத்தை வெறுத்தவர்களாகக் காட்டப்படவில்லை. தமிழகமக்கள் குடியேற்றம் காலந்தோறும் நடைபெற்று வந்தமை சைவ சமயத்தை வளர்ச்சியுறச் செய்ய ஓர் அடிப்படையாக இருந்தது. புத்தமதம் கி. மு. 3ஆம் நூற்றாண்டில் பரவத் தொடங்கின பின்னர், கி. பி 2ஆம் நூற்றாண்டில் தமிழகத்தில் கண்ணகி வழிபாட்டின் தோற்றம் இலங்கையில் கண்ணகி வழிபாடு வேரூன்றக் காரணமாக இருந்துள்ளது. இன்று, தமிழகத்தில் இல்லாத இவ்விரு (புத்தர் கண்ணகி) வழிபாடும், இலங்கையில் சிறப்பாகப் போற்றப்பட்டு வருகின்றன. இவ்வாறு இந்துமதம், பௌத்த மதம் வளர்ச்சி, பின்னர் பிறநாட்டார் வருகையில்,

33. The early Temples in Jaffna were those dedicated to Siva and Muruga. As seen earlier the Kataragama temple of Murugan is of great antiquity and fame ,, P—155.
34. The Sinhalese worshipped Varunan, tha Hindu deity of old— ,, Pa—153.

முகம்மதிய மதமும், கிறித்தவ மதமும் இணைகின்றன. எனினும் யாழ்ப்பாணம், மட்டக்களப்புப் பகுதிகளைப் பொறுத்தவரையில், இந்து மதம் சார்ந்த சிவவழிபாடு, கண்ணகி வழிபாடு, முருக வழிபாடு, பிள்ளையார் வழிபாடே மிகச்சிறப்புடன் காணப்படுகின்றன.

இவ்வாறு பலவிதப்பட்ட அரசியல் சூழலிலும், சமயச் சார்பிலும் வாழ்ந்த மக்களாக இரண்டு பகுதி மக்களும் காணப்படுகின்றனர். இந்நிலையில் தங்கள் அரசியல் சமயச் சார்புக்கு ஏற்ற வகையில் அவர்களது வாழ்க்கை நிலை, பண்பாடு, பழக்க வழக்கங்கள், நம்பிக்கைகள், வாழ்வியல் முறைகள் போன்றனவும் அமைந்து விடுகின்ற நிலையை வரலாறு நமக்குக் காட்டுகின்றது. பொதுவாக இலங்கை முழுவதும் பல சூழல்களில் ஒத்துக்காணப் பட்டாலும், யாழ்ப்பாணம், மட்டக்களப்பு பகுதிகளின் நில அமைப்பு, அங்கு வாழ்ந்த பெரும்பான்மை தமிழ் மக்களின் வாழ்க்கை நிலை, அவர்கள் பின்பற்றிய சமயம், அரசியல் மாற்றம் போன்றன காரணமாக இப்பகுதிகள் இலங்கையின் பிற பகுதிகளிலிருந்து மாறுபட்டு நிற்பதை வரலாறு மூலம் நாம் உணரக்கூடுகிறது.

# இயல் 2
# தமிழகம் இலங்கை பெயராய்வு

தமிழகம், இலங்கை இரண்டு நாடுகளின் நிலஅமைப்பு, அரசியல், சமயம்,மக்கள் வாழ்வியல் இவற்றைப் பற்றியதொரு சுருக்கமான எண்ணத்தை முன் இயலில் கண்டோம். இவையிரண்டின் தொடர்பினை, பல்வேறு சூழல்களும் எவ்வாறு காரணமாக அமைந்து வலுப்படுத்தியுள்ளன என்பது இவண் தெளிவுபெற்றது. இத்தகைய தொடர்புமிக்க இரு நாடுகளின் ஊர்ப்பெயர்களைப் பற்றி ஆய்ந்து அவை தரும் எண்ணங்களைத் தெரிந்து கொள்வதற்கு முன்பாக, தமிழகம் இலங்கை இரண்டு பெயர்களின் காரணம், அவற்றின் வேறுபட்ட பிறபெயர்கள் தரும் சிந்தனைகள் இவற்றையும், தெரிந்து கொள்வது நலம் என்ற நிலையில் இவ்வியல், இப் பெயர்களை ஆராய்கிறது.

தமிழகம் பண்டு முதல் தமிழர்கள் வாழ்ந்து வருமொரு நிலம் என்ற நிலையில், பின்னர் ஆங்கிலேயர் ஆட்சியில் உருவாக்கப் பெற்ற சென்னை இராஜ்யம் என்பது தவிர, பிறபெயர்கள் பெறவில்லை. ஆயின் இலங்கை, தமிழர்களுடன், சிங்களவரும், பிற பல இனத்தாரும் காலம்காலமாகக் குடியேறியும், வாணிபத் தொடர்புமிகுந்தும் காணப்பட்டமை காரணமாகப் பல பெயர்களைப் பெற்ற நிலையை வரலாறு காட்டுகிறது. இப்பெயர்களை ஆராயும்போது, இலங்கையின் முதல்பெயர்கள், சில வரலாற்று விளக்கங்களைத் தருவதற்கும் துணைபுரிகின்றன.

## 1. தமிழகம்

'வட வேங்கடம் தென் குமரி ஆயிடைத்
தமிழ் கூறு நல்லுலகம்' என, தொல்காப்பியப் பாயிரம் வடவேங்கடத்தின் தென் பகுதி அனைத்தும்தமிழ் கூறு நல்லுலக

மாகத் திகழ்ந்தமையினை இயம்புகின்றது. ஆயின், இந்தியப் பகுதி முழுமையும் தமிழ் வழங்கிற்று என்பதும், அப்பகுதி நாவலந்தேயம் என வழங்கப்பட்டது என்பதும் ஞா. தேவ நேயன் கருத்து.[1] பல சான்றுகளையும் அடிப்படையாகக் கொண்டு, நாவலந் தண்பொழில் தமிழகத்தை மட்டும் குறிக் காது, இந்திய நிலப்பரப்பு முழுவதையும் குறித்திருக்கலாம் என்ற கருத்தை மிகத் தெளிவாக, தமிழ்நாடு - தொல் பழங் காலம் என்ற நூல் தருகிறது. நாவலந் தண்பொழில் என்னும் சொல் வழக்கு, இந்திய நிலப்பரப்பு முழுவதையும் உணர்த் தியதோ என்று எண்ணும்படி அமைந்த பாடற்பகுதிகள் உண்டு. சம்புத்தீவு என்னும் ஆட்சியில், நாவலந் தண்பொழிலின் ஒரு பகுதியாகத் தமிழகம் விளங்கியதாகக் கொள்ளவும் இடமுண்டு. இப்பெயர் முதன் முதலில், வழங்கப் பெற்ற காலத்தில் நாவல் மரங்கள் மிகுதியாக இருந்திருக்க வேண்டும். காவிரிப் பூம்பட்டினத்தைச் சம்பாபதி என்று குறிப்பிட்டதும் அங்கு நாவல்மரம் மிகுதியாக இருந்தமையை நோக்கியேயாகும். சம்பு என்பது நாவல் மரத்தைக் குறிக்கும் வடசொல். இப்பெயர்கள் இயற்கை அமைப்பின் அடிப்படையில் ஏற்பட்டவை எனலாம். சிலப்பதிகாரக் காலத்திலும் இப்பெயர் வழக்குத் தொடர்ந்தது. மணிமேகலை இவ்வழக்குடன், நாவலந்தீவு, நாவல் ஓங்கிய மாபெருந்தீவு, நாவலம் பெயரோடு பெரும் தீவம் என்னும் வழக்குகளையும் ஆள்கின்றது. சம்புத் தீவின் ஒரு பகுதியாகத் தமிழகம் விளங்கியது என்றும் அது கூறுகின்றது. இமிழ் கடல் வரைப்பில் தமிழகம், இமிழ் கடல் வேலியைத் தமிழ் நாடாக்கிய, என்று சிலப்பதிகாரம் குறிப்பிடும்போது அப்பொருளே தோன்றுகிறது. தீவு, இமிழ் கடல்வரைப்பு ஆகியவை நாற்புறமும் நீரால் சூழப்பட்டிருந்த

1. ஒரு காலத்தில் முழுகிப் போன தமிழ் நாடாகிய பழம் பாண்டி நாடும் நாவலந் தீவு என்னும் இந்தியாதேசமும், தமிழகமாய் இருந்தன. பழம் பாண்டிய நாடு மூழ்கிய பின், விந்திய மலைக்கு வடக்கில் உள்ள நிலப்பகுதி பிரா கிருதம் என்னும் வடதிராவிட நாடாகி, ஆரியர் வந்தபின், ஆரியாவர்த்தம் என்னும் ஆரிய நாடாக மாறிற்று— தமிழர் வரலாறு - ப - 347.

பெருநிலப்பரப்பை உணர்த்துவன என்பது தெளிவு. சங்க காலத்தில் தமிழகம் தீவாக விளங்கவில்லை. ஆரியர் இந்தியாவில் நுழைந்த காலத்தில்கூட தீவாக விளங்காமல் முந்நீர் நிலமாகவே விளங்கியது. ஏறத்தாழ இரண்டு லட்சம் ஆண்டுகட்கு முற்பட்ட காலப்பகுதியில் நன்னீர்க் கடல்கள் இப்போதுள்ள சிந்து-கங்கை ஆற்றுப்பகுதிகளில்ஒன்றைஒன்றுத் தொட்டுக் கொண்டு அரபிக்கடலையும் வங்காளக் குடாக் கடலையும் தொடுவது போலக் கிடந்தன. இதனால் நேர்ந்த நில அமைப்பினை அக்கால மக்கள் (தமிழர்) தீவு என்று குறிப்பிட்டனர் போலும். இதனையே மரபு வழக்காகச் சிலப்பதிகாரமும் மணிமேகலையும் தீவு என்று குறிப்பிடுகிறது என்று கொள்ளலாம். எப்படியாயினும் தமிழ் நாட்டிற்கு வழங்கிய மேற்கண்ட பெயர்கள் இயற்கை அமைப்பை ஒட்டி அமைந்தவையே என்பது தெளிவு என்று இயம்புகின்ற நிலையில் இப்பெயர் பற்றிய விளக்கம் கிடைக்கிறது.[2]

இக்கருத்துகள், நாவலந் தீவு அல்லது நாவலந் தண்பொழில் என்ற பெயர்கள் இந்தியா முழுவதற்குமுரிய பெயராக ஒரு காலத்தில் இருந்த உண்மையை நம் முன் கொணர்கின்றன. இப்பொழிலின் ஒரு பகுதி பின்னர் தமிழ் மொழி வழங்கிய மாநிலம் என்ற நிலையில், தமிழ் சார்ந்த பெயரைப் பெற்றது என்ற உண்மையையும் நாம் புரிந்து கொள்ளுதல் இயலுகிறது. மேலும் நாவலந்தீவு என இந்தியப்பகுதி அழைக்கப்பட்டு இருந்த காலத்திலேயே தமிழ் சார்ந்த பெயரைப் பெற்றிருந்தமையினையும் இலக்கியச் சான்றுகள் தெளிவாக உரைக்கின்றன.

தமிழ் மொழி பேசும் மக்கள் வாழ்ந்து வந்த நிலப்பகுதி பண்டைக் காலத்தில் தமிழ் என்னும் சொல்லாலேயே குறிக்கப் பெற்று வந்தது. (அகம் 227: 14, புறம் 19:2; 35:3;51:5) பின் தமிழகம் (புறம் 168 : 18, பதிற்—2:5, சிலப் 3: 37), தமிழ்நாடு (சிலப். 23. கட்—15, 25 : 165, 29 : 1 : 8) தமிழ் நாட்டகம் (பரி. திரட் 8:1) தமிழ் நன்னாடு (சிலப்—10 : 58, 25 : 171) என்னும் சொற்கள் அந்த நிலப்பகுதியையுணர்த்தலாயின.

2. தமிழ் நாடு தொல்பழங்காலம்—பக்—29-31.

இச்சொற்களை ஆராயும் போது[3] இவை மொழியின் அடிப்படையில் தமிழ்நாடு இயல்பாகப் பெற்ற பெயர்கள் என்பது தெரிகிறது. தமிழ்கூறு நல்லுலகம் என்ற தொடரும் இக்கருத்துக்கு அரணாகிறது. தொல்காப்பியம் சுட்டும் 'செந்தமிழ் சார்ந்த பன்னிரு நிலத்தினும்' என்ற எண்ணமும் தமிழ் சார்ந்த நிலம் என்ற சிந்தனையையே தருகிறது. இடைக் காலம் வரையிலும் இவ்வாறு சுட்டப்பட்ட நிலைமையில் சிறியதொரு மாற்றத்தைப் பின்னர் காண்கிறோம். பிற நாட்டார் வரவும், சிறப்பான அரசியலின்மையும், 'தமிழகம்' என்ற பெயரின் செல்வாக்கினுக்குச் சிறிதுமாற்றத்தை ஏற்படுத்துகிறது. ஆங்கிலேயர் ஆட்சி இது சென்னை இராஜ்யம் (Madras Presidency) என்ற பெயர் பெறக் காரண மாக அமைகிறது. இது குறித்து,

'நாடு விடுதலைக்கு முன்னர் ஆங்கிலேயர் ஆட்சியில் தமிழ்நாடு ஆந்திரம் அகண்ட கன்னடம் ஐக்கியக்கேரளம் ஆகிய மாகாணங்கள் சென்னை ராஜதானி என்று அழைக்கப்

---

3. **தமிழகப்** படுத்த இமிழிசை முரசின்—அகம்—227:14.
இமிழ் கடல் வளைஇய வீண்டகன் கிடக்கைத்
**தமிழ்** தலை மயங்கிய தலையாலங்கானம்- புறம்-19:1-2
மண்டினி கிடக்கை **தண்டமிழ்க்** கிழவர்
முரசு முழங்கு தானை மூவருள்ளும்—புறம்-35:3
**தண்டமிழ்** பொதுவெனப் பொறாஅன்—புறம்-51:5
வையக வரைப்பிற் **றமிழகங்** கேட்பப்—புறம்-168:18
இமிழ்கடல் வரைப்பிற் **றமிழகமறியத்**
**தமிழ்** முழுதறிந்த தன்மையனாகி —சிலப்-3:37-38
இமிழ்கடல் வேலித் **தமிழகம்** விளங்க—பதி.பதி:2:5
**தென்றமிழ் நாடொருங்கு** காண—சிலப்-23: கட்டு-15.
இமிழ்கடல் வேலியைத் **தமிழ் நாடாக்கிய** ,, — 25:165.
**தென்றமிழ் நாடாளும்** வேந்தர் செருவேட்டுப்
புகன்றெழுந்து — ,, — 29:1-8.
தண்டமிழ் வேலித் **தமிழ் நாட்டக**மெல்லாம் நின்று
நிலை இப்புகழ் பூத்தலல்லது— பரி-திரட்டு-8.
**தென்றமிழ் நன்னாட்டுத்** தீதுதீர் மதுரை—சிலப்-10:58.
வடதிசை மருங்கின் மன்னர்க் கெல்லாம்
**தென்றமிழ் நன்னாட்டுச்** செழுலிற்— ,, —25:170-71

பட்டு வந்தது. ...15-8-47 வரை சென்னை ஆளுநரின் அதிகாரத்திற்கு உட்பட்டு இருந்தது'[4] என்னும் எண்ணம் காணப்படுகிறது. பின்னர் திராவிடநாடு கோரிக்கை எழுந்து, அதுவும் வெற்றி பெற இயலவில்லை. இக்காலத்தில், சென்னை மாநிலம் தமிழ்நாடு என்று அழைக்கப்பட வேண்டும் என்ற கோரிக்கையும் எழுந்தது. பல போராட்டங்களுக்குப் பின்னர் 1968 இல் தமிழ்நாடு என்ற பெயர் திரும்பவும் தமிழகத் திற்கு சூட்டப்பெற்றது. இந்தப் போராட்டம் பற்றிய விளக்கத்தைத் தமிழ்நாடு பெயர்மாற்ற வரலாறு என்னும் நூல்சிறப்புற எடுத்துக் காட்டுகிறது.

## 2. இலங்கை

இலங்கையின் பிற பெயர்களாகப் பல அமைகின்றன. இரத்தின துவீபம், இலங்கை, ஈழம், ஒபீர், ஒளிநாடு, சலாபதீபம், சிங்களதீவம், சிலோன், சிவபூமி, செரன் தீப், சைலத்து, தாப்ரபனே, திருநாடு, நச்சதீவம், நாகதீவம், நாகநாடு, நாகபூமி, நித்தில தீவம், பாலிஸிமுண்டு, மதுதுவீபம், மாணிக்கத்தீவம், மும்முடி சோழ மண்டலம், வாதுவீபம், ஸ்ரீலங்கா எனப் பல பெயர்கள். இவையனைத்தையும் ஆராய் வதற்குப் போதுமான சான்றுகள் இல்லை. எனினும் ஒரு சில குறிப்புகள், இலங்கைக்குரிய முதன்மை பெயர்கள் பண்டு தொட்டே வழங்கி வருகின்ற நிலை, காலந்தோறும் வந்து இணைந்துள்ள பெயர்கள், இவை உணர்த்தும் வரலாற்று உண்மைகள் போன்றவற்றைத் தெளிவுபடுத்திக் கொள்ள உதவு கின்றன. இப்பெயர்களைக் கால வரிசை தெளிவுபடாத காரணத்தால், அகரவரிசையில் இவண் காணலாம்.

**இரத்தின துவீபம்**

சீனர் தேவையான இரத்தினக் கற்களைப் பெற்றமையால் இரத்தின துவீபம் என்றழைத்தனர்.[5]

ஈழத்தின் நிலத்தினுள் இரத்தினக் கற்கள் செறிந்து கிடக் கின்றன. ஆகவே மக்கள் நிலத்தை அகழ்ந்து தேவைக்கதிக

---

4. தமிழ் நாடு பெயர் மாற்ற வரலாறு — ப-24.
5. விபுலானந்த அடிகள்—ப—3.

மான இரத்தினக் கற்களை எடுத்தார்கள். தமது தேவை போக எஞ்சியவற்றைப் பிறநாட்டவர்கட்குக் கொடுத்து வாணிபம் செய்தார்கள். இவ்வாறு சீனர் தமக்கு வேண்டிய இரத்தினக் கற்களைப் பெற்றமையால் இரத்தின துவீபம் எனப் பெயரிட்டனர்[6] என சீனர்கள் இட்ட பெயராகவே இதனைப் பிறரும் சுட்டுகின்றனர். இரத்தினம் இலங்கையில் கிடைப்பது பற்றிய பிற கருத்துகளும் காணப்படுகின்றன. எனவே நிலத்தில் கிடைக்கும் பொருள் கொண்டு பெயரிடும் வழக்குண்மை காரணமாக இப்பெயர் உண்மையையும் உணரலாம். மேலும் கண்டியின் அருகே இரத்தினபுரி என்ற ஊர்ப்பெயரையும் இன்று காண்கின்றோம். எனினும் இன்று இரத்தின துவீபம் என்ற பெயர் செல்வாக்குடன் இல்லை. மக்கள் வழக்கில் கொள்ளாத நிலையை இதற்குக் காரணமாகச் சுட்டலாம்.

**இலங்கை**

இலங்கை என்ற பெயர் தொன்மையுடையது. எனினும் இப்பெயர் சூட்டப்பட்ட காலம் காரணம் இரண்டும் புலனாக வில்லை.

இலங்கையின் பெயராகத் 'தாப்ரபனே' என்பதைப் பிறநாட்டார்க் குறிப்புகளும், வடநாட்டார்க் குறிப்புகளும் எடுத்தியம்புகின்றன. தமிழரிடம் 'தாப்ரபனே' பயிற்சி பெற்றிருந்ததாகத் தெரியவில்லை. ஆயின் 'இலங்கை' என்ற பெயரைத் தமிழர் சுட்டினர் என்பதைப் பண்டைத் தமிழிலக்கியங்கள் காட்டுகின்றன. மேலும் இலங்கை, ஈழம் என்ற இரண்டு பெயர்களும் தமிழிலக்கியத்தில் அமைகின்றன. இவற்றை நோக்க ஈழம் இலங்கையின் வடபகுதியினைக் குறித்தும், இலங்கை, தீவு முழுவதையும் குறித்தும் வழங்கப் பட்டு இருக்கும் என்ற எண்ணம் தோன்றுகிறது. மேலும், மணிமேகலை சுட்டும், மணிபல்லவம், இரத்தினதீபம் அல்லது இலங்காதீபம் பற்றிய எண்ணங்கள் இலங்கையின் தென்பகுதியின் பெயர் இலங்கை தொடர்பானது என்ற எண்ணத்தைக் காட்டுதலும் இவண் சுட்டுதலுக்குரியது. இந்நிலையில் இலங்கை தொடர்பான செய்திகள், எந்தெந்த உண்மைகளை வெளிக்கொணர்கின்றன எனக் காணலாம்.

6. ஈழமும் தமிழரும்—ப- 10.

இலங்கை என்ற இந்நாட்டுப் பெயர் தமிழர்களின் பண்டைய இலக்கியங்களில் மிகுதியாகக் காண்பதற்கில்லை. எனினும் ஒப்புமை காட்டும் விதத்தில் ஒரே ஒரு குறிப்பு காணப்படுகின்றது.

இன்று திண்டிவனத்திற்குப் பக்கத்திலிருக்கும் கீழ் மாவிலங்கை, மேல்மாவிலங்கை என்ற சிற்றூர்கள் பற்றிய எண்ணத்தைச் சிறுபாணாற்றுப்படை தருகிறது. புறநானூற்றுப் பாடலும் மாவிலங்கை பற்றிய கருத்தையுணர்த்து கின்றது (379). இதனைச் சிறுபாணாற்றுப்படை ஆசிரியர்,

'நறுவீ நாகமும் அகிலும் ஆரமும்
துறையாடு மகளிர்க்குத் தோட்புணையாகிய
பொருபுனறரூஉம் போக்கரு மரபிற்
றொன்மா விலங்கைக் கருவொடு பெயரிய
நன்மா விலங்கை மன்னருள்ளும்
மறுவின்றி விளங்கிய வடுவில் வாய்வாள்
உறுபுலி துப்பின் ஓவியர் பெருமகன்' 116—122

என்று காட்டுகின்றார்.

இதற்கு உரை எழுதும் உ.வே.சா., 'பழையதாகிய பெருமையினையுடைய இலங்கையினது பெயரைப் பெற்ற நன்றாகிய பெருமையையுடைய இலங்கை' என்கின்றார். எனவே அக்காலத்திலேயே இலங்கைத் தொன்மையுடன் பெருமையும் உடையதாகத் தமிழர்களால் கருதப்பட்டு வந்துள்ளது என்பது தெரிகிறது. இந்நிலையில் இவ்வாசிரியரின் இப்பாடலடிகளினின்றும், இலங்கைப் பெயரினைத் தொடர்ந்தே தமிழகத்தில் இலங்கை என்று பெயரிடும் வழக்குத் தொடங்கி யிருக்கலாமோ எனவும் தோன்றுகிறது.

ஏனெனில் இலங்கை என்பது எந்த அடிப்படையில் பெயர் பெற்றது என்பதை நோக்க, பல கருத்துகள் சுட்டப்படுகின்றன.

கடலில் இலங்கிக் கொண்டும் ஒளிர்ந்து கொண்டும் இருந்தமையினால் இலங்கை என்ற பெயரைப் பெற்றது.

பொலிதல் இலங்குதல் ஒளிர்தல் துலங்குதல் என்னும் சொற்களின் கருத்துகள் அனைத்தும் ஒன்றேயாகும்.

இலங்கை என்னும் சொல் இலட்சம் என்னும் சொல்லின் மரூஉ எனக் கொள்வாருமுண்டு. ஈழத்தினுக்குப் பக்கத்தில் இருந்த இலட்சம் தீவுகள் கடலில் மறைய, ஈழத்தீவுகள் நிலைத்திருந்ததால் இலங்கை என்றாகியிருக்க வேண்டும்.

ஈழத்தை ஆரியர்கள் பிற்காலத்தில் இலங்கை என்றார்கள்.

இலங்கை என்னும் வடசொல்லிற்குத் தீவு என்பது பொருள். ஸ்ரீலங்கா என்னும் இக்காலத்திய பெயருக்குத் திருமிகு தீவு என்பது பொருள்.

போன்ற எண்ணங்களைக் காணும்போது[7] இலங்கை இலங்குதல் அடியாகப் பிறந்த பெயர் என்ற தமிழ்ச்சார்பு கருத்தும், தீவு என்ற வடசொல்லினடியாகப் பிறந்த பெயர் என்ற வடமொழிச் சார்பு கருத்தும் காணப்படுகின்றன. இவற்றுள் எந்த சொல்லாக இருக்க ஊர்ப் பெயராய்வு உறுதுணையாகின்றது என்பதை இவண் நோக்கலாம்.

'அசோகனுடைய (கி. மு. 3ஆம் நூற்) இரண்டாவது பாறைக் கல்வெட்டுக் கட்டளையில் சோழர், பாண்டியர், சத்தியபுத்திரர், கேரள (சேர) புத்திரர் என்னும் தமிழக அரச குடிகளும், தாம்பபன்னி யென இலங்கையும் சுட்டப்பட்டுள்ளன என்ற கருத்து கி.மு. 3-ஆம் நூற்றாண்டில் தாம்பபன்னி என இலங்கை சுட்டப்பட்டுள்ளதைக் காட்டுகிறது[8] தவிர, பிறநாட்டாராலும் தாம்பபன்னி என்ற பெயரே சுட்டப்படுகின்றது. எனவே இலங்கை என்ற பெயர் வடமொழிச் சார்புடையதாகப் பிற்காலத்தில் தோன்றியிருக்குமோ என்ற எண்ணம் தோன்றுகிறது.

அடுத்து Dravidian Etymological Dictionary இலங்கையைத் திராவிட சொல்லாகக் கருத இடம் தரவில்லை.[9] எனினும் இலங்கு என்ற சொல்லினின்றும் தோன்றியிருக்க வாய்ப்புண்டு.

7. ஈழமும் தமிழரும்—ப 2.

8. இலங்கையில் தமிழ்ப்பண்பாடு—ப—13.

9. Ta. el. lustre, splendour, light, sun, daytime. elli-sun, day time; ilaku (ilaki) ilaiku (ilauki) to shine, glisten, glitten.
ADravidian Etymological Dictionary—No. 707.

ஆயின் இலங்குதல் - ஒளிவிடுதல் என்பதை விட, இலங்கை, தீவு என்ற நிலையில் பெயர் பெற்றிருப்பது மிகவும் பொருத்த மானதாக அமைகிறது. அப்படி எனில் இலங்கை என்ற பெயர் தீவானதின் பின்னர் பெற்ற பெயராக அமைகிறது. ஆயின் அதன் முன்னரே இப்பகுதி பெயருடையதாகத் திகழ்ந் திருக்கக்கூடும் என்ற நிலையையும் எண்ணிப்பார்க்கலாம். இங்குப் பிற பெயர்கள் எண்ணுவதற்குரியனவாகின்றன. தமிழகத்தில் இலங்கை என்ற பெயர் பெற்ற ஊரினைப்பற்றிய தமது எண்ணத்தில் மாவிலங்கையும் இலங்கை போன்று தீவு தன்மைத்து என்கின்றார் மா. இராசமாணிக்கனார் தமது பத்துப்பாட்டு ஆராய்ச்சியில்.[10] எனில் வடமொழிப் பெயரைத் தமிழக ஊர்ப்பெயராக அமைத்த நிலை புலனாகின்றது. ஆயின் சங்க இலக்கியங்களில் வடமொழிச் சொற்களைப் பெயர்களாக வைத்தமை தெரியவில்லை. (மொழி பெயர்த்து வைத்தமை தவிர) இந்நிலையில் மேலும் பல சான்றுகள் தெளிவாயின் தான் இலங்கை என்ற பெயருண்மையும் தெளிவு பெறும். இன்று வரையிலும் இப்பெயர் தன் நிலையில் குன்றாது நிற்கும் நிலையே நாம் காண்பதாக அமைகிறது. இடைக்காலத்துத் தமிழ் இலக்கியங்களிலும்,

கடல் சூழ் இலங்கைக்கயவாகு —சிலப் – உரை
பெறு கட்டுரை

இலங்கா தீவத்துச் சமனொளி என்னும் சிலம்பினை எய்தி-
மணி 28:107

சோவரணும் போர்மடியத் தொல்லிலங்கை கட்டழித்த
சேவகன்—சிலப் 17:35

தென்னிலங்கையர் வேந்தன் பொருவரை எடுத்தவன்
திருஞான- 860

பொருகடல் இலங்கை மன்னன்—திரு. நா—60:10.

என இலங்கையினைப் பொறுத்தவரை, கடல் சூழ்ந்த அதன் இயல்பும், தெற்குப் பகுதியில் இது அமைந்திருக்கும் தன்மை

10. பத்துப்பாட்டு ஆராய்ச்சி- பக் 163-169.

யுமே சுட்டப்படுகின்றன. எனினும், இலங்கை பற்றிய பொதுவான தமிழர் கருத்துகளாக, 'அண்டைநாடான இலங்கைத் தீவில், தமிழ் மக்கள் கல் தோன்றிய காலம் முதல் வாழ்ந்து வருகின்றனர். இல் என்றாலே வீடு என்று பொருள். இலங்கை என்ற சொல்லே தமிழ் மக்களின் வீடு என்னும் பொருள் குறிக்கும் தமிழ்ச்சொல் என ஆன்றோர் உரைப்பர். தமிழகத்தோடு ஒட்டியிருக்கும் நில அமைப்பும் இக்கூற்றுக்குச் சான்று பகரும்'

'குமரிப்பெரு நிலமும், இத்தீபகற்பமுமே பழந்தமிழனின் தாயகம். அவன் அரும்பியதும், மலர்ந்ததும் கனிந்ததும் இப்பகுதிகளில்தான். குமரிப்பெருநிலம் கடல் கோளால் அழிந்த பின் நமக்கெஞ்சியது இத்தென்னகமும் அதனைச் சார்ந்து கடலாற் பிரிக்கப்பட்டுத் தீவாய் நின்றதுமான இலங்கையுமே யாகும், என்பன அமைகின்றன.[11]

**ஈழம்**

ஈழம் என்ற பெயருக்கு அறிஞர் சுட்டும் காரணங்கள் பல— அவைகளாவன :— 1. பொன் காரணமாக[12], 2. கள் காரணமாக[13], 3. பொன், கள் இரண்டும்

---

11. இலங்கைத் தமிழர் உரிமைப்போர்—ப-5.
12. இலங்கையில் பேரளவிற்குப் பொன் மிகுதியாகக் கிடைத்து வந்தமையால் அதனை ஈழம் எனப் பண்டைத் தமிழ் மக்கள் வழங்கினர் என்பர் ஒரு சாரார். ஈழம் என்னும் சொல்லிற்குப் பொன் என்னும் பொருள் வழக்கில் உள்ளதாலும், பொன் மிகுதியாகக் கிடைக்கும் நாடாக அது இருப்பதனாலும் அதனை ஈழம் என்றனர் என்பது அவர்கள் தரும் விளக்கமாகும்– இலங்கையில் தமிழ்ப்பண்பாடு—ப—1.
13. மற்றொரு சாரார் ஈழம் என்னும் சொல்லிற்குக் கள் என்னும் பொருள் பொதுவாக வழங்கப்பட்டு வருகின்ற காரணத்தாலும், தென்னை மரங்கள் செழித்து வளருவதை இன்றும் நாம் இலங்கையில் காண்பதனாலும். கள்ளுக்குப் பெயர் போன நாடு என்னும் பொருளில் ஈழம் என அது பெயர் பெற்றது என்பர்—இலங்கையில் தமிழ்ப்பண்பாடு—ப-12.

காரணமாக[14], 4. இரத்தினக்கல் படுகைகள் கிடைத்தல் காரணமாக[15] 5. ஈழம் என்ற இனத்தார் வாழ்ந்து வந்தமை[16] 6. ஈழு என்ற மொழி காரணமாக[17], 7. ஏழ்பனை நாடு திரிந்து வழங்குதல் காரணமாக[18], 8. சிவ வழிபாடு இந் நாட்டில் இருந்தமை காரணமாக,[19] 9. விளைபூமி, நிறை பூமி என்பவற்றின் காரணமாக[20], 10. ஈழம் என்பதுசிங்களம் என்பதன் சிதைவு காரணமாக[21].

---

14. ஈழம் என்ற சொல்லினுக்குப்பொன்,கள் எனுமிரு பொருள் உண்டு. பொன் பொலிவுடையது. கள்ளும் பொலிவுடையது. இரண்டும் ஒளி கொண்டவை களாகும். ஈழத்திலுக்குக் கள் என்ற பொருளைக் கொள்ளுங்கால் அதன் வினையடி இழு என்பதாகும். பொன் என்னும் பொருளைக் கொள்ளுங்கால் அதன் வினையடி எழு என்பதாகும். எழு என்ற வினையடி யிலிருந்து எல் என்னும் சொல் பிறந்தது. எல் என்பது இலங்குவது, விளங்குவது, துலங்குவது, ஒளிர்வது என்ற கருத்துகள் கொண்டதாகிறது. எல்லே இலக்கம் என்று தொல்காப்பியனார் செய்த சூத்திரத்தினால் எல் என்பது இலங்குவது என்றாகிறது. ஆகவே துலங்கிக் கொண்டிருக்கும் பொருளில் திராவிடர்கள் ஈழம் என்றார்கள்—ஈழமும் தமிழரும்- பக்— 1—2.

15. இரத்தினக்கல் படுகைகளை இல்லம் என்னும் தமிழ்ப் பெயரால் அழைப்பர். இந்த இல்லம்தான் நாளடை வில் ஈழம் ஆகியிருக்கலாம் என்பர்—ஈழநாட்டு இடப் பெயர்களில் தமிழின் ஆளுமை ப—223.

16. ஈழம் என்னும் இனத்தார் வாழ்ந்து வந்தமையினால் இந்நாடு ஈழம் என்ற பெயரைப் பெற்றது. பாண்டியர் வாழ்வது பாண்டிய நாடு என்பதைப் போல ஈழர் வாழ்வது ஈழ நாடாயிற்று. சேரர், சோழர், பாண்டியர் முதலியவர்களைப் போன்ற சாதியரே ஈழரும். ஈழர்தான் ஈழத்தின் ஆதிக் குடிகளாகும். நாகர் சிங்களவர் என்ற இனத்தார் தோன்றி வாழ்வ தற்கு முன்னர் இந்த நாட்டில் வாழ்ந்த ஆதிக் குடிகள்

இவ்வறிஞர் சுட்டும் காரணங்கள் அனைத்துள்ளும் ஊர்ப் பெயராய்வு தரும் விளக்கம் எது? இவற்றுள் எக்காரணம் பொருந்தக் கூடியது என்ற நோக்கில் பார்க்க, ஈழம் பெயர்க்காரணம் தொடர்பான முடிந்த கருத்தை நாம்பெறுதல் இயலவில்லை. எனினும் இதுவரையிலும் அறிஞர் ஈழம்தொடர்பாகச் சுட்டாத பகுதிகளை அல்லது எண்ணாத சிந்தனைகளை வெளிப்படுத்தும் நிலை அமைவதே இவ்வாய்வின் ஓரளவிற்கான வெற்றியாக அமைகிறது. எனவே இப்பாதை சரியாக அமையின், இதன் வழிஇன்னமும் இவ்வாய்வுப் புலத்தில் தேடும் போது ஈழம் பற்றிய உண்மைக் காரணம் தெரிதல் இயலலாம்.

---

ஈழராகும். ஈழர் என்பதைத்தான் ஆரியர் இயக்கர் என்று வழங்கினார்கள். ஆரியருக்கு ழகர எழுத்தொலி இல்லாமையினால், அதற்கியைந்த விகாரமாக்கி இயட்சர் என்றார்கள். இயட்சர் தான் இயக்கரானார்கள்—ஈழமும் தமிழரும்—ப-3.

17. ஈழு என்ற மொழியினை இயக்கர் நாகர் பேசிவந்தார்கள். அதனால் ஈழம் என்றாயிற்று —ப—8.

18. கடற்கொண்ட தென்னாட்டில் குமரி நாட்டில் ஏழ்பனை நாடு என்ற ஒரு நாடு இருந்தது. அப்பெரு நிலப்பரப்பினைக் கடல் கொண்ட பொழுது அக்குமரிக்கண்டத்தின் ஏழ்பனைநாடு என்னும் பெயர் ஈழம் எனக் காலப்போக்கில் திரிந்து வழங்கி இருக்க வேண்டும் — இலங்கையில் தமிழ்ப்பண்பாடு - ப—13.

19. தொன்றுதொட்டுச் சிவ வழிபாடு இந்நாட்டில் இருந்த காரணத்தால் சிவன் ஒளிமயமானவன் என்னும் பொருளில் ஒளிநாடு என வழங்கப்பட்டு, இதுவே பின்னர் எல்லம் ஆயிற்று எனலாம். சிவனொளி பாதமலை என்பதனையும் இதனுடன் சேர்த்து ஆராய்தல் வேண்டும். எல்லம் ஈழம் எனத் திரிந்தும் இருக்கலாம் - ஈழநாட்டு இடப்பெயர்களில் தமிழின் ஆளுமை—ப—223.

20. ,, ,, ப—223.

21. யாழ்ப்பாண சரித்திரம்—ப—7.

**தமிழ்ச் சொல்**

ஈழம் என்னும் பெயர், இலங்கையைக் குறிப்பிடும் இன்னொரு பெயராகத் தோன்றினும், இலங்கையின் ஒரு பகுதியைக் குறிப்பிடும் தன்மையிலேயே இப்பெயர்த் தோற்றம் பெற்று இன்று வரையிலும் செல்வாக்குப் பெற்று இருக்கிறது என்ற எண்ணம் அதன் வரலாற்றை நோக்க எழும் ஒன்று. இக்கருத்திற்கு அரணாகவே 'இலங்கை ஈழமேயாயினும் வட பாகமும் கீழ்ப் பாகத்தில் ஒரு பகுதியும் ஈழமண்டல மெனப் படும். யாழ்ப்பாணம் ஈழமண்டலத்தின் ஒரு பகுதியாம்'[22] என்னும் எண்ணமும் காணப்படுகிறது. இவ்வெண்ணம், தமிழர்க்கும் இப்பெயர்க்குமுரிய தொடர்பை உறுதிப்படுத்தி, இச்சொல் தமிழ்ச் சொல் என்ற எண்ணத்திற்குத் துணையாகிறது.

**இலங்கையின் முதன்மை பெயர்கள்**

இலங்கைக்குரிய முதன்மைபெயர்களாக நாகமுனை, இலங்கை, தாப்ரபனே என்னும் பெயர்களை வரலாறு தருகிறது. இவற்றுள் முதல் பெயர் தமிழ்ப்பெயராக அமைய, வடமொழிப் பெயராக இலங்கை அமைய, தாப்ரபனே, பிற நாட்டார் வழங்கிய பெயராகத் தெரிகிறது. இந்நிலையில் ஈழம் என்ற பெயரைத் தொல் பெயராகக் காண முடியவில்லை. எனவே, பின்னர் தமிழர் சுட்டிய பெயராக இதனைக் கொள்ளலாம்.

**இலங்கையில் ஈழம் பற்றிய முதற் குறிப்பு**

ஈழம் பற்றிய அறிஞர் எண்ணங்களை எல்லாம் நோக்கும் போது அனைவரும் தமிழகத்தில் அதன் இலக்கியப் பயிற்சியைக் காட்டுகின்றனரே தவிர இலங்கையில் இதன் முதற்பயிற்சி (இலக்கியப்பயிற்சி) பற்றிய எண்ணத்தைச் சுட்டவில்லை. இதற்குக் காரணமாக அறிஞர் ஒருவரின் எண்ணத்தை இவண் சுட்டுவது பொருத்தமாகலாம்.

'யாழ்ப்பாணத்தைத் தலைநகராகக் கொண்டு அரசோச்சிய ஆரிய சக்கரவர்த்திகளின் ஆட்சிக் காலத்துக்கு முற்பட்ட (கி. பி. 1240 -க்கு முன்) ஈழத்துத் தமிழ் மக்களின் அரசியல், இலக்கிய வரலாறு இன்றுவரை தெளிவாகவில்லை. கி. பி.

22. யாழ்ப்பாண சரித்திரம்—ப—3.

13 - ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் ஆரியச் சக்கரவர்த்திகள் ஆட்சி செய்யத் தொடங்கிய காலத்திலிருந்தே ஈழத்துத் தமிழ் மக்களின் அரசியல், இலக்கிய வரலாற்றை ஓரளவேனும் தெளிவாக அறிய முடிகிறது'[23]

எனவே அறிஞர்கள் ஈழம்பற்றிய சிந்தனையில், தமிழகத்தில் உள்ள குறிப்புகளை மட்டும் சுட்டுவதற்குக் காரணம் புலப்படுகிறது. மேலும் இலங்கை அறிஞர்கள் குறிப்புகளில் மட்டுமல்லாது, பிறநாட்டார்க் குறிப்புகளிலும் இப்பெயர் சுட்டப்படாததும் இவண் சுட்டப்பட வேண்டியதாகிறது.

யாழ்ப்பாணத்தின் வரலாற்றினைப் பலர் ஆராய்ந்து எழுதியுள்ளனர். இவ்வரலாறுகளில் மணற்றி, நாக நாடு, நாகமுனை போன்ற இவற்றின் தமிழ்ப் பெயர்கள்சுட்டப் படுகின்றன. தவிர, மணற்றியில் உள்ள நல்லூர் எனப்படும் ஊரே யாழ்ப்பாணம் எனப் பின்னர் பெயர் பெற்றது என்ற எண்ணமும் புலப்படுகின்றது. எனினும் எந்தக் குறிப்பிலும் இப்பகுதி ஈழம் எனப் பெயர் பெற்றிருந்ததாகச் சுட்டப்படவில்லை. எனவே ஈழம் பற்றிய இலக்கியப் பயிற்சி எப்போது முதலில் அமைந்தது என்ற உண்மைச் சான்று தெளிவுறின் அது 'ஈழம்' என்னும் பெயர் ஆய்வுக்கு உறுதியான சான்றாக அமையும்.

**தமிழ் இலக்கியக் குறிப்புகளும் ஈழமும்**

பக்தி இலக்கியங்கள் அனைத்திலும் இலங்கை என்ற சொற்பயிற்சியே காணக் கிடைக்கின்றன.[24] ஆயின் இவற்றிற்கு முன்னைய இலக்கியங்களில் இலங்கையுடன் ஈழமும் சுட்டப் பெறுகின்றது. இடைக்கால கல்வெட்டுகளில் மிகுதியாக ஈழம் சுட்டப் பெறுவதைக் காண்கின்றோம்.[25]

---

23. இந்திய காவிய மரபும் ஆரம்ப கால ஈழத்துத் தமிழ்க் காவியங்களும்—ப—589.
24. இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள்—ப—304.
25. சோழ மன்னன் இராசராசன் ஈழத்தின் மீது படையெடுத்தான். ஈழமன்னவன் அஞ்சியோட, இராசராசன் அனுராதபுரத்தையும், அதன் வடபகுதி முழுவதையும் கைப்பற்றி ஈழத்தினுக்கு மும்முடிச் சோழமண்டலம் எனப் பெயர் சூட்டினான். இதனைத் திருவாலங்காட்டுச் செப்பேடுகள் அழகாகச் சுட்டுகின்றன.

—ஈழமும் தமிழகமும்—ப—10.

சங்க இலக்கியச் சான்று என்ற நிலையில்,

'ஈழத்துணவும் காழகத்தாக்கமும்'

எனப் பட்டினப்பாலை இப்பெயரினைக் காட்டுகின்றது. பின்னர் பெருங்கதை,

'இலங்கை ஈழத்துக் கலந்தரு செப்பு' 1-58:37

என இப்பெயரினை இயம்புகிறது.

தவிர, சங்க இலக்கியப் பாடலாசிரியர்களாக, ஈழத்துப் பூதன் தேவன், மதுரை ஈழத்துப் பூதந் தேவனார் என்ற இரு பெயர்கள் சுட்டப்படுகின்றன. இருவரும் ஒருவரா அன்றி இருவரா என்பதும் தெளிவில்லை.

மேலும் சங்க காலம் சார்ந்த கல்வெட்டுகள் ஈழம் என்ற பெயரைச் சுட்டுவதாகவும் தெரிகிறது[26].

'மதுரையை அடுத்துள்ள திருப்பரங்குன்றத்தில் இயற்கையாய் அமைந்த குகை ஒன்று உள்ளது. அக்குகைப் பகுதியில் மூன்று கல்வெட்டுத் தொடர்கள் உள்ளன. இங்குள்ள படுக்கைகளில் தங்கியிருந்தவர்களில் முதன்மைபெற்று விளங்கியவர் நெடுஞ்சாத்தன் என்னும் சமணத் துறவி என்பதும், இங்குள்ள படுக்கைகளை அமைத்துக் கொடுத்தவர்கள் அந்துவன், கோயமான், எருக்காட்டூர் ஈழக் கடும்பிகன் பொலாலயன் என்னும் மூவர் என்பதும் இக்கல்வெட்டுகளிலிருந்து தெரிய வருகின்றன.

எருகாடூர் ஈழ குடுமபிகன் பொலா
லயன் செய்த ஆய சாயன நெடு
சாதன்,

மேலும்,

'மற்றும் அரிட்டபெட்டி (மாங்குளம்) என்னும் இடத்தில் கிடைத்துள்ள மற்றொரு தமிழ்க் கல்வெட்டு; நம் கருத்தைக் கவருவதாகும். இக்கல்வெட்டு வாசகத்தை ஒருவகையாக கே.வி. சுப்பிரமணிய ஐயர் படித்துள்ளார். பிற்கால ஆராய்ச்சியாளரான நாராயணராவ் என்பவர் பின்வருமாறு அதனைக் கொண்டுள்ளார்.

'ஊர் ஊராகச் சுற்றி வாணிகம் செய்யும்
ஈழத்து வணிகரின்

26. தமிழ் நாட்டு வரலாறு—சங்ககாலம்—அரசியல்—ப—55.

தலைவனான சாரிகன் கணக்கனுடன் சேர்ந்து' சிறப்புமிக்க இயக்கர்களுக்கு இந்தச் சைத்தியத்தைப் படைத்துள்ளார் என்பதாகும் இக்கல்வெட்டினால் ஈழத்தைச் சேர்ந்த வாணிகர்கள் தமிழகத்தில் செல்வமும் செல்வாக்கும் பெற்றிருந்தனர் என்பதை அறிகிறோம்'[27] என்ற வரலாற்றுக் கருத்தும் உள்ளது.

**விளக்கம்**

பட்டினப்பாலை அடிகள் ஈழத்துணவு பற்றிச் சுட்டுகின்றது. இதற்குப் பொருள் எனப் பார்க்கும் போது காவிரிப் பூம்பட்டினத் துறையில் வந்து குவிந்த பொருட்களைப் பட்டியலிடும் போது இப்பொருட்கள் சுட்டப்படும் நிலை அமைகிறது.

இதற்கு நச்சினார்கினியர் உரை காணப்படவில்லை. உ.வே.சா., 'இதற்கு உரை கிடைத்திலது. காவிரியால் உண்டாகிய பொருட்களும், சிங்கள தேசத்திலிருந்து உண்டரகிய நுகர் பொருட்களும், என்க' எனச் சுட்டுகின்றார்.[28] ஆயின் இவரும் உறுதியாகச் சுட்டவில்லை. தம்முடைய பத்துப்பாட்டு ஆராய்ச்சியில், தொழிலும் வாணிகமும் என்னும் பகுதியில், டாக்டர் மா. இராசமாணிக்கனார் காவிரிப்பூம்பட்டினத்தில் உள்ள துறைமுகம் பற்றிய பட்டினப்பாலை வரிகளை விளக்கும் போது, இப் பாடலடிக்குப் பொருள் சுட்டாது சென்று விடுகின்றார்.[29] எனவே இங்கு 'ஈழம்' எனச் சுட்டப்பட்டது இலங்கை ஈழம் என்பதை அவர்கள் தெளிவாக ஏன் சுட்டவில்லை என்ற வினா எழுகிறது.

ஈழத்து உணவு பட்டினத்திற்கு வந்தது என்ற பொருள் தெளிவாக அமைய, இதனை உரையாசிரியர்கள் தெளிவுபட இயம்பாததற்குக் காரணமாகச் சில எண்ணுதல் இயலுகிறது.

---

27. இலங்கையில் தமிழ்ப் பண்பாடு—பக்.40—42
28. பத்துப்பாட்டு. உ.வே.சா. பதிப்பு—ப—550
29. இராசமாணிக்கனார். டாக்டர் மா—ப—483

1. பிற சான்றுகள் எதுவுமின்மை ஈழம்உணவு அனுப்பியது என்பதற்கு.
2. ஈழம் என்ற பெயர் இலங்கைப் பகுதிக்கு இருந்தது என்பதற்கு அன்றைய வரலாற்றுக் குறிப்பின்மை
3. அன்று இப்பகுதியில் மணப்பொருட்கள் மிகுதியாக இருந்ததாகக் குறிப்புகள் கிடைக்கின்றனவே தவிர, உணவுப் பொருட்கள் மிகுதியாக விளைவிக்கப்பட்டதாகக் குறிப்புகள் இல்லை.
4. ஈழம் துறைமுகமாக இருந்ததா என்பது தெளிவு பெறவில்லை.

ஆயின், பெருங்கதை ஆசிரியர், உஞ்சைக் காண்டத்தில் உதயணன் சயந்தி புக்கது என்ற பகுதியில், உடன் கொண்டு சென்ற அரும் பொருட்கள் பற்றியியம்பும்போது,

'இலங்கை ஈழத்துக் கலந்தரு செப்பு'
(1. 58—37)

என்பதையும் உரைக்கின்றார். இதற்கு உ.வே.சா., 'ஈழத்துத் தச்சன் கடைந்த விணைச் செப்போ' என்னும் (யாப்பருங்கல விருத்தி செய்யுள் சூத் 9, மேற்)பாடலடியினையும் தருகின்றார். எனவே இலங்கை ஈழத்தினின்றும் கலம் தந்த செப்பு என்னும் போது அங்கு இருந்து, இங்குப்பொருட்கள் இறக்குமதி செய்யப் பட்டமை புலனாகிறது. இருப்பினும் ஏன் உரையாசிரியர்கள் அதனைக் குறிப்பிடவில்லை என்ற கேள்வி எழுகிறது.

ஈழத்துப் பூதன் தேவனார், மதுரை ஈழத்துப் பூதன் தேவனார் என்ற இரு புலவர்கள் பெயர் தெரியவருகின்ற நிலையில், இவர்கட்கு என்னென்ன விளக்கம் அளித்துள்ளனர் எனக் காணவும் உரையாசிரியர்களிடையே மட்டுமின்றி, அறிஞர்களிடையேயும் வேறுபட்ட எண்ணங்கள் இருப்பதைப் புரிந்துகொள்ளல் இயலுகிறது.

குறுந். 343, அகம். 88. இரண்டு பாடல்களும் ஈழத்துப் பூதன் தேவன் பாடியனவாகவும், குறுந். 360. 189, நற். 366, அகம் 231, 307 ஆகிய ஐந்து பாடல்களும் மதுரை ஈழத்துப் பூதன் தேவனார் பாடியனவாகவும் தெரிகின்றன.

இப்பாடல்கள் அனைத்தையும் பார்க்க எந்த ஒரு பாடலிலும் ஈழம் பற்றிய அல்லது இலங்கை பற்றிய எந்த ஒரு குறிப்பையும் காணயியலவில்லை. ஒரு பாடல், பாண்டியன் கூடல் பெருமை பேசுகின்றது. பிற பாடல்கள் குறிப்பாக எதையும் குறிப்பிடவில்லை.

உ.வே.சா. தன்னுடைய குறுந்தொகை முன்னுரையில் மதுரை ஈழத்துப் பூதன் தேவனார் பற்றி தமது எண்ணமாக, 'ஈழநாட்டில் இருந்து வந்து மதுரையில் தங்கியவர் இவர். பூதன் இவருடைய தந்தையின் பெயர்' என்கின்றார். (ப.141)

பொ. வே. சோமசுந்தரனார் தமது நற்றிணை முன்னுரையில், இவர் ஈழநாட்டினின்று வந்து தங்கிய பூதன் மகன் தேவனெனப்படுவார். ஈழம்—இலங்கை. ஏடெழுதுவோர் பிழையினால் இவர் பெயர் மதுரை ஏளத்துப் பூதன் தேவன் எனவும், ஈழத்துப் பூதன் தேவன் எனவும் காணப்படும் என்கின்றார் (கழக வெளியீடு, ப. 62).

இவர்கள் ஈழத்துப் புலவர் என்ற எண்ணத்தைக் கொள்ள, சிலர் ஐயுறுகின்றனர் போன்று தெரிகின்றது.

டாக்டர் ந. சஞ்சீவி தம்முடைய சங்க கால ஆராய்ச்சி அட்டவணையில், புலவர் பெயரால் அறியப்படும் ஊர்ப்பெயர்களில் 'ஈழம்?' என கேள்விக்குறியுடன் தருகின்றார். (ப. 43) பாண்டிய நாட்டுப் புலவர் வரிசையில் 'மதுரை ஈழத்துப் பூதன்தேவனார்' என்ற பெயரில்லை. அதனைப்போன்று ஈழநாட்டுப் புலவர் என்ற தனிப்பகுப்பும் இல்லை. எனவே இவருக்கு 'ஈழம்' என்பது எந்தப் பகுதியைச் சார்ந்தது என்ற ஐயம் இருந்திருக்குமோ என்ற எண்ணம் எழுகின்றது.

தன்னுடைய 'சங்ககாலச் சிறப்புப் பெயர்கள்' நூலில் டாக்டர் மொ. அ. துரை அரங்கசாமி, பல பெயர்கள் பற்றிய சிறப்பான விளக்கம் அளித்துள்ளார். இறுதியில் அயல் நாட்டுக் குடிகள் என்னும் பகுதியில், ஆரியர், மௌரியர், யவனர், பற்றியெல்லாம் பேசும் இவர் (பக் 363 –4 )7) ஈழத்து மக்கள் தொடர்பு பற்றியும் ஈழத்துப் பூதன்தேவன் பற்றியும் சுட்டவில்லை. இதற்குக் காரணம் தெளிவான காரணங்கள் கிடைக்காமை எனலாமா? என்றும் எண்ணத் (தோன்றுகிறது.

கலைக்களஞ்சியமும் இவ்வையப்பாட்டினையே கொண்டுள்ளது. ஈழத்துப் பூதன் தேவனார்—இவர் சங்ககாலப் புலவர் ஈழநாட்டார் போலும் (ஐயம்). மதுரை வாழ்வினராகிய ஈழத்துப் பூதன்தேவனார் வேறு. இவர் வேறு என்பர். மதுரை வாழ்வினராகிய ஈழத்துப்புலவர் சங்ககாலப் புலவர் (ப. 200). எனவே முன்னவரை ஈழநாட்டார் போலும் என்று சொல்லி, மதுரை ஈழத்துப் பூதன் தேவனார் வேறு என்று சொல்லும் போது, இவர் ஈழநாட்டவர் இல்லையா? என்ற வினாவும் அமைகிறது.

கலைக்களஞ்சியம் சுட்டும் கருத்துக்கு மறுப்பாக, உ.வே.சா., இருவரும் வேறு என்றும், மதுரை ஈழத்துப் பூதன் தேவன், ஈழநாட்டில் இருந்து மதுரையில் தங்கியவர் என்றும் இயம்புகின்றார்.

எனவே, பொதுவாக இப்புலவர் வரலாறு எதுவும் தெளிவாகவோ, விளக்கம் தரும்படியாகவோ, இல்லை என்பது மட்டும் இவண் உறுதியாகின்றது.

ஈழம் என்ற பெயர் சுட்டி வரும் இக்குறிப்புகளுடன், மேலும் சில எண்ணங்களைத் தந்து தமிழகம் இலங்கை தொடர்பை விளக்கும் கே.கே.பிள்ளை இவண் இயம்புதற்குரியவர்.[30] ஸ்ரீலங்காவும், தமிழ்ச்சங்கமும் என்ற தலைப்பில் இவர் நாகர் பெயர்த்தொடர்பான புலவர்கள், முரஞ்சியூர் முடிநாகர், ஈழத்துப்பூதன் தேவனார், ஈழநாகனார், முசிறியைச் சார்ந்த நீலகண்டனார், நாகம்சார்ந்த பிற பெயர்த் தொடர்பு போன்ற பலவற்றைச் சுட்டினாலும், இவற்றை வரலாற்று உண்மைகளாகக் கொள்ளுதல் இயலாதது என்கின்றார்.

30. Tradltion speaks of one Nilakantanar of Musiri, another native of Jaffna who had proceeded to Madurai, and listened to the exposition of Iraiyanar Agapporul Urai there. It is true that all these traditions cannot be accepted as historically reliable in respect of details. But the names of the personages might not have been fanciful inventions. South India and SriLanka — pa. 37-42.

மதுரை ஈழம் பற்றிய சிந்தனைகள் இவ்வாறு அமைய, எருக்காட்டூர் ஈழம் பற்றிய எண்ணமும் சிந்தனைக்குரியதாகிறது. கல்வெட்டுச் சான்றுகளாகச் சுட்டப்படும் தன்மையில் இப்பெயர்களை நாம் அறிகின்றோம். மேலும் எருக்காட்டூர் ஈழம் என்ற பெயரினைக் காணயியலாவிடினும், எருக்காட்டூர் என்றதொரு பெயரினைச் சங்க இலக்கியம் சுட்டுகிறது. எருக்காட்டூர் தாயங்கண்ணனார் என்ற புலவர் பாடிய பாடல்கள் அகநானூறு, நற்றிணை, புறநானூறு இவற்றுள் உள்ளன. இங்கும் தாயங்கண்ணனார், எருக்காட்டூர் தாயங்கண்ணனார் என்ற இரு பெயர்கள் உள்ளன. எனினும் இவண் இவ்விருவர் பற்றிய ஆராய்ச்சியை விட, எருக்காட்டூர் தாயங்கண்ணனார் என்ற பெயரில் உள்ள ஊர்ப்பெயர் ஆய்வே வேண்டற்குரியது என்ற நிலையில் இது பற்றி மட்டும் காணலாம்.

எருக்காட்டூர் என்ற ஊர் பற்றிச் சுட்டும்போது, பொ. வே. சோமசுந்தரனார், சோழநாட்டு எருக்காட்டூர் தாயங்கண்ணனார் என்பவர் இவரே. எருக்காட்டூர் தஞ்சாவூர் ஜில்லா, நன்னிலம் தாலுகாவில் காவலாக் குடிக்குக் கீழ்பால் உள்ளது என்கின்றார் (ப. 14). ஔவை துரைசாமிப் பிள்ளை தம்முடைய புறநானூறு உரையிலும் மேற்சுட்டியவாறு ஊரின் இருப்பிடம் சுட்டியதுடன், அதனைத்திருக்கடவூர் கல்வெட்டு, 'எருக்காட்டூர் சேரிக்குப் பிடாகையான மணற்குன்று' எனக் குறிப்பிடுகின்றது என்றும் சுட்டுகின்றார். (ப. 453) இருப்பினும் தஞ்சை மாவட்ட ஊர்ப்பெயர்கள் ஆசிரியர் இவ்வூர் பற்றி எதுவும் சுட்டவில்லை. ஆயின் மேலும் சில எண்ணங்களைத் தமிழ்நாடு (சங்ககாலம்—அரசியல்) நூல் தருகிறது.

மேற்குறிப்பிடட கல்வெட்டுக்கு விளக்கம் அளிக்கும் வகையில் இது அமைகிறது. எருக்காட்டூர் என்பது 'எருகாவூர்' என்று கூறப்பட்டுள்ளது. சங்ககாலத்து ஊர்களில் ஒன்று எருக்காட்டூர். அவ்வூரில் பிறந்த புலவர் ஒருவர் எருக்காட்டூர் தாயங்கண்ணனார் எனப்பட்டார். ஈழ நாட்டிலிருந்து வந்த குடும்பத்தைச் சேர்ந்த ஒருவன் இவ்வூரில் வாழ்ந்து வந்தான். இந்தச் செய்தி 'ஈழக்குடும்பிகன்' என்று குறிப்பிடப்படுவதி

லிருந்து தெரிகிறது. பொலாலயன் என்பது அவன் பெயர் என்கின்றது.[31]

இந்நூல், பிள்ளையார் பட்டிக்கல்வெட்டு ஒன்றையும் சுட்டுகிறது.

'திருப்பத்தூர் வட்டம். பிள்ளையார் பட்டியை அடுத்து குன்றுப் பொடவில் உள்ள கல்வெட்டில் எருக்காட்டூர் கோன்பெருப்பரணன் என்ற பெயர் உள்ளது. பெரும்பரணன் என்பவன் எருக்காட்டூர் அரசன் அவன் குகைகளில் தங்கித் தவம் செய்தான்' போன்ற செய்திகளைத் தருகிறது.[32]

இச்செய்திகளின்று எருக்காட்டூர் என்பது அரசன் இருநது ஆண்டமை காரணமாகச் சிறந்த ஓர் ஊர் என்பது மட்டும் இவண் தெளிவு பெறுகின்றது. ஆயின் ஈழம் என்ற ஊர் இதன் அருகில் இருந்தமை பற்றிய தெளிவு ஏதும் கிடைக்கவில்லை.

**மேலும் சில விளக்கங்கள்**

இவண் சுட்டப்பட்ட செய்திகள் அனைத்தையும் தொகுத்து நோககும் போது சங்க கால ஈழம், இலங்கை ஈழததைத் தான் குறித்துள்ளது என்பது முடிவு செய்தற்கியலாத நிலையில்தான் உள்ளது. எனினும் இவண், ஒரு செய்தி மீண்டும் நோக்குதற்குரியது. பெருங்கதை இலங்கை ஈழத்துக் கலந்தரும் செப்பனைப் பற்றி பேசும்போது ஈழத்துணவும் அங்கிருந்து ஏன் வந்திருக்கக் கூடாது என்பதுதான். எனவே இன்னமும் கிடைக்கும் சில விளக்கங்களை இவண் காணலாம். தமிழ்நாட்டு வரலாறு (சங்க காலம் அரசியல்) என்ற நூல் சங்க காலத்தைச் சார்ந்த இலங்கை ஊர்ப்பெயர்கள் சிலவற்றை விளக்குகிறது. இவற்றுள் இலங்கையில் காணப் பட்ட சில ஊர்ப்பெயர்களுடன், சில துறைமுகங்களின் பெயர்

31. தமிழ்நாட்டு வரலாறு (சங்ககாலம் (அரசியல்)—பக். 87.
32. தமிழ் நாட்டு வரலாறு—சங்க காலம்—பக். 63—64.

களும் சுட்டப்படுகின்றன.[33] எனினும் ஈழம் என்ற பெயர் இவண் இல்லை,

அடுத்து மணிபல்லவம் (சம்பு கொலப்பட்டினம்) என்ற துறைமுகம் பற்றிய எண்ணத்தைக் காண்கின்றோம். இங்கு நடந்ததாகச் சுட்டப்படும் வணிபம் பற்றிப் பேசும்போது, ஆசிரியர் இதற்கும் தமிழகத்திற்கும் ஏற்றுமதி, இறக்குமதி நடந்திருக்க வில்லை என்றுரைக்கின்றமை இவண் சுட்டத் தக்கது.[34]

'ஈழத்துணவும்' என்னும் தொடர் அமையும் பட்டினப் பாலை ஏறக்குறைய கி.பி 2—ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது என்பது தெரிகிறது. எருக்காட்டூர் ஈழம் என்னும் தொடர் சங்க காலத்தது என்று புலனாகிறது. ஆயின் இது தரும் பொருள், சமணர் சார்புடையது. எனவே சமணமதத் தொடர்பு, சங்க காலத்தைத் தொடர்ந்த காலத்தது என்ற நிலையில், இச்சொல்லையும் கி. பி. 2 -ஆம் நூற்றாண்டுக்குப் பின்னர் அமைந்தது எனலாம்.

மேலும் இலங்கை என்ற பெயர் தமிழகத்திலும் காணப்படு கிறது. இது இன்றைய இலங்கையின் பெயர் என்பதைத் 'தொன்மாவிலங்கை கருவொரு பெயரியநன்மா இலங்கை' என்று

---

33. அநுராதபுரம். உரோகணநாடு, சமந்தம். மணிபல்லவம் (சம்பு கொலப்பட்டினம்) மாதிட்டை, மாவலி கங்கை- தமிழ் நாட்டு வரலாறு — சங்க காலப்— அரசியல் பக். 592—599.

34. இந்தத் துறைமுகம் மிகப்பழமையானது. இது இலங்கை யின் வடகோடியில் நாகநாட்டின் (இப்போதைய யாழ்ப்பாணத்தின்) வடக்கே இருந்தது. சம்பில் துறை என்றும் இது கூறப்பட்டது. இங்குப் பெரிய பட்டினம் இல்லை. இங்கு ஏற்றுமதி, இறக்குமதிகள் நடைபெற வில்லை....மணிபல்லவத்துறைமுகம், சங்க காலத்திலும் அதற்குப் பிறகும் கப்பல்கள் தங்குவதற்கு வாய்ப்பான துறைமுகமாக இருந்தது.

தமிழ் நாட்டு வரலாறு—சங்க காலம்—அரசியல்— பக். 596—597.

சொல்லும் தன்மை காட்டுகிறது. இங்குத் தொன்மா இலங்கையினின்றும் இப்பெயர் சூட்டப்பட்டது என்ற கருத்துத் தெளிவாக இல்லாவிடினும், இலங்கையே பழமையானது என்பது உறுதிப்படுகிறது. ஆயின் 'ஈழம்' பற்றிய எண்ணம் இவ்வாறு தெளிவாகவில்லை.

இலங்கை பற்றிய தொன்மை சான்றுகள் தெளிவு பெற கிடைக்கவில்லை என்பதை முன்னர்க் கண்டோம். ஆயின், இங்கு இருந்து ஈழத்திற்குச் சென்ற புலவர்கள் பற்றிய எண்ணங்களை இன்று புலனாய்வு செய்து வெளியிட்டு இருக்கின்றனர். 'பௌத்த மடாலய நூலகங்களினூடாகத் தெரிய வரும் தமிழக ஈழ இலக்கிய உறவுகள்' என்ற கட்டுரையில் ஆ. சிவநேசச் செல்வன், பல எண்ணங்களைச் சொல்லிச் சென்றாலும் இடைக்காலம் பற்றிய சில குறிப்புகள் கிடைக்கின்றனவே தவிர, சங்க காலம் சார்ந்த எண்ணங்கள் தெளிவு பெற இல்லை. முடிவுரையில், 'தொகுத்து நோக்கில் இலங்கை பௌத்த மடாலயங்களின் ஊடே வளர்ந்த கல்வி பாரம்பரிய வளர்ச்சியிலே தமிழ்நாட்டுத் தேரர்கள் காலந்தோறும் பெற்று இருந்த முக்கியத்துவமும், செல்வாக்கும் பங்களிப்புகளும் தமிழக ஈழ இலக்கிய உறவை இணைக்கும் தடங்களாகும்' என்று கூறிச் செல்கின்றமை இவண் சுட்டத்தக்கது.[35] இதனைப் போன்றே தமிழர்கள் அங்குச் சென்றமையை, கே. கே. பிள்ளையும் தம் நூலில் குறிப்பிடுகின்றார்.[36]

இக்கருத்துகள் அனைத்தையும் தொகுத்து நோக்கி, அவற்றைக் கீழ்வருமாறு சுட்டலாம்.

---

35. 5-ஆம் உலகத்தமிழ் மாநாடு—கருத்தரங்கு ஆய்வுக் கட்டுரைகள் – பக். 312—320.

36. But whether Srilanka formed part of Tamilagam during the epoch of the First Sangam or not, there was ample scope for the inflow of Tamilan population and Tamilian Culture into the northern-most part of Srilanka which lay very near the mainland of Tamilagam. Commerce might have brought on its wake colonisation-
South India and Sri Lanka p- 41.

1. ஈழம் என்பது தமிழ்ச் சொல்.
2. இலங்கையின் ஒரு பகுதியே ஈழம்.
3. இலங்கையின் முதல் பெயர்களாகச் சுட்டப்படுவன வற்றுள் ஈழம் என்ற பெயரின்மை.
4. இலங்கையில் ஈழம் பற்றிய முதற்குறிப்பு தெரியாமை.
5. சங்க இலக்கியச் சான்று, சங்கப்புலவர் சான்றுகள், கல்வெட்டுச் சான்றுகள் தெளிவின்மை.
6. இலங்கையிலிருந்து மக்கள் தமிழகம் வந்ததாகச் சான்றுகள் தெளிவில்லாத நிலையில், தமிழகத்தி லிருந்து இலங்கைக்கு மக்கள் சென்றுள்ளனர் என்ற தெளிவான குறிப்புகள் உள்ளமை.

இவற்றை மனத்துட்கொண்டு நோக்க, தமிழகத் திலேயே முதற்கண் ஈழம் என்ற பெயர் காணப்பட்டு இருக்கலாம்; தமிழர்கள் இலங்கை சென்று அங்குக் குடியேறிய பின்னர், அப்பகுதிக்கு ஈழம் என்று பெயர் சூட்டியிருக்கலாம் என்றதொரு எண்ணம் புலப்படுகிறது. மேற்சுட்டிய எண்ணங்களுடன் தமிழக ஊர்ப்பெயர்களின் வரலாறு என்று நோக்கவும் இவ்வெண்ணம் உறுதிப்படலாம் என்றதொரு சிந்தனையும் இவண் அமைகிறது.

## தமிழக ஊர்ப்பெயர் வரலாறு தரும் அமைப்பு முறையிலான விளக்கம்

தமிழக ஊர்ப்பெயர் வரலாறு, ஊர்ப்பெயரிடும் தமிழரின் முறையினையும் அதன் நோக்கினையும் நமக்குத் தருகிறது. முதலில் தனிப்பெயராகத்தோற்றம்பெற்றவை ஊர்ப்பெயர்கள், பின்னர், ஒரே பெயர் பல ஊரைக் குறிப்பிட்டுப் பொதுமைப் பட, அதனைத் தனிப்படுத்த அடை இணைத்த நிலை அமை கிறது. இந்நிலையில் பொதுக்கூறுடன் சிறப்புக்கூறு இணைந்து ஊர்ப்பெயர்கள் உருவாகத் தொடங்கின. பல காரணங்கள் காரணமாக அமைய மேலும், முன்னும் பின்னும் அடை இணைவதையும் காண்கின்றோம். இந்நிலை இன்று

வரை தொடர்ந்து காணப்படுகின்றதை ஊர்ப்பெயர் வரலாறு காட்டுகின்றது. இத்தகைய வளர்ச்சியில் ஒரு தன்மையாக, ஊர்ப்பெயரினை மேலும் குறிப்பாக விளக்க அருகேயுள்ள இன்னொரு ஊர்ப்பெயரினை, இணைத்தனர். இவை பெரும் பாலும், சிறந்த புகழ்பெற்ற ஊராக இருப்பதையும் காணுதல் இயலுகிறது. காலங் காலமாக இந்நிலை தொடருகின்றது. உறையூர் ஏணிச்சேரி, இடைக்கழிநாடு நல்லூர், முக்காவல் நாட்டு ஆமூர், தொண்டாமுத்தூர் புதூர், எல்லைப் பாளையம் புதூர், போன்ற பல பெயர்களை இவண் காட்டலாம். இந்நிலையில் இங்கு நாம் காண்பது ஈழம் என்ற பொதுப்பெயர். அதனைப் பின்னர், குழப்பம் ஏற்பட்ட நிலையில் அருகேயுள்ள சிறந்த நகர்களைச் சுட்டி மதுரை ஈழம், எருக்காட்டூர் ஈழம், இலங்கை ஈழம் என்று சுட்டினர் என்று எண்ணும்போது, அது ஊர்ப்பெயர் வரலாற்று நிலையில் பொருத்தம் பெறுகிறது. ஈழம் என்பது பொதுப் பெயராக, தமிழ்மொழி பேசும் நிலங்களில் காணப்பட்ட பெயர் என்பது விளக்கம் பெறுகிறது. இத்துடன் ஈழம் பற்றிய தமது எண்ணமாக, ஈரான், பெர்சியா நாட்டிலும் ஈழம் மற்றும் ஊர், ஆறு, இல் என்னும் விகுதியுடைய பல பெயர்கள் காணப்படுகின்றன. என்ற கருத்தைத் தி. க. இராசேசுவரன் சுட்டும் போது, இதன் பரந்துபட்ட வழக்கும் தெரிய வருகிறது.

**ஈழம் என்ற ஊர்ப் பெயர்க்காரணம்**

மேற்சுட்டிய எண்ணங்களைத் தொகுத்து நோக்க, ஈழம் என்ற பெயர் தமிழகம் மட்டுமன்றி பிற நாடுகளிலும் காணப் பட்டிருக்கலாம்; இலங்கை ஈழம் என்ற பெயரின் தொன்மை தெளிவாகாத தன்மையில், தமிழ்நாட்டு ஈழம் என்ற பெயர் பின்னர் இங்கு இருந்து குடியேறிய தமிழ் மக்களால் இலங்கையின் ஒரு பகுதிக்குச் சூட்டப்பட்டிருக்கலாம் என்பது எண்ணக்கூடியதாக அமைகிறது.

எனினும் இவ்வெண்ணம், இன்னமும் இலங்கையின் வரலாறு, ஈழம் சுட்டப்படும் மதுரை—தஞ்சை மாவட்ட ஊர்ப்பெயர்கள் வரலாறு நுணுக்கமாகவும், தெளிவாகவும்

ஆயப்படும் நிலையில் உறுதிப்படலாம். மாறுபட்ட எண்ணங்கள் கிடைக்குமாயின் மாறுபடவும் செய்யலாம்.

அறிஞர் சுட்டிய இவ்வெண்ணங்களைக் கொண்டு 'ஈழம்' என்ற பெயர்க் காரணம் நோக்க சில காரணங்கள் இல்லாமற் போக வாய்ப்பு அமையும். இரத்தினக்கல் படுகை, ஈழு என்ற மொழி, சிவ வழிபாடு, சிங்களம் என்பதன் சிதைவு இவை காரணமென சுட்டுதல் இயலாது. ஆயின் பொன், கள், ஈழர் என்ற இனம், விளைபூமி இக்காரணங்களுள் ஏதாவது ஒன்று காரணமாக அமையவாய்ப்பு அமையலாம். மேலும் ஆழமான ஆய்வு இவண் தெளிவைத் தரலாம்.

**ஒளி நாடு—ஒபீர்**

இலங்கையின் மற்றொரு பெயராக ஒளி நாடு அமைகிறது இது பிற மொழியில் ஒபீர் எனச் சுட்டப்படுகிறது. தொன்று தொட்டுச் சிவ வழிபாடு இந்நாட்டில் இருந்த காரணத்தால் சிவன் ஒளிமயமானவன் என்னும் பொருளில் ஒளிநாடு என வழங்கப்பட்டது எனலாம் என்ற கருத்து அமைகிறது.[37]

உலகத்தின் ஆதிமனிதர்களான ஆதாமும் ஏவாளும் வாழ்ந்த இடம் இந்த நாடு என்று சொல்வாருமுண்டு. வேதாந்தத்தில் கூறப் பெற்ற ஒபீர் என்ற நாடு இந்த நாடே எனக் கொள்வாருமுண்டு.[38]

**சுலாதீபம்—சிலோன்**

சலாபம் என்றால் முத்துக்குளித்தலாகும். ஆகவே முத்துக் குளித்தல் காரணமாக முத்துச் சலாபம் என்னும் நகர் இந்த நாட்டிலே ஏற்பட்டது. அதனின்று சலாபதீபம் என்ற பெயரும் இந்த நாட்டினுக்கு வழக்காகியது [39] என்பர்.

மேலும் மேலை நாட்டார் இந்த நாட்டினைச் சிலோன் என்று அழைத்தார்கள். இன்று வரை தொடர்ந்து செல்வாக்கு

37 ஈழநாட்டு இடப்பெயர்களில் தமிழின் ஆளுமை பக்—222 223

38 ஈழமும் தமிழரும்—ப.12

39 ஈழமும் தமிழரும்—ப.11

பெற்றமைகிறது இப்பெயர். சிலோன் என்று ஈழத்தை ஆங்கிலேயர் அழைக்கு முன்னர் போர்த்துக்கேயரும் ஒல்லாந்தரும் வெவ்வேறு விதமாக அழைத்தனர். போர்த்துக்கேயர் சிலாஓ (Ceilao) எனவும் பின்னர் ஒல்லாந்தர் சீலோன் (Ceilon) எனவும், ஆங்கிலேயர் சிலோன் எனவும் வழங்கினார்கள் எனச் சுட்டுகின்றமையைக் காண்கின்றோம்.[40] எனவே சலாபதீபம் என்பதன் மரூஉவே சிலோன் என்று கருத இயலுமா என ஆராயலாம்.

சிலோன் என்பது முத்து சலாபம் என்பதன் மரூஉவே எனில், இலங்கையின் தமிழ்த் தொடர்புக்கு மற்றுமொரு பெயர்க்காரணமாக இது அமைகிறதெனச் சுட்டலாம்.

**சிங்களம்—சிங்களதுவீபம்**

இலங்கையில் சிங்களவர் என்ற இனத்தார் தோன்றியவுடன் தமது இனப்பெயரைக் கொண்டு சிங்களதூவீபம் என வழங்கினர்கள். இதன் திரிபே சிங்க துவிபம் என்ற பெயருமாம்.

சிங்கள துவீபம் என்ற பெயரின் கருக்கமே சிலோன் என்பதாகும்[41].

சிங்கள இனம் ஈழத்திலே உதயமாகியது. அவ்வினத்தவரே தங்களைச் சிங்களவர் எனச் சொல்லிக் கொண்டார்கள். சிங்கத்தின் பரம்பரையிலே தோன்றியவர் சிங்களவர் என்று மகாவம்சம் கூறுகிறது. இது பற்றிப் பலர் தங்களது கூற்றுக்களை வெளியிட்டிருக்கிறார்கள். ஆராய்ச்சி வல்லுநர் எஸ். டப்ளியூ குமாரசாமி அவர்கள் கூறுவதன் கருத்தாவது: சிம்ஹ சிங்க என்பது தானியப் பெயர்களிலே தலை சிறந்தது. இந்தியாவில் பஞ்சாபிலும் மற்றும் பல இடங்களிலும் ஆண் மக்கள் தம் இயற்பெயரோடு 'சிங்' (சிங்கம்) என்னும் சொல்லைச் சேர்த்து வழங்குவர். இவ்வாறு வழங்கும் சாதியாரை வட திராவிடர், திராவிடக் கலப்புடையோர் என்று ஆங்கில அறிஞர்கள் கூறுகிறார்கள். நாடக விஷ்ணுவுக்குச் சிங்கேசுவரன், சிங்கப் பெருமாள், சிங்கத்தேவன், நரசிங்கன் என்னும் பெயர்களும் உண்டு. இராவணன் மகன் முதலிய இராக்கதர் சிலரும் மன்னர்கள் சிலரும் சிம்ஹ என்னும்

40 ,, ,, ப.10.
41. விபுலானந்த அடிகள்—ப.4.

சொல்லைத் தனித்தும் வேறு சொல்லோடு ஒட்டியும் தம் பெயர்களோடு சேர்த்து வழங்கினார்கள். தங்களது பெயர் களாவும்கொண்டார்கள், சிங்கோ என்னும் பெயரிய சாதியார் கடாரத்தில் இருந்திருக்கிறார்கள். சிம்ஹ என்ற வடமொழிக்கு அரசகுமாரன் தலைவன், நாதன் என்ற கருத்துகள் உண்டு. சிங்க பட்டம் என்னும் பெயரிய பட்டம் வேளாளருக்கு உரிய தாகும். தலைமயிரினாலும், முகத்தோற்றத்தினாலும், வீரத் தினாலும், சிங்கத்தை ஒத்த ஒரு சாதியாரைச் சிங்கர் என்று சொல்லுதல் பொருத்தமுடையதாகும். சிங்க தேவனை வழி பட்ட மாந்தர்க்குச் சிங்கரெனப் பெயர் அமைதல் முறையாகும். ஆகவே சிங்களம் என்னும் பெயரில் உள்ள சிங்க என்பது மகாவம்சத்தில் சொல்லிய சிங்கத்தை ஒருபோதும் குறிக்காது என்பது திரு. குமாரசாமி அவர்களின் கருத்தாகும்.

சிங்களவர் என்பது சிங்கர் மரபிலே வந்தவர்கள் என்று தான் ஒப்புக் கொள்ள வேண்டும் சிங்கம் போல்பவன் என்னும் கருத்தால் தங்களுக்குத் தாங்களே சிங்களவர் எனப்பெயர் இட்டுக் கொண்டார்கள். இன்றும் சிங்களவர் விஷ்ணுவையும், கண்ணகியையும் கதிர்காமக் கடவுளையும் வழிபட்டு வருகிறார் கள். 'ஈழம் ஸ்ரீ அடைமொழி பெற்று ஸ்ரீஈழமாக வழங்கப் பெற்று வந்தது. ஸ்ரீ ஈழம் என்ற சொல் மொழியின் சிதை வினால் சீ ஈழம் சீயிழம், சீயீழம், சீயெழம் என்றெல்லா மாகி, சிங்களம் ஆயிற்று. ஈழம் சீழம் எனமருவி சிஹளம் சிங்களம் என்றாயிற்று. ஈழம் என்ற சொல்லிருந்தே சீழம் தீப, சேரன்டிப், சிலாங், சிலோன் என ஆகியது. 'சிங்களம் என்னும் சொல் கி.மு, 200 ஆம் ஆண்டில் எழுதப் பெற்ற பாரதத்தில் வந்திருக்கிறது. அவ்வாறாயின் அக்காலையில் சிங்களவர் என்ற இனத்தார் எங்கே வாழ்ந்தார்கள்? விசயன் ஈழத்தில் குடிபுகுந்து ஆட்சி செலுத்தத் தொடங்கியது கி.மு. 543 ஆம் ஆண்டு என்று மகாவம்சம் கூறுகிறது. ஆகவே அக்காலையில் இந்த நாட்டில் சிங்களர் என்னும் சாதியார் வாழ்ந்திருக்கிறார்கள். ஆனால் சிங்களவர் என்னும் சாதியார் ஈழத்திலே வாழவில்லை. சிறி ஈழவர் என்னும் சாதியாரே வாழ்ந்திருந்தார்கள். இந்த உண்மையால் ஸ்ரீ ஈழத்தின் பலதரப்பட்ட மருவுச் சொல்லே சிங்களமென்று கொள்ள முடிகிறது.[42]

42 ஈழமும் தமிழரும் – பக்- 7—8.

சிங்களத்துவீபம் என்னும் பெயர். இலங்கைக்கு அங்குள்ள பட்டையால் வந்தது. சிங்களம்—பட்டை. அது கறுவாப் பட்டை. (லஷ்மண வைத்தியரென்பவர் செய்த சமஸ்கிருத அகராதியிற் காண்க) ஈழம் என்பது சிங்களம் என்பதன் சிதைவு.[43]

மேலும் தாப்ரபனே எனப்பழம் பெருமை பெற்று நிலைத் திருந்த தீவு இப்பொழுது சாலிக என்று வழங்கப்படுகிறதென்று தொலமி என்பவர் தமது நூலில் எழுதியுள்ளார். சாலியா என்னும் ஓர் இனத்தார் இந்த நாட்டிலே வாழ்ந்தார்கள். இவர்கள் கூலித்தொழில் செய்பவர்கள். இவர்கள் கறுவப் பட்டை உரிக்கும் தொழிலை மேற்கொண்டிருந்தார்களென்று மகாவம்சம் கூறுகிறது. சாலியர் வாழ்ந்ததனால் சாலிக எனப் பெயர் பெறலாயிற்று. சீழம் என்னும் சொல்லின் மரூஉவே சாலிக என்பதாகும்.[44]

சிங்களம் குறித்த மேற்கண்ட எண்ணங்கள் அனைத்தும் பலவித எண்ணங்களைத் தருகின்றது. முடிந்த முடிபாக எதுவும் அமையவில்லை. எனினும் சிங்களம் தொடர்பான அங்குள்ள சான்றுகளுடன், சிலம்புகாட்டும், இந்தியாவில் கலிங்க நாட்டில் உள்ளதாகச் சுட்டப்படும் சிங்கபுரம்[45] போன்ற சிங்களம் தொடர்பான மேலும் பல எண்ணங்களையும் கொண்டு ஆராயின் தெளிவு கிடைக்கலாம். மேலும் முன் பகுதியில் கண்ட முத்துச் சலாபம் சிலாவ எனத் திரிந்து சிலோன் ஆகியிருக்கலாம் என்ற எண்ணங்களும் இவண் ஒப்புநோக்கப்பெற்று ஆய்தற்குரியன.

**சிவபூமி**

திருமூலரின் பாடல் இலங்கையைச் சிவபூமி எனக் குறித் துள்ளதாகத் தெரிகிறது.

மேரு நடு நாடிமிக்கிடை பிங்கலை
கூருமிவ் வானின் இலங்கைக் குறியுறுஞ்
சாருந் திலை வனத் தண்மா மலையத்தூ
டேறுஞ் சுழுனை இவை சிவபூமியே - திருமந் - 2747.

43. யாழ்ப்பாண சரித்திரம்—ப-7.
44. ஈழமும் தமிழரும்—ப—11.
45. இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள்—ப—189.

இடை பிங்கலை யிமவானோ டிலங்கை
நடுநின்ற மேரு நடுவாஞ்சுருனை
கடவுந் திலை வனங் கைகொண்டமூலம்
படர்வொன்றி யென்றும் பரமாம்பரமே திருமந்—2754

இதனைச் சிலாமே (Seilome) எனக் குறிக்கின்றனர்.[46]

சைவ மதத்தைச் சார்ந்த திருமூலரால் குறிக்கப்படும் நிலையில், இலங்கை சிவ பூமியாகத் திகழ்ந்துள்ளது என்பதும், சைவம் இங்கே தழைத்திருந்துள்ளது என்பதும் வெளிப்படுகிறது. புராணச் செய்தியாக இருப்பினும் இராவணன் சைவ மதத்தவன்; சிவபக்தன் ஆககாட்சி தருகின்றமையும், இலங்கைப் பழங்குடிகளில் ஒருவராகிய இயக்கர் தலைவனாக இருந்தான் என்றஎண்ணமும் இலங்கையில் திருக்கேதீச்சரம் திருக்கோணேச்சுரம் போன்ற சிவன் கோயில்கள் தொன்மை சான்றன என்ற எண்ணமும், திருமூலர் இப்பூமியைச் சிவபூமி என்று குறிப்பிடுவதனால் மீண்டும் மேலும் அழுத்தம் பெறுகின்றது இப்பெயர் என்றுகருதலாம். மேலும், திருக்கேதீச்சுரம், திருக்கோணேச்சுரம் நகுலேச்சுரம், முனீச்சுரம் இவைநாலுடன் இராமேரச்சுரத்தையும் இணைத்துப் பஞ்ச ஈஸ்வரத் தலங்கள் என்று சுட்டும் இலங்கை மக்கள் எண்ணத்தையும் இவன் எண்ணிப் பார்க்கலாம்.

## சைலத்து

மலையாள நாட்டினர் இந்த நாட்டினைச் சைலத்து என அழைத்தார்கள்.[47] சைலம், அசலம் என்பன வடமொழிச் சொற்கள். மலையைக் குறிப்பன. எனவே மலையைக் கொண்ட பகுதி என்ற நிலையில் மலையகம் என்னும் பொருளிலேயே சைலத்து என்று சுட்டினார்களா? அல்லது தாம் குடிபெயர்ந்து வந்த மலையாள நாட்டினை மனத்துட் கொண்டு, குடியேறிய பகுதியையும் அவ்வாறு பொருள் படும்படிச் சுட்டினரா என்பது ஆய்விற்குரியது. பின்னர் சுட்டிய எண்ணம் பொருத்தமாகலாம் என்பதற்கு, மட்டக்களப்பினை

---

46. ஈழநாட்டு இடப்பெயர்களில் தமிழின் ஆளுமை — ப—222.
47. ஈழமும் தமிழரும்—ப—12.

அவர்கள் மலையர் குகநாடு என்று சுட்டியிருக்கின்றனர்[48] என்ற எண்ணம் அரணாகின்றது.

**தாப்ரபனே**

தமிழக வரலாற்று நிலையில் இலங்கை, ஈழம் என்ற பெயர்கள் தெளிவாகின்றன. ஆயின், இலங்கைக்குப் பழம் பெயர் பிறவும் இருந்திருக்கின்றது என்பதற்குச் சான்றாக இருப்பது 'தாப்ரபனே' என்ற பெயராகும். இலங்கை, ஈழம் என்பதன் மருவிய வழக்காக அது இருந்திருக்க இயலாது என்பதனால், பிறபெயர் ஆகத்தான் இருக்க வேண்டும் என்பது தெரிகிறது. இந்நிலையில் 'தாப்ரபனே' என்பதன் வரலாற்றைக்காணலாம்.

'ஏறத்தாழ இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் எழுந்த புத்த சமய நூல்கள் தாம்ப பன்னி என்று இலங்கையைக் குறிப்பிடுகின்றன என்ற கருத்தைக் காண்கின்றோம்.[49]

பிற நாட்டிலிருந்து இந்நாட்டுக்கு வந்த அறிஞர்களும் இப்பெயரையே சூட்டியுள்ளனர்.

கி.மு. 2ஆம் நூற்றாண்டில் இந்தியப் பெரு நாட்டுக்கு வந்த மெகஸ்தனீஸ் 'தாப்ரபனே' என்று இலங்கையைக் குறிப்பிடுகின்றார். பலர் இக்கருத்தைக் குறிப்பிடுகின்றனர்.[50]

கி. பி. முதல் நூற்றாண்டைச் சார்ந்த பிளினி (கி.பி. 23-79) 'ஆன்டிக்தோனே எனப்படும் மக்கள் வசிக்கும் நாடான 'தாப்ரபனே' நெடுங்காலமாக ஒரு தனி உலகமாகவே கருதப்பட்டு வந்தது.' என்று தொடங்கி இந்நாட்டைப் பற்றிய பல செய்திகளையும் தருகின்றார்.[51] இதே நூற்றாண்டைச் சார்ந்த பெரிப்ளூஸ்தாலமி (கி.பி. 119-161) ஆகிய நூல்களும் 'தாப்ரபனே' என்றே இலங்கையைச் சுட்டுவதாகத் தெரிகிறது.

மேற்கு முகமாக இருப்பது பாலிஸி முண்டு என்று வழங்கப்படும் தீவு ஆகும். இத்தீவு மிகப்பண்டைய மக்களால்

48. மட்டக்களப்பு மக்கள் வளமும் வாழ்க்கையும் – ப.46.
49. பொருநை நாடு-ப.38.
50. ,, ,, ஈழமும் தமிழரும்-ப-8.
51. பிளினி—ப—67.

தாப்ரபனே என வழங்கப்பட்டது என்பது பெரிப்புளூஸ் நூல் பகுதி (ப. 270)

எனவே இலங்கையைத் தமிழர் இப்பெயர் சுட்டி அழைக்காவிடினும், பிறநாட்டார் குறிப்புகள் மூலமும் வடவர் குறிப்பின் படியும் 'தாப்ரபனே' என்பது முதல் நூற்றாண்டு வரையிலும் சுட்டப்பட்டிருக்கிறது என்பது தெரிகிறது. இந்நிலையில் இதன் பெயர்க் காரணமும் பலவாறாகச் சுட்டப் படுகிறது.

அறிஞர்கள் இப்பெயர்க் காரணத்தை ஆராயும் போது சில காரணங்களைச் சுட்டுகின்றனர்.

1. தமிழகத்தில் உள்ள இன்றைய தாமிரபரணியினை அன்றைய பொருநை நதியுடன் ஒப்பிடுதல்.
2. யாழ்ப்பாணத்தை உருவாக்கிய அரசனாகக் கருதப் படும் விசயனுடன் தொடர்புபடுத்துதல்.
3. இலங்கையைப் பழங்காலத்தில் ஆண்டதாகச் சுட்டப் படும் இயக்கர் குலத்தலைவனாகத் திகழ்ந்த இராவணனுடன் தொடர்புபடுத்துதல்.

வரலாற்றுக் காலத்திற்கு முற்பட்ட காலந் தொட்டே தமிழருக்கும் இலங்கைக்கும் தொடர்பு இருந்தது உண்மை. ஆயின், இப்பெயர்கள் தொடர்பு மேலும் ஆழமாகச் சிந்தித்தலுக்கு உரியதாக அமைகிறது.

இலங்கைக்கு உரிய தாப்ரபனே (தாம்பபன்னி) என்ற பெயர் தாமிர பரணியின் மரூஉ என்பது ஒரு கருத்து.[52]

---

52. The name Tambapanni applied to Sri Lanka in the past, seems to have had connection with the river Tamraparni which flows through the Tirunelveli District of South India. It may be observed that the name Tambapanni was applied to the island of Lanka, to Sri Lanka port at the mouth of the river Arivi Aru and at the same time to the river flowing near the town of Tirunelveli was the occurance of the same name, in respect of the three cases mentioned above, a mere matter of coincidence?

—South India and Sri Lanka—P-4

இந்நிலையில் தாமிர பரணி என இன்று அழைக்கப்படும் ஆற்றின் பெயரையும் ஆராய வேண்டியவர்களாக நாம் இருக்கின்றோம்.

'தாமிர பரணி' என்று இன்று சுட்டப்படும் ஆற்றின் பழம் பெயராகத் தமிழ் இலக்கியங்கள் குறிப்பிடுவது 'பொருநை' என்னும் பெயரையேயாகும். 'தமது பொருநை நாடு' (திருநெல்வேலி மாவட்ட வரலாறு) என்ற நூலில் எஸ். கணபதி ராமன் இப்பெயர் பற்றிய விளக்கத்தினையும், ஆன் பொருநை, தண் பொருநை என்ற இரண்டு வித ஆறுகளையும் விளக்கமாகத் தருகின்றார். பொருநைப் பேராற்றின் தாயாக விளங்கும் பொதிய மலையையும், அதனின்றும் புறப்படும் ஆறு இரண்டு பிரிவுகளாகப் பிரிந்து, ஒரு பகுதி திருநெல்வேலியிலும், ஒரு பகுதி கன்னியாகுமரியிலும் பாய்வதை இவர் எடுத்தியம்புகின்றார்.[53] மேலும் இவர் சங்க இலக்கியங்களில் பொருநை ஆறு என வழங்கப்படுவது கேரள நாட்டில் உள்ள ஆறாகும். இது பொருநை, தண் பொருநை, தண்ணான் பொருநை என வழங்கப் பட்டுள்ளது எனவும் சுட்டுகின்றார்.[54] திருநெல்வேலி மாவட்டப் பொருநையைப் பற்றிய குறிப்பு சங்க இலக்கியங்களுக்குப் பிற்பட்ட நூல்களில் காணப்படுகின்றது என்கின்ற எண்ணமும் தெரிகிறது,[55] சேர நாட்டுக்கும், பாண்டிய நாட்டு ஆற்றுக்கும் வேறுபாடு புலப்பட, சேரநாட்டு ஆறு ஆன் பொருந்தம் அல்லது ஆன் பொருநை என்றும், பாண்டிய நாட்டு ஆறுதண் பொருந்தம் அல்லது தண் பொருநை

53 பொருநை நாடு— பக் 21—27

54 ,, —ப—27

55 கி.பி.9ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த வைணவச்சான்றோராகிய நம்மாழ்வரர், தாம் இயற்றிய திருவாய் மொழியில் இப்பொருநையை முதற்கண் குறிப்பிட்டுள்ளார் இவர் இப் பெயரைப் பொருநல் என்று வழங்கியுள்ளார். இவருக்குப் பின்பு எழுந்த நூல்கள் இப்பாண்டிப் நாட்டுப் பொருநையையே பெருப்பாலும் குறிப்பிடுகின்றன.,,—ப-28

என்றும் குறிக்கப்பட்டன என்பது தெரிகிறது' எனவும் இந்நூலில் ஆசிரியர் தெரிவிக்கிறார் (ப-31). இந்நிலையில் தாமிரபரணி என்ற பெயரின் வரலாறு இதனோடு நோக்கத் தக்கதாக அமைகிறது. இலக்கியக் குறிப்புகள் பண்டைக் காலத்தில் இவ்வாற்றின் பெயரைப் பொருநை என்று சுட்டு கின்றதேயொழிய தாமிரபரணி என்று எங்கும் குறிப்பிட வில்லை.

'பொன்திணிந்து புனல்பெருகும் பொருநைத் திருநதி என்று கம்பர் காட்டுமாற்றை, தாமிரபரணிப் பொருளாய்வற்கு ஏற்றதாகக் காட்டினும் அங்கும் கம்பர் பொருநை என்ற சொல்லையே கையாளுகின்றார். பொருநை நாடு ஆசிரியர் புலவர் புராணத்தில் தாம்பிரவன்னி, மனோன்மணியத்தில் தாமிரபரணி எனக் குறிப்பிடப்படுவதை இயம்புகின்றார் (ப. 37). எனினும் இவ்வாற்றுக்குரிய இப்பெயர், பண்டைக் காலம் முதலே வழங்கி வருவதைப் பிறசான்றுகள் வழியே காட்டுகின்றார். (பக்-37, 38)

'வான்மீகி இராமாயணத்தில், குரங்குப் படைகளைத் தாமிரபரணி ஆற்றைக் கடந்து செல்ல சொல்லும் இடத்தில் குறிப்பிடப்படுகிறது. வியாசபாரதத்தில் தாம்பிரப் பரணித் துறை புண்ணியடத் துறைகளுள் ஒன்று எனச் சுட்டப் படுகிறது காவியமன்னரான காளிதாசன், தாமிரபரணி நன்முத்துக்கள் நல்கும் பேராறு என்று புகழ்ந்துள்ளார். அசோகரது கிர்நார் கல்வெட்டுக் கட்டளைகளில் தாமிரபரணி சொல்லப்படுகிறது, என இவற்றைத் தொகுத்துத் தருகின்றமை நோக்குதற் குரியது.

இந்நிலையில், தாமிரபரணியும், இதன் திரிபாகச் சுட்டப்படும் தாப்ரபனேயும், தமிழ் மக்களால் சுட்டப்படாது, இந்தியாவின் பிறபகுதியினராலும், பிறநாட்டாராலும் சுட்டப் படுவதைக் காண்கின்றபோது, சில எண்ணங்களை எண்ணத் தோன்றுகிறது.

'தாமிரபரணி' என்பது இயல்பான பெயராக இருந்தாலும் மருவிய வழக்காக இருப்பினும் இரண்டுமே தமிழ்ப்பெயரன்று. முதலில், தாமிரபரணியின் பொருளையும், அதன் தோற்றத் திற்குக் கூறப்படும் காரணங்களையும் நோக்கலாம்.

1. இவ்வாற்று நீரில் செம்புச் சத்து இருத்தலே இதற்குக் காரணம் என்பது. தாமிரம் என்பது செம்பு. இது வடமொழிச் சொல். பொருநை என்ற சொல் பரணி எனத் திரிந்திருக்கக்கூடும் என்பது கால்டுவெல் கருத்து. எனவே தாமிரச் சத்து நிறைந்த இது தாமிரப் பொருநை என வழங்கப்பட்டு, இதுவே தாமிரபரணி எனத் திரிந்திருக்கலாம்.[56]

2. தாம்ரவிருஷபர்ணம் (சந்தன மர இலை) என்ற வடமொழிப் பெயரினின்றும் மருவிய பெயராக இது இருக்கலாம்.[57]

இந்நிலையில் 'தண்பொருநை'யின் மருவிய வழக்காகத் தாமிரபரணி யிருப்பினும், வடமொழியாளர் இவ்வாற்றிற்கு வழங்கிய காரணப்பெயராக இருப்பினும், வடமொழியாளர் தொடர்பால் எழுந்த பெயர் என்பது புலப்படுகிறது. இந்நிலையில் இப்பெயர்த் தொடர்பாக இலங்கையும் இப்பெயரைப் பெற்றது என்ற நிலையினை நோக்க, தமிழகத்திற்கு வந்த ஆரியர், இலங்கையை அடைந்தபொழுது தமிழகம், இலங்கை இரண்டு நிலப்பகுதிகளின் ஒப்புமை, அருகாமை, நதிகளின் தன்மை கருதி இப்பெயரைச் சூட்டி யிருக்க வாய்ப்புண்டு. இக்கருத்தையே வரலாற்று அறிஞர் கே.கே.பிள்ளையும் தம் நூலில் குறிப்பிடுகின்றார்.[58]

---

56. பொருநை நாடு — ,, ப-36.

57. பொருநை நாடு — ,, ப-36.

58. Perhaps the most acceptable explanation for the bestowl of the name Tambapanni to a town and to the island is that one group of Aryan immigrants who came to South India and thence proceeded to Sri Lanka might have employed these names which they had become familiar in South India. This too, is nothing more than an empirical guess.

—South India and Sri Lanka-P 5.

இரண்டாவது, விசயன் தொடர்பு படுத்தப் படுவதும் இவண் மேற்கண்ட கருத்திற்கே அரணாகிறது.

'விசயன் என்ற மகதநாட்டு மன்னன் இலங்கையில் முதன்முதலாகக் குடியேறினான். இவன் இலங்கையில் குடியேறும் போது இலங்கையில் அரசர்கள் யாரும் இல்லை என்றும், அங்கு அப்பொழுது வாழ்ந்தவர்கள் நாகரிகம் இல்லாத காட்டு மனிதர்களே என்றும் வரலாறு கூறுகிறது. விசயன் தான் குடியேறிய இடத்தைத் திருத்தி, நாடாக்கி அரசாளத் தொடங்கினான். இங்ஙனம் இவன் அமைத்த நாட்டைத் தாமிரபரணி என்று வழங்கினான். இவன் மகத நாட்டிலிருந்து தமிழ் நாட்டுக்கு வந்து பாண்டியன் மகளை மணந்து கொண்டு பாண்டிய நாட்டின் தென்பகுதியில் உள்ள தாமிரபரணி ஆற்றின் கரையில்வாழ்ந்திருக்கவேண்டும்என்றும் இதன் நினைவாகவே இலங்கையில் முதற்கண் தான் குடியேறிய இடத்தைத் தாமிரபரணி என்று வழங்கினான் என்றும் டாக்டர் கால்டுவெல் கருதுகிறார், எனவும் தெரிகிறது,'[59]

விஜயன் தொடர்பாகப் பிறர் கருத்தும் உண்டு.[60]

மூன்றாவது கருத்தாக அமையும் இராவணன் தொடர் பானதும் இவண் ஆரியர் தொடர்பையே எடுத்துக்காட்டு கிறது. இச்சொல் 'த்வீப ராவண' என்றிருந்திருக்க வேண்டும் என்றும் அதுவே கிரேக்க மக்கள் நாவில் புகுந்து 'தாப்ரபனே' என்றாகியிருக்க வேண்டும் என்றும் மாக்ரிண்டில் என்னும் வரலாற்றாசிரியர் கூறுகிறார், என்ற எண்ணத்தை

---

59. பொருநை நாடு — பக். 38, 39.

60. Lankadipa is said to ha e acquired the additional name, Tambapanni, from the circumstance that the hands of Vijayas weared men were reddened by the coppor coloured sand when they threw themselves down at their landing place and touched the earth. A variant of this belief is that Vijaya and his followers applied the name Tambapanni on account of the red colour of the laterite which is so charecterestic of the region in which they landed. This is legendary and it seem to have been invented to explain the name Tambapanni — South India and Sri Lanka —P.4.

வி. எஸ். வி. இராகவன் தனது பல நூல்களிலும் சுட்டு கின்றார்.[61]

இவை போன்ற பல கருத்துகள் அறிஞர்களால் கூறப்படு கின்றன.[62]

இந்நிலையில் பொதுவாகப்பார்க்க, தாப்ரபனே, தாம்பபன்னி என்று இலங்கையைச் சுட்டும் நிலை பிற பகுதி மக்களால் கி. பி. முதல் நூற்றாண்டுக்கு முன்னர் இருநது வந்தது என்பது தெளிவாகிறது. 'தாப்ரபனே' என்ற சொல் ஆரியர் சார்பாக வழங்கப்பட்டது என்பதும் இவண் ஓரளவிற்குப் புலனாகின்றது.

நாகதீவம்

நாகர்கள் வசித்த காரணத்தால் இப்பூமி நாகதீவம் எனப் பட்டது. ஆதிக் குடிகளாக விளங்கியோர் நாகர் என்பதை இலங்கையின் தொல்குடிகள் வரலாறு விளக்குகின்றது. நாகவழிபாடு தமிழரிடம இருந்த பழம் வழிபாடு, எனவே 'நாகர்' என்ற பெயர் குலப்பெயராகவும் இடப்பெயராகவும் தமிழர்களிடம் வழங்கப்பட்டு வந்ததை வரலாறு தருகின்றது. தமிழகத்தல் காணப்பட்ட நாகர் தொடர்பான பல பெயர்

61. பெரிப்புளூஸ்—ப. 274.

இராவணனால் ஆளப்பட்டத்தீவு என்பது இதன் பொருள்
— யுவான் சுவாங். ப — 151

62. தென்னிந்தியாவில் தாமிரபரணி ஆற்றோரத்தில் வாழ்ந்த மக்கள் இந்த நாட்டில் வந்து குடியேறியதன் பயனாக இதற்குத் தாமிரபரணி எனப்பெயர் கொடுத்தார்கள் எனக் கொள்ளுதல் பொருத்தமுடையதாகும். பொதிய மலை யிலே ஊற்றெடுத்து, கொற்கையிலே கடலோடு கலக்கும் தாமிரபரணி நதிமுன்னொருபோது கொற்கைக்குக்கிழக்கே ஓடியது. கிழக்கே ஓடிய தாமிரபரணி இலங்கை வரையும் சென்றதனால் இலங்கையினுள்ளும் பாய்ந்தது. அதன் பயனாகவே ஆற்றின் பெயரை ஈழத்தினுக்கும் வழங் கினார்களென்று சொல்லலாம். முன்னொரு காலத்தில் இப்பொழுது கன்னியாகுமரிக்குத் தெற்கிலே கடல் இல்லாதபொழுதுதான் தாமிரபரணி நதி இலங்கையில் ஓடிக்கொண்டிருந்திருக்க வேண்டும்.

களைச் சங்க இலக்கியம் தருகின்றது. நாகப்பட்டினம், நாகர்கோவில் போன்ற ஊர்ப்பெயர்களும் உள. இந்நிலையில் நாகதீவம் என்ற இலங்கையின் பெயரையும் நாம் உணர்ந்து கொள்ளுதல் இயலுகிறது. இலங்கையில் நாகர்கள் பற்றிய தமது எண்ணமாக, 'கிறிஸ்து பிறப்பதற்கு முன் வெகு ஆண்டு காலமாக வடக்கு ஈழத்திலே நாகப் பேரரசு தலை நிமிர்ந்து நின்றது. அதன் பயனாக வடக்கு ஈழம் நாகநாடு என்னும் பெயரைப்பெற்றுச் சிறப்பாகத் துலங்கியது. கிறித்துவுக்குப் பின்னர் நான்காம் நூற்றாண்டு முதல் ஏழாம் நூற்றாண்டு வரை நாகப்பேரரசின் வலிமை குன்றியது என்கின்றார், என்றுரைக்கின்றார் அருள். செல்வநாயகம் தமது சீர்பாதகுலம் என்ற கட்டுரையின் கண்[63] மேலும் 'தமிழ் உணர்ச்சி' நூலில் கா. பொ. இரத்தினம்[64] 'இத்தகைய இலங்கையின் தொல் குடிகள் நாகர் என்பதே சரித்திர ஆராய்ச்சி வெளிப்படுத்தும் உண்மையாகும். நாகர்கள் தமிழறிவிலும். நாகரிகத்திலும் சிறந்து விளங்கிய பழந்தமிழர்களேயாவர். தென்னிந்திய நாட்டிலும் நாகர்கள் வாழ்ந்தனர். நாகர் இனத்தைச் சேர்ந்த பல புலவர்களையும் வீரர்களையும் பற்றிப் பழந்தமிழ் நூல்கள் கூறுகின்றன. இலங்கையின் வடபகுதியில் உள்ள யாழ்ப்பாணக் குடாநாடு முன்னர் நாகதீபம் எனப்பெயர் பெற்று விளங்கியதென்பது மகாவம்சம் முதலிய நூல்களாற் நன்கு புலப்படுகிறது. நாகர்கள் நாகரிகமாக வாழ்ந்த இந்த நாகதீபத்தினையே மணிமேகலையும் மணிபல்லவம் எனக் கூறு கிறது. இந்த நாகதீபத்திலும் இலங்கையின் ஏனைய பகுதி களிலும் வாழ்ந்த நாகரில் பெரும்பாலானோர் சிங்களவராக மாறினர், என்று கூறும் எண்ணமும் சிந்திப்பதற்குரியது, மேலும் தினமணி இதழில் அண்மையில் வெளி வந்ததொரு கட்டுரை ஒன்றும் மேற்குறிப்பிட்ட எண்ணத்தை வலியுறுத்து மாறு அமைகிறது. தொல்லியல் தொடர்பானது இக்கட்டுரை. 'ஈழத்து வெற்றியும் ராஜராஜன் காசும்' என்பது கட்டுரையின் தலைப்பு. இதில், 'உரக என்ற சொல்' சோழர் களுடன் கொண்ட தொடர்பு பற்றி விளக்கும் கட்டுரை யாசிரியர் குடவாயில் பாலசுப்ரமணியன், 'கலிங்கத்துப்

63 சீர்பாத குலம்—ப. 20.
64. தமிழ் உணர்ச்சி— ப.20.

பரணியில் ஜெயங்கொண்டார் இராஜ பாரம்பரியம் கூறும் போது 'தள வழிக்கும் நகை வேல்விழி பிலத்தின் வழியே தனி நடந்து உரகர் தம் தண் மணி கொண்ட அவனும்' என்று கூறிக் கிள்ளி வளவன் நாககன்னிகை ஒருத்தியை மணந்த வரலாறு கூறுகிறார். இதனை ஒட்டக்கூத்தரும் நாகர் குலமகளைக் கைப்பிடித்த கோவும் என வலியுறுத்துகிறார். சூரவாதித்த சோழன் என்பான் நாக கன்னிகை ஒருத்தியை மணந்ததாகச் செவ்வந்திப் புராணமும், உறையூர்ப் புராணமும் கூறுகின்றன. மேலும் பெரும்பாணாற்றுப் படையில் குறிக்கப் பெற்றுள்ள 'திரைதரு மரபின் உரவோனும்' என்பதற்கு நச்சினார்க் கினியர் உரையும், நாகை காரோணப் புராணம் மற்றும் திருப்பனந்தாள் புராணமும் சோழமன்னன் நாகநாடு சென்று நாகநாட்டு மங்கையை மணந்ததைக் குறிப்பிடுகின்றன. பல்லவர்களின் வேலூர் பாளையச் செப்பேடு பல்லவ மன்னன் ஒருவன் நாகநாடு சென்று நாகர் குலமகளை மணந்த செய்தியைக் குறிப்பிடுகிறது. மணிமேகலை மற்றும் பிற இலக்கியங்கள் புராணங்கள் கூறும் செய்திகள் அனைத்தையும் தொகுத்து நோக்கும் போது சோழனும் பல்லவனும் சென்ற நாகநாடு இலங்கையின் வடபகுதியான நாகதீபம் என்பது தான் என்பதை அறிய வேண்டும்' என இயம்பிச் செல்கின்றார். எனவே நாகதீபம் என்பது இலங்கையின் ஒரு பகுதியைக் குறித்ததா அல்லது இலங்கை முழுமையும் குறித்ததா என்பது மேலும் ஆராய்ச்சிக்குரியது. மேலும் இலங்கையின் பழங்குடிகள் நாகர் வேடர் இயக்கர் என அறியும் போது இவர்கள் இலங்கை முழுவதும் வசித்து வந்திருந்தார்கள் எனினும், வடபகுதியில் மிகுதியாக நாகர்கள் குழுமி வாழ்ந்த காரணத்தால் இப்பெயர் இப்பகுதியைக்குறித்து வழங்கப்பட்டு இருக்கலாமா எனவும் எண்ணலாம்.

**நித்தில துவீபம்**

முத்துக்கள் இலங்கைக் கடல்களிலே விளைகின்றன. இதனைக் கருதியே முன்னாளில் நித்தில துவீபம் என்ற சிறப்புப் பெயரைக் கொள்ளலாயிற்று.[65] முத்துச் சலாபம் என்றதொரு ஊர் கொழும்புக்கு அருகில் இருந்துள்ளது. இன்று அவ்வூர்

65 விபுலானந்த அடிகள்—ப—3.

'சிலாவ' என மருவி வழங்கப்பட்டு வருகின்றது. எனவே முத்துகட்கும் இலங்கைக்கும் உள்ள தொடர்பு தெரியவருகிறது. இலங்கை முத்து தமிழக முத்து அளவிற்குப் போற்றப் பட்டுள்ளது என்பதும் வரலாறு தரும் எண்ணமாகும். இந்நிலையில் இரத்தின தீவம் போன்று, கிடைத்த சிறப்புமிகு பொருள் முத்து என்ற நிலையில், இப்பெயரையும் பிற மொழியாளர் சூட்டியிருக்கலாம்,

**பாலஸிமுண்டு**

பெரிப்புளூஸ் தனது நூலில் (கி.பி.முதல்நூற்) பாலஸி முண்டு என்ற தீவு மிகப்பண்டைய மக்களால்'தாப்ரபனே' என வழங்கப்பட்டது என்கிறார் (ப – 270)[66] இதற்கு விளக்கம் எழுதும் வி.எஸ்.வி. இராகவன், 'இச்சொல் பாலயோஹினி, பாலசந்நியாசி அதாவது புத்தபிரானாரின் தம்மக் கொள்கை விளங்கும் மலைநாடு என்ற பொருளைத் தரும். ஆக இது புத்தமதம் பரவியிருந்த இலங்கையைக் குறிப்பிடும்.'

'பாலசிமுண்டு என்ற சொல் 'பாலிய சிம்மேந்திரன் நாடு என்றதன் திரிபாகவும் இருத்தல் கூடும் எனக் குறிப்பிடப் படுகிறது' (ப – 271) எனக் கூறிச் செல்கின்றார்.

இந்நிலையில் புத்த மதம் கி.மு. மூன்றாம் நூற்றாண்டி லேயே இலங்கையில் பரவத் தொடங்கிய தன்மையையும் பெரிப்புளூஸ் கி. பி. முதல் நூற்றாண்டில் இப்பெயரைச் சூட்டும் தன்மையையும் நோக்க, புத்தமதம் மிகச் செழிப்பாக வளர்ந்த நிலையில், புத்த மதத்தாரால் சூட்டப்பட்ட பெயராக இது இலங்கைக்குரியதாக அமைந்திருக்கலாம் எனத் தோன்றுகிறது. இது தமிழ்ப்பெயரன்று. வடமொழிப் பெயராக இருந்து திரிந்த பெயராக அமைந்திருத்தலே பொருத்தமானதாகத் தெரிகிறது.

'பிற்காலத்தில் கிரேக்கர், உரோமர் ஈழத்தைப் பலாசிமுண்டு என்று குறிப்பிட்டுள்ளார்கள். மேலும் பழைய சீழமண்டலம் எனும் பெயர் திரிந்து பலாசிமுண்டு என்றாயிற்று' என்ற எண்ணமும் அமைகிறது.[67]

---

66. 'The periplus Shows that the Name Taprobane had been replaced by palaesi mundu –South India and Sri Lanka-p-4.

67. ஈழமும் தமிழரும்—ப – 11

மேலும், 'இலங்கையைப் பற்றிக் குறிப்பிடும் தாலமி, (கி.பி. 119-161) இலங்கையைப் பாலஸிமுண்டுஸ் என்ற பெயரால் விவரித்துள்ளார். ஆனால் அவர் பிளினி கூறும் நகரங்களையோ அல்லது வர்ணனைகளையோ கொடுக்கவில்லை. இச்சொல் புத்த தருமம் பரவின தீவு என்று பொருள்படும். பாலசந்நியாசி அல்லது யோகி விளங்கிய தீவு என்றும் கூறப்படுகிறது. பாலஸிமந்திரா என்பதே பாலஸிமந்துஸ் என்று திரிந்தது என்றும் கூறப்படுகிறது. மற்றும் மந்துமலை, ஒற்றைக்கல் மந்து போல, அச்சொல் ஒரு மலையைக் குறிப்பிட வேண்டும். ஆடம்ஸ்பீக் என்னும் சிகரத்தின் உச்சியில் புத்தபிரானாரின் திருப்பாத சின்னங்கள் உள்ளன. அது ஸ்ரீபாத் என்றும் வழங்கப்படுகிறது. இங்குப்பாலயோகினி வந்ததாக மார்க்கோபோலோவும் எழுதியுள்ளார். (மார்க்கோபோலோ—பக் 56—57) சிலர் பாலிஸிமுண்டுஸ் என்ற நகரம் இலங்கையில் இருந்த அனுராதபுரத்தையே குறிப்பிடுகிறது என்றும், சிலர் இச்சொல் இரத்தினபுரத்தைக் குறிப்பிடுகிறது என்றும் கூறுகின்றனர்' என தனது பிளினி (கி.பி.23-79) நூலில் விளக்குகின்றார் வி.எஸ்.வி இராகவன். (ப—81). ஆனால் மலையென்று பொருள்படும் முண்டு அல்லது மந்து என்ற சொல் அதில் இருப்பதால் அது ஆடப்ஸ்பீக்கையே குறிப்பிடவேண்டும் என்றும் இவர் இயம்புகின்றார்.

### மாணிக்கத் துவீபம்

கிரேக்கர் தமக்கு வேண்டிய பதுமராகக் கற்களை வாங்கியதனால் இந்த நாட்டினுக்கு மாணிக்கத் துவீபம் எனப் பெயர் சூட்டினார்கள்,[68] மாணிக்கத் துவீபம் கிரேக்க சொல்லா என்ற ஆய்வுப்பார்வை இதன் உண்மையை விளக்க வல்லது.

### மும்முடிச் சோழமண்டலம்

பத்தாம் நூற்றாண்டின் இறுதியில் முதலாம் இராசராசன் என்னும் சோழமன்னன் இலங்கையை வென்று பொலனருவாவைத் தலைநகர் ஆக்கிக் கொண்டான்.

---

68. ஈழமும் தமிழரும்—ப—10.

பதினோராம் நூற்றாண்டிலும் இலங்கை முழுவதும் மும்முடிச் சோழமண்டலம் என்னும் பெயருடன் சோழர்கள் ஆட்சிக்குட்பட்டு இருந்தது. சிலர் ஈழம் மட்டுமே இவரது ஆட்சிக்குட்பட்டு அதுவே மும்முடிச் சோழமண்டலம் என்ற பெயருடன் விளங்கியது என்றும் சுட்டுகின்றனர்.[69] இது மேலும் ஆய்விற்குரியது. எனினும் இச்சொல், தமிழ்ச்சொல் என்பதும், இராசராசன் சூட்டிய பெயர்என்பதும் விளக்கம் பெறுகின்றன.

**ஸ்ரீலங்கா**

இந்த நாட்டினை மட்டும் தாயகமாகக் கொண்ட சிங்களவர் தங்களது மரபில் வந்த சிங்களம் என்னும் சொல்லைக் கைநழுவ விட்டு இலங்கா, ஸ்ரீலங்கா எனக் கொள்ளலானார்கள். இவர்கள் சிங்களம், சிங்களத் தீவு என்னும் பெயர்களைத் துறந்து ஸ்ரீலங்கா எனக் கொண்டனர். சிங்களம் என்னும் சொல்வழி வந்த திரிபாதனால் தான், இன்று ஸ்ரீலங்கா என்று வழங்கும் இந்நாட்டைச் சிங்களவர் அன்று திரிசிங்களம் என அழைத்தார்கள். பிகிற்றி, உறுகுணை, மாயரட்டை என மூன்று பிரிவாக இந்த நாடு ஆட்சியின் பொருட்டுப் பிரிந்திருந்தமையாற்றான் இதற்குத் திரிசிங்களமெனப் பெயர் கொடுத்தார்கள்.[70] என்ற கருத்துகள் இது குறித்து அமைகின்றன.

இப்பெயர்களுடன் மேலும் கௌதம புத்தரது காலத்திலே நச்சதீவம், வரதுவீபம், மததுவீபம் என வெவ்வேறு பெயர்களாற் காலத்துக்குக் காலம் வழங்கப்பெற்று வந்ததென்று மகாவம்சம் கூறுகிறது[71] மேலும் தார்கிசு, தபோவனம், செரன்துவீபம், குணதிசை ஏதென்ஸ், ட்ரெ-நாடே[72] (Tronate) போன்றவையும் தெரியவருகின்றன. மரகதத்தீவு என்ற அழகான பெயர் இலங்கைக்குரியது என்பர். கி.வ. ஜகந்நாதன்.[73]

---

69. இலங்கையில் இன்பத்தமிழ்—ப—18.
70. ஈழமும் தமிழரும்—ப—12.
71. ஈழமும் தமிழரும்—ப—12.
72. ஈழநாட்டு இடப்பெயர்களில் தமிழின் ஆளுமை—ப-222
73. இலங்கைக் காட்சிகள்—ப—1.

தமிழகம் இலங்கை இரண்டு நாடுகளின் இப்பெயர்களை நோக்க சில எண்ணங்கள் கிடைக்கின்றன.

தமிழகம் இலங்கை இரண்டும் இந்தியாவின் தென் எல்லையில் அமைந்துள்ளன. இவற்றிடையே பல ஒற்றுமை காணப்படுகிறது. பல மாறுபட்ட சூழல்கள் காரணமாக வேறுபாடுகளையும்இந்நாடுகளில் நாம் காண்கின்றோம்.'தமிழகம்' எனும் தமிழ்த் தொடர்பான பெயரைத் தவிர (சென்னை இராஜ்யம் தவிர) பிறபெயர்களைக் கொள்ளாத நிலையில், இலங்கையின் பிறபெயர்கள், மேலும் பல செய்திகளைத் தெரிவிக்கின்றன.

தமிழகத்தைப் பொறுத்தவரையிலும் கி. பி. 12 - ஆம் நூற்றாண்டு வரையிலும் தமிழ் மன்னர்களால் ஆளப்பட்டது. பின்னர் வந்த பிற சமயத்தார், பிறநாட்டாரும் தங்கள் நோக்கங்களில் வேறுபட்டுத் திகழ்ந்தனர். எனவே பிற பெயர்களைத் தமிழகத்திற்கு அவர்கள் சூட்டவில்லை. சில ஆண்டுகள் ஆங்கிலேயரால் சுட்டப்பட்ட பெயரும் இன்று மாற்றப்பட்டு விட்டது.

ஆயின் இலங்கை, தாப்ரபனே தொடங்கி இன்றைய ஸ்ரீலங்கா வரையிலும் பல்வேறு பெயர்களைப் பெற்றுள்ளது. இதற்குக் காரணம் தமிழர்கள், சிங்களவர்கள் இருவரின் ஆட்சி ஒரு நிலை. இரண்டாவது பிறநாட்டார் தங்கள் மொழியில் மொழி மாற்றிக் கொள்ள, சூழல் இடம் கொடுத்த நிலை (இலங்கை — நெல்லூர் — யாப்ரபனே — யாழ்ப்பாணம்). இவை பல பெயர்த் திரிபுகளுக்கும் இடம் கொடுத்துள்ளது. எனினும் தமிழர்கள் 'தமிழகத்'தைக் காப்பாற்றி வந்தமை போன்று ஈழம் என்னும் பெயரைத் தங்கள் நாட்டின் ஒரு பகுதியாகக் கொண்டு இன்று வரையிலும் அதனைப் போற்றி வந்துள்ளமை, தமிழர்களின் தனித்துவத்தைக் காட்டுவதாக உள்ளது.

அறிவியல் அடிப்படையிலான ஆய்வே துல்லியமான உண்மையினைக் கொடுக்கும் என்பது கே.கே.பிள்ளையின் கருத்து.[74] எனினும் மேலே கண்ட பெயர் தொடர்பான

74. However it must be observed that the prehistoric excavations and studies in Sri Lanka are not yet founded as quite scintific basis. The conclusion drawn on the scanty

வரலாறுகள், திராவிடர் வாழ்ந்தமையினையே எண்ணுவதற்கு வாய்ப்பு அளிக்கின்றன.

மேலும் தமிழகத்தில் இல்லாத பல விதமான வளங்களைக் கொண்டு இலங்கைத் திகழ்ந்துள்ளமை இப்பெயர்களால்தெரிய வருகின்றது. இரத்தினம், மாணிக்கம், நித்திலம், போன்ற இயற்கை வளங்களும் தத்துவ நிலையில் சைவம் புத்தம் போன்ற வளங்களும் இங்கு மிகுந்திருந்ததையும் நாம் உணர்கின்றோம். மேலும், இவ்வளங்களின் மிகுதி காரணமாக இங்கு வந்து தங்கியோர் வைத்த பெயராகவே இவை இருக்க வாய்ப்பு அமைகிறது. கே. கே. பிள்ளை தம்முடைய நூலில் இலங்கையை நாடிய மக்கள் பற்றி இயம்பும் போது அதன் ஈர்ப்புக்குரிய காரணங்கள் பற்றியும் சுட்டுகின்றார்.[75] பொது நிலையில் அதன் தீவுத்தன்மையும் பல பெயர்கட்கு அடிப்படையாக அமைந்துள்ளது.

இத்தகைய தனிப்பட்ட தன்மைகள் தவிர, இலங்கை தமிழகம் இரண்டும் பற்றிய, தொடர்புடைய, முன்னுரையில் சுட்டிய கருது கோளை உறுதிப்படுத்த இப்பெயர்களும், இலங்கை தமிழகம் தொடர்புடைய பிற பெயர்களும் மிகுதியாகத் துணைநிற்கின்றன.

கடல் கோள் பற்றிய எண்ணம் வலிவு பெறல்; தமிழரின் தாயகம் கடல் கொண்ட தென்னாடு; இலங்கை தென்னிந்தியாவுடன் இணைந்திருந்த ஒருபகுதி என்ற கருதுகோள் இப்பெயராய்வில் உறுதிப்படுமாற்றை இவண் காணலாம்.

இலங்கை, பிறநாட்டார், பிறமதத்தார் நுழைவு காரணமாகப் பெற்ற பெயர்களைக் கண்டோம். இவற்றுள், இலங்கையின் பழம் பெயர்களே மேற்குறிப்பிட்ட கருதுகோள்கட்கு உறுதுணையாவன என்ற நிலையில், இலங்கை, நாகமுனை

material available must necessarily be tentative. It has been rightly said that 'the story about Pre - historie man (in Ceylon)will therefore have to be retold from time to time by different scholors approaching the Problems from different scietific angles.

South India and Sri Lanka - P. 12

75. South India and Sri Lanka. P. 12

தாப்ரபனே என்ற மூன்று பெயர்களையும் பற்றி இவண் சிறிது விளக்கமாக நோக்கி இக்கருதுகோள் பற்றிய உண்மையைக் கண்டறியலாம். இதற்கு, பின்னர் திருமூலரால் சுட்டப்பட்ட சிவபூமி என்ற பெயரும் அரணாக அமைகிறது. இவற்றிற்கு உறுதுணையாக அமையும் தமிழக ஊர்ப்பெயர்கள் பற்றிய விளக்கங்களும், பிற ஆசிரியர் கருத்துகளும் இவண் தேவை கருதி எடுத்தியம்பப்படுகின்றன.

**விளக்கம் — 1**

இலங்கை, இலங்குதல் காரணமாக, இலட்சம் தீவுகள் அருகாமை என்பதன் மரூஉவாக, தீவு என்ற பொருளைத் தரும் வடசொல்லாக என இதற்குப் பல பெயர்க் காரணங்களை அறிஞர் சுட்டுகின்றனர். தமிழ் இலக்கியம் இதனைத் தொன்மா விலங்கை எனச் சுட்டுகிறது, அறிஞர் பலரின் கருத்து வட சொல் இது என்பது ஈழத்தை ஆரியர்கள் பிற்காலத்தில் இலங்கை என்றார்கள் என்ற எண்ணத்தை அடிப்படையாகக் கொண்டும், தீவு என்ற இதன் பொருண்மை கொண்டும் அமை கிறது. இந்நிலையில் தாம்பபன்னி தாப்ரபனே என்று அமையும் பெயர்கள் இலங்கையைக் காட்டிலும் பழமையுடையதாக அமைகின்றன. ஏறத்தாழ 2000 ஆண்டுகட்கு முன்பு எழுந்த புத்த சமய நூல்கள் தாம்ப பன்னியென இலங்கையைக் குறிப் பிடுகின்றன. தவிர பண்டைய தமிழகம் வந்த பிளினி, பெரிப்புளூஸ், தாலமி அனைவரும் இலங்கைக்குத் தாப்ரபனே என்ற பெயருண்மையைச் சுட்டுகின்றனர். "மேற்கு முகமாக இருப்பது பாலிஸிமுண்டு என்று வழங்கப்படும் தீவு. இத்தீவு பண்டைய மக்களால் தாப்ரபனே என்று வழங்கப்பட்டது' என்பது பெரிப்புளூஸ் நூல் பகுதியாகும்.

தாப்ரபனே என்ற பெயரினை, ஆய்வு செய்யும் போது இதுவும் பிறநாட்டார் இட்ட பெயராகவே அமைகிறது. இச் சொல்லினைத் தமிழ் இலக்கியமோ, தமிழரோ சுட்டாமையும் எண்ணத்தக்கது. எனவே இப்பெயரும் இலங்கைக்குப்பண்டு தொட்டே வழங்கப்பட்ட பெயராயினும், தமிழர் இட்ட பெயர் அன்று என்பதே தேற்றம் பெறுகிறது. இந்நிலையில் மூன்றாவதாக ஆய்வுக்குரியதாக அமைகின்றன, நாகமுனை நாகநாடு என்ற பெயர்கள். வேடர், நாகர், இயக்கர் என்ற மூன்று இனங்களும் அவண் வாழ்ந்த பழங்குடிகள் என்பதைப்

பல அறிஞரும் ஒப்புக்கொள்கின்றனர். இவர்களுள் இயக்கர் தமிழகத்தில் வாழ்ந்தமைக்கான, குறிப்புகள் இல்லை; எனினும் திராவிடத் தலைவனாக இருந்த இராவணன் இயக்கரை ஆண்டான் என்ற எண்ணத்தைக் காண்கின்றோம்[76] ஈழத்தில் வாழ்ந்த பழங்குடி மக்களாகவும் இயக்கரைக் காண் கின்றோம். ஆயின். வேடர் நாகர் என்ற இரு இனமும் பற்றிய பல குறிப்புகள், தமிழக வரலாற்றிலும் காணக் கிடைக் கின்றபோது, குமரிப்பகுதி கடலில் மூழ்குமுன்பு இப்பகுதியில் வாழ்ந்த இனமாக இவர்களைக் கருதலாம் என்ற எண்ணம் தோன்றுகிறது. வேடர் பற்றிப் பேசும் போது, தமிழிலக்கியங் களில் முதல் இலக்கியங்களில் வேடர் பற்றிய குறிப்பைக் காண்கின்றோம். வேட்டையாடுதலைத் தொழிலாக உடைய இவர்களது தெய்வமாக முருகன் இருந்தமை போன்ற பல எண்ணங்கள், இலங்கையில் இன்றும் வாழக்கூடிய வேடர் களுடன் மிகப் பொருத்தமாக இணைகிறது.[77]

வேடர்கள் பற்றிப் பலவேறுபட்ட கருத்துகள் இருப் பினும், முருகன் வணக்கம் தமிழர்க்கும் இவர்க்குமுரிய நெருக்கத்தினைத் தெளிவுபடுத்துகிறது.[78]

---

76. ஈழமும் தமிழரும் — பக். 2?, 24, 25.

77. 'The vaddas an ancient people of Sri Lanka are fast dying out. At present there are just a few thousands of them in the jungles of the island. They still continue their traditional occupation of hunting. The time honoured bow and arrow are still part of their outfit. There arethree classes of vaddas. Now one of them the wanniyas, alone continue to be speaking Tamil. The other vaddas are the coastal vaddas and the forest vaddas who are shorter and darker than the wanniyas. The wanniyas dress like tamil villagers of south India, while the others have continued to wear poor clothing conristing of mere barks and leatfy twigs...... South India and 8ri Lanka — P . I3.

78. Anthropologists think that the vaddas do not belong to any single racial stock. On the country the vaddas seem

நாகர் பற்றிய எண்ணங்களும் இவ்வாறே அமைகின்றன. இராமாயணம், மகாபாரதக் குறிப்புகள் இவர்களது இலங்கை வாழ்வைப்பற்றிப் பேசுகின்றன. நாகர் பெயர் கொண்ட பல புலவர்கள் தமிழ்ச் சங்கப் புலவர்களாகக் காண்கின்றோம். வரலாறும் இயக்கரைத் தொடர்ந்து நாகர்கள் இலங்கை வரலாற்றில் இடம் பெற்றமையைக் காட்டுகின்றன.[79] நாகர், இயக்கர் இருவருமே சைவர்கள் என்பதையும் காண் கின்றோம். வேடர்களைப் போன்று இவர்களின் தாயகம் பற்றியும் பல எண்ணங்கள் காணப்படுகின்றன.[80] இருப்பினும் பழங்காலம் தொட்டே தென்னிந்தியா, இலங்கை இருபகுதி களுமே நாகர்களுடன் தொடர்பு கொண்டிருந்தன என்பது வரலாற்றில் தெளிவாகத் தெரிகின்ற ஒரு நிலையாக அமை

---

to constitute a racial blend, mainly of the mediterranean and Australoid stocks... In respcet of phyical features and tradtional occupation the vaddas are akin to the Malavedam jrulas, and Shologas, the Jungle tribes of South India...In Sri Lanka Kataragama has been famous through the ages as the sacred seat of Murugan. It is belived that king Dutugamunu, who Vanquished Ealara, handed over the management of the temple to the vaddas in whose hands it has remained practically to this day. This indicates that the vaddas were the original owners of the sacred shrine of kataragama. It is also significant to observe that the present kapuralas or priests of the temple claim their descent from the vaddas.

—South India and Sri Lanka. pa. 14 15.

79. விபீடணனுடைய செங்கோல் இராவணனது செங்கோற் போல் செம்மையாக நிலைக்காமையினால் ஈழத்தின் வடபாலிலே நாக அரசு உதயமானது.

—ஈழமும் தமிழரும்—ப.25.

80. South Iudia and Sri Lanka—pa.17-21

இன்றது.[81] க. ப. அறவாணன் தன்னுடைய நூலில், இலங்கை, நாகர்களின் நிலமாகவே இருந்தது. இலங்கை வரலாற்று நூல்கள் நாகர்களைப் பற்றிய சிறப்புச் செய்தி களைத் தாங்கியுள்ளன. இலங்கைத் தீவே ஒரு காலத்தில் நாகத்தீவு என்று அழைக்கப்பட்டது எனக்கூறி. ஆக திராவிட மும் இலங்கையும் ஒரு காலத்து நாக வழிபாட்டில் தலைமை பெற்றிருந்தன என்றுரைக்கின்றார்.[82] மேலும்,

'தென் இந்தியாவுக்கே உரிய குடிகளாக நாகர் விளங்கினர். அவர் தம் நாக வழிபாடும் விளங்கியது. இந்நாகரே தன் வலிமையால் தென் இந்தியாவில் இருந்து வடஇந்தியாவுக்குப் பரவினர்'[83] என்ற எண்ணமும் இவண் கருதத்தக்கது.

இந்நிலையில் வேடர்கள், நாகர்கள் பற்றிய பல கருத்து வேறுபாடுகள் இருந்தாலும், தமிழகத்திலும் இலங்கையிலும் தொன்று தொட்டு வாழ்ந்து வரும் இனமாக இருவரும் கருதப் படும் தன்மை, ஒரே நிலப்பகுதியில் வாழ்ந்த நிலையில், கடல் பிரிவு காரணமாக இரு நிலத்திலுமாகப் பிரிந்த இனமாக இருக்கவும் வாய்ப்பு அமைகின்றது.

மேலும், தமிழக மக்கள் காலந்தோறும் இலங்கைக்குச் சென்று வாழ்ந்ததைப்பற்றி, பின்னைய வரலாறுகள் காட்டுகின்றன. ஆயின், வேடர்கள், நாகர்கள் தமிழகப் பகுதி யிலிருந்து சென்றனரா? என்ற எண்ணமும் இவண் எழுகின்ற ஒன்று. ஆயின் சில எண்ணங்கள் இவண் நோக்கத் தக்கன. ஒன்று வேடர்கள், நாகர்கள் இலங்கையிலேயே தொல் பழங் காலந்தொட்டு வாழ்ந்து வருகின்ற ஓர் இனமாகக் கருதப் படுகின்றனர். அடுத்து, இவர்கள் தமிழகத்தினின்றும் சென்றமைக்குரிய சான்றுகள் தெளிவில்லாமை, மேலும் தொல்காப்பிய நூற்பா ஒன்றும் நோக்கத் தக்கது.

---

81. Generally speaking, Sri Lanka, South India and the Dekkan are rich in their rich Naga associations from carlytimes.

— South India and Sri Lanka - pa-17-2

82. தமிழரின் தாயகம் — ப. 93
83. ,, ,, —

பிரிவுபற்றிப் பேசும் போது, தொல்காப்பியம், 'முந்நீர் வழக்கம் மகடுவோடில்லை' என்கின்றது. பிற்காலத்தில் மகளிரையும் அழைத்துக் கொண்டு வெளிநாட்டிற்குச் சென்றனர் தமிழர் எனினும், ஆதியில் அதாவது தொல்காப்பியருக்கு முன்னைய காலப்பகுதியில் தமிழர் வெளிநாட்டிற்குச் சென்றனர் என்ற எண்ணம் புலப்படினும், மகளிரை அழைத்துக் கொண்டு செல்லுதல் இல்லை என்பது தெளிவாகத் தெரிகிறது. இந்நிலையில், இலங்கை கடல்கோள் காரணமாகப் பிரிந்த பின்னர் இப்பழங்குடிகள் தம் மகளிரையும் அழைத்துக் கொண்டு சென்றிருக்க வாய்ப்பில்லை என்பதும், எனவே இவ்விரு பகுதி இனத்தவர்களும் ஒரே நிலத்தவராக இருக்கவே வாய்ப்பு மிகுதியாக உள்ளது என்பதும், இந்நிலையில் கடல் கோளின் போது இரு பகுதி மக்களும் அங்கங்கே பிரிந்து வாழ்ந்திருக்கலாம் என்பதும் பொருத்தமானதாக அமைகின்றது.

இந்நிலையில் நாகத்தீவு என்ற பெயரின் தொன்மையும் முதன்மையும் சிந்தனைக்குரியதாகிறது. மட்டுமன்றி, யாழ்ப்பாணம், மட்டக்களப்பு இரண்டின் பழம் பெயர்களாக, நாக நாடு, நாகமுனை என்ற இருபெயர்களையும் காண்கின்ற பொழுதும் இப்பெயர்த் தொன்மை வலிவு பெறுகிறது. இன்றைய நிலையில், வரலாற்றுச் சான்றுகள் நாக நாடு என்ற பெயரையே முதன்மைப் பெயராக இலங்கை கொண்டு திகழ்ந்தது என்ற முடிவிற்கு அழைத்துச் செல்கின்றன. இப்பெயர் பற்றிய முடிவு தமிழரே பழங்குடிகளாக இங்கு இருந்திருத்தலுக்கும் சான்று பகர்கின்றது. யாழ்ப்பாணப் பகுதி நாக தீபமாக இருத்தலைப்பலரும் சுட்டும் நிலையும், பிறபகுதிகளிலும் வேடர் இயக்கர் போன்ற தமிழர் பற்றிய எண்ணமே புலப்படுவதும் இவண் எண்ணத்தக்கது.

விளக்கம் - 2.

இறையனார் அடியார்க்கு நல்லார் போன்ற உரையாசிரியர்கள், குமரிக் கண்டத்திலிருந்த நாடுகள் பற்றியும், தமிழ்ச் சங்கம் பற்றியும் எடுத்து மொழிகின்றனர். இவர்கள் சுட்டுகின்ற நாடுகளின் பெயர்களை நோக்க, இறையனார், தென் மதுரை, கபாடபுரம், மதுரை ஆகிய இடங்களில் மூன்று சங்கங்கள் இருந்தமையினையும், பாண்டியர் தலைநகரமாக அவை திகழ்ந்தமையினையும், காட்டுகின்றார். இதனை

அறிஞர்களும் ஏற்றுக் கொள்கின்றனர்.[84] அடியார்க்கு நல்லார் 'அக்காலத்து அவர் நாட்டுத் தென்பாலி முகத்திற்கு வட எல்லையாகிய பஃறுளியென்னுமாற்றிற்கும், குமரியென்னு மாற்றிற்குமிடையே எழுநூற்றுக் காவதவாறும், இவற்றின் நீர் மலிவானெனமலிந்த ஏழ் தெங்க நாடும், ஏழ் மதுரை நாடும், ஏழ் முன்பாலை நாடும், ஏழ்பின் பாலைநாடும், ஏழ்குன்ற நாடும், ஏழ்குணகாரை நாடும், ஏழ் குறும்பனை நாடும் என்னும் இந்த நாற்பத்தொன்பது நாடும், குமரி கொல்லம் முதலிய பன்மலை நாடும், காடும், நதியும் பதியும் தடநீர்க் குமரி வடபெருங்கோட்டின்காறும் கடல் கொண்டொழிதலாற், என உரையெழுதிச் செல்கின்றார். இந்நாடுகள் பற்றிக் கூறும்போது க. ப. அறவாணன் அன்று நாடு என்பது தமிழில் கிட்டத்தட்ட தாலுகாவிற்குச் சமம் என்கின்றார். இந்நிலையில் இந்த இடப்பெயர்கள் அல்லது நாட்டுப் பெயர்கள் பற்றி ஆராயும் போது, அன்று வரையிலும் செவி வழிச் செய்தியாக வழங்கி வந்த எண்ணமே இவர்களது இவ்வுரைகட்கு அடிப்படையாக இருந்திருக்கும் என்பதை எண்ணமுடிகிறது. கற்பனையாக இருத்தல் இயலாது என்பது இப்பெயர்களைப் பற்றிச் சிந்திக்கும் போதும் புலனாகிறது.

இறையனார் களவியல், தென்மதுரை, கபாடபுரம் அழிய மதுரை பாண்டியர் தலைநகராயிற்று என்ற எண்ணத்தைத் தருகிறது. இன்றைய மதுரைப் பெயராராய்ச்சி பல அடிப்படையில் இப்பெயர் அமைந்திருக்கலாம் என்ற எண்ணத்தை

---

84. முதல் கடல்கோளால் பஃறுளியாறும், குமரிக்கோடும் கடலால் கொள்ளப்பட்டன. பஃறுளியாற்றின் கரையிலிருந்த தென்மதுரையே பாண்டியரின் தலைநகரும் தலைச்சங்கமிருந்த இடமும் ஆகும். அதன் பின் நிலந்தரு திருவின் பாண்டியன் வடக்கே போய், கபாடபுரத்தைத் தலைநகராக்கிக் கொண்டான். இரண்டாவது கடற்கோளால் கபாடபுரம் கடல் கொள்ளப்பட்டது அதன்பின் மணலூர் பாண்டியனின் தலைநகராக இருந்தது. பின் 3 ஆம் முறைக் கடல்கோளால் அம்மணலூரும், குமரியாறும் அழியவே பாண்டியன் மதுரை வந்து அங்கே கடைச்சங்கத்தை நிறுவினான்.

தமிழ்நாடு — தொல் பழங்காலம்—பக் - 120—121.

அறிஞர்களிடம் தந்துள்ளது.[85] மது, மருதத்துறை போன்றவற்றைக் குறிப்பாகச் சுட்டலாம். 'மதி' தொடர்பாக அமைவது என்பது ஈழத்து அறிஞர் ஒருவரின் எண்ணமாக அமைகிறது. மதி - பாண்டியர் தொடர்பு சிந்திக்கத் தக்கது. மதி — மாதம் கணக்கிடப் பயன்பட்ட நிலையையும் எண்ணிப் பார்க்கலாம். க ப. அறவாணன் வடமொழியாளர்ச் சார்பு காரணமாக வடமதுரையினின்றும் மதுரை பெயர் அமைந்தது என்கின்றார். ஆயின் இறையனார் களவியல் உரையை ஏற்றுக் கொள்ளும் இவர், உரையாசிரியர் குறிப்பிடும் தென் மதுரை என்ற எண்ணத்தையும் ஏற்றுக்கொண்டுள்ளார் என்பது அவரது நூல் காட்டும் எண்ணம். எனவே இத் தென்மதுரையினின்றும் வந்து மதுரையில் தம் தலை நகரை அமைத்துக் கொண்ட நிலையில் தென்னவர்களே ஏன் இப் பெயரைத் தம் தலைநகருக்குச் சூட்டியிருத்தல் கூடாது என்ற எண்ணம் எழுகிறது. மேலும் சங்க இலக்கியத்தில் ஊர்ப் பெயர்கள் (தொகுதி — 1) பற்றிய ஆய்வில், மதுரைக்கு 'மதுரை' என்ற பெயர் இருப்பினும், கூடல் என்ற பெயரையே அவண் மிகுதியாகக் காண்கின்றோம் என்ற எண்ணம் சுட்டப் படுகிறது. அன்று சங்கம் இருந்தமையும், தமிழாராய்ந்தமை மிகுதி காரணமாகவும் தமிழறிஞர் கூடுமிடமாகத் திகழ்ந்த தால் இப்பெயர் அறிஞரிடையே மிகுதியாகச் சுட்டப்பட்டிருக்கும் என்பதும் இணைத்து நோக்கத் தக்கது. மதுரையின் பிறிதொரு பழம் பெயராக அறியக்கூடிய 'ஆலவாய்' பற்றிய எண்ணமும் இக்கருத்தினை மேலும் உறுதிப்படுத்த வல்லது.

அடியார்க்கு நல்லார் சுட்டும் இந்த ஏழ்நாடுகள் பற்றிச் சிந்திக்கும் போது இவற்றின் பெயர்த் தொடர்புகளை இன்றும் குமரிப்பகுதி தருகின்றதைக் காணலாம். இலங்கைப் பகுதியிலும் இத்தொடர்பு காணப்படுகிறது. 'ஏழ் தெங்க நாடு

---

85. ஊர்ப்பெயராய்வும் புதிய விளக்கமும் — 1. மதுரை — பக் - 28—34.

என்பது தெற்கு நாடு என்பதன் திரிபு என்பர். தெற்கு,தெங்கு, தேங்காய் இரண்டுடனும் தொடர்பு படலாம் என்ற நிலையில், தெங்கம்புதூர், தேங்காய் பட்டினம் என்ற பெயர்கள் எண்ணத்தக்கன. ஏழ்மதுரை நாடு இறையனார் சுட்டும் தென்மதுரையுடன் தொடர்புடையது பாலை நாடுகள் பற்றிய க ப. அறவாணன் கருத்து மீண்டும் எண்ணுதற்குரியது. ஆப்பிரிக்காவுடன் தொடர்பு படுத்துவது சரியானதாகப் புலப்படவில்லை. ஏனெனில் குமரியாற்றுக்கு வடக்கிலும், பஃறுளியாற்றுக்குத் தெற்கிலும் இருந்த பகுதிகளாக இந் நாற்பத்தொன்பது நாடுகளும் சுட்டப்படுதல் இவண் கருதத்தக்கது. மேலும் இந்நாடுகள் இணைந்து காணப்பட்டமையும், சிறிய பகுதிகளாக இவை இருந்திருக்க வேண்டும் என்ற எண்ணமும், பாலைவனம் பற்றிய எண்ணம் தமிழரிடம் இல்லாமையும் இணைத்து எண்ணுதற்குரியன. எனவே எழிற் பாலை என்ற தாவரவகையினைச் சார்ந்து இப்பெயர்கள் சுட்டப்பட்டு இருக்க மேலும் வாய்ப்பு அமையலாம். அடுத்து, குன்றம் பெயர் சார்ந்த ஊர்கள் தமிழகம் எங்கும் இன்று வரை மலிந்து காணப்படுதல் அன்றும் இப்பெயர் அமைந்து இருத்தலை இயல்பாக்குகின்றது. ஏழ் குறும்பனை நாட்டில் அமையும் குறும்பனை என்ற பெயரில்குமரியில் ஓர் ஊர் இன்றும் காணப்படுகின்றது.[86] காரைக்கால் காரைக்குடி என்ற தமிழக ஊர்ப்பெயர்களுடன், இலங்கையின் ஒரு பகுதியாகத் திகழும் காரை நகரும் சுட்டுதற்குரியதாக அமைகிறது. எனவே அடியார்க்கு நல்லார் உரைதரும் இப்பெயர்கள் தமிழ்ப்பெயர்கள் என்பதுடன் வழிவழியாகத்தமிழர்கள் இடத்தையும் ஊரையும் சுட்டி வரும் பெயர்களாகவே அமைகின்றன என்பது மேற்

86. கோவக்கரை,கோவைத்தீவு என்பன சிறப்பான நிறம் உள்ள பொருள் விளையும் தீவையும் அதன் கரையையும் குறிப்பிடுவதால் கோவை என்ற சொல்லின் அடியாகப் பிறந்தகோவைத் தீவே, கோவைத் திட்டு ஆகி, கோரல் ரீப் (CoralReaf) ஆயிற்று. கோவைக் கனி, சிவப்பு நிறமுள்ள கனி...ஆகையால் யாழ்ப்பாணத்துக்கு அருகில் இருக்கும் காரைத்தீவு பவளத்திட்டாக ஒரு காலத்தில் இருந்திருக்க வேண்டும். கொராலியம் ரீப் என்பது சுருங்கி, கோரல் ரீப் என்று வழங்கப்பட்டது—பிளினி—ப. 84.

சுட்டிய கருத்தினை மேலும் வலுவாக்குகிறது. எனவே இப் பகுதியின் ஒரு பகுதியாக, தமிழர் வாழ்ந்த பகுதியாக இலங்கை இருத்தலுக்கு மேலும் உறுதி கிடைக்கிறது.

**விளக்கம்—3**

இலங்கையின் முதல் பெயர் தமிழாக இருந்திருந்த நிலைக்கும் இலங்கையைச் சார்ந்து, தமிழர் வசித்த நிலப்பகுதி யாகக் குமரியின் தெற்குப்பகுதி இருந்தது என்பதற்கும் மேலே சுட்டப்பட்ட எண்ணங்கள் அரணாக அமைகின்றன. மேலும் இப்பகுதி 'பஃறுளி ஆற்றுடன் பன்மலை அடுக்கத்துக்குமரிக் கோடாக' இருந்தமை காரணமாக ஓரளவிற்குப் பெரிய பகுதி யாக இருந்திருக்க வேண்டும் என்பதும் தெளிவாகிறது. இப் பகுதிகள் கடலில் மூழ்கி, எஞ்சியிருந்த பகுதிகளே இலங்கையும், இலங்கைச் சார்ந்த தீவுகளுமாம் என்ற எண்ணத்தை மேற்சுட்டிய எண்ணங்களுடன் தமிழர் தொடர்பான எண்ணங்களும், அவர்களது ஊர்ப்பெயர் தொடர்பான வரலாறும் தெளிவு படுத்துமாறு அமைகின்றன.

இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள் தொகுதி—2 நூல், இடைக் கால இலக்கியங்கள் சுட்டும் ஊர்ப்பெயர்களை ஆராய்ந்து சில எண்ணங்களை வெளிக் கொணர்ந்துள்ளது.[87] அவற்றுள் ஒன்று தமிழர் கடலுக்கஞ்சி, தம் குடியிருப்புகளைக் குமரிப் பகுதியில மிகுதியாகப் பண்டு அமைத்துக் கொள்ளவில்லை என்ற க. ப. அறவாணனின் கருத்துக்கு அரணாக அமைகிறது.

பக்தியைப் பரப்ப முயன்று கோயில் தோறும் சென்று பாடிய நாயன்மார்கள், ஆழ்வார்கள் பற்றிய எண்ணத்தை வரலாறு தருகிறது. இவர்கள் சென்று பாடுமுன்பாகவே அக் கோயில்கள் இருந்தன என்பது உண்மை. கோயில்கள் பாடப் படும் போது, அத்தலங்களையும் இணைத்தே அவர்கள் பாடு கின்றனர். இவ்விதம் பாடும் போது நமக்குப்பல ஊர்ப்பெயர் கள் தெரிய வருகின்றன. இவ்வாறு தெரிய வரும் ஊர்கள், தமிழகத்தின் வடக்குப் பகுதியிலும், நடுப்பகுதியிலும் உள்ளன வாகப் பெரும்பாலும் அமைகின்றன. சில ஊர்கள் பாண்டிய நாடு, தொண்டை நாடு, கொங்கு நாடு சார்ந்தனவாக அமை கின்றன. தென்பகுதி எனப்பார்க்கும் போது, திருவட்டாறு,

87. இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள்—பக்-301—302

திருவனந்தபுரம், அகத்தீசுவரம் என ஒன்றிரண்டு பெயர்களே தோற்றம் தருகின்றன. ஏன் தென்பகுதியில் மிகுதியான கோயில்கள் அல்லது குடியிருப்புகள் இல்லை என்பது இங்கே எழுப்பப் படும் வினாவாகும்.

தமக்கு அருகாமை அல்லது தெரிந்த ஊர்களைப் பற்றி மட்டும் இவர்கள் பாடவில்லை. வட இந்தியா, ஈழம் போன்ற இடங்களில் உள்ள இறையையும் தலத்துடன் இணைத்து இவர்கள் பாடியுள்ளனர். இவற்றைப் போன்று அன்று குமரிப் பகுதியிலும் கோயில்கள் இருந்திருப்பின் இவர்கள் பாடியிருப்பர்.

சங்க இலக்கியங்கள் சுட்டும் ஊர்ப் பெயர்களாகவும் தென் பகுதிப் பெயர்கள் மிகுதியாக இல்லை இன்று குமரியில் சிவன் கோயில்கள் பன்னிரண்டினைச், சிறப்புப் பெற்றதாகக் காண் கின்றோம். இவை அனைத்தும் பிற்காலத்து எழுந்தவை. சுசீந்திரம் கோயில்கல்வெட்டுகளில் பழமையானது கி. பி 8 ஆம் நூற்றாண்டினது என்ற எண்ணம் உண்டு.

இங்கு வசிக்கும் மக்களில் பலர், குறிப்பாகச் செட்டியார், நாடார் போன்றோர் தமிழகத்தின் மத்திய பகுதி, குமரிக்கும் வடபகுதியினின்றும் வந்தவர் என்பதும் மக்களிடையே காணப் படும் ஒரு எண்ணமாக அமைகிறது.

ஊர்ப்பெயர்க் கூறாக மிகுதியாக அமையும் 'விளை' என்பதும் இப்பகுதியில் குடியிருப்புகள் மிகுதியாக இல்லா திருந்த நிலையையே காட்டுகிறது.

கோயில் இல்லா ஊரில் குடியிருத்தல் கூடாது என்ற எண்ணமும் தமிழருடையது.

எனவே பாண்டியன் கடற்கோளுக்கு அஞ்சி, தம் தலை நகரைமாற்றிக் கொண்டதுடன், குடிமக்களில் பலரும் குமரிக்கு வடக்கில் பெயர்ந்து சென்றிருக்க வேண்டும். வேளாளர் குறுநில மன்னர்களாகச்சிறுசிறு பகுதிகளில் ஆட்சி செய்திருக்க, மிகக் குறைந்த மக்களே குமரியில் வாழ்ந்திருக்க வேண்டும். பின்னர் காலப் போக்கில், மக்கள் மீண்டும் இங்கே குடியிருக்கத் தொடங்கியிருக்கலாம் எனவும் கருதுதல் இயலுகிறது.

**விளக்கம்—4**

திருமூலர் தமது திருமந்திரத்தில் இலங்கையைச் சிவபூமி எனச்சுட்டுகின்றார். இலங்கையில் முதல் குடிமக்களாக நாகர், வேடருடன் இயக்கர் வசித்துள்ளனர். இயக்கர் தலைவனாக இராவணன் சுட்டப்படுகின்றான். இவன் வணங்கிய தெய்வ மாகச் சுட்டப்படுவது சிவன். மேலும் இங்கே அமையும் திருகோணமலையில் உள்ள கோவில் தொன்மையானதாகச் சுட்டப்படுகிறது.[88] திருக்கேதீச்சரம் பற்றி இயம்பும் அறிஞர், 'ஈச்சுரம் என்னும் பெயர்களையுடைய ஊர்கள் ஈழநாட்டில் பல உண்டு. ஈசன் கோயில் ஈச்சுரம் எனப்படும். திருக்கேதீச்சுரம்—இலங்கையின் மேற்குக் கரையில் இராமேச்சுரம் தீவிற்கு நேர் கிழக்கே அமைந்த இச்சிவாலயம் கட்டப்பட்ட காலத்தை அறிய முடியாதிருக்கிறது. மிக மிகப் பழைய காலந்தொட்டே ஈழநாட்டில் புகழ்பெற்ற பலசிவாலயங்கள் இருந்திருக்கின்றன. இராவணனது மனைவி மண்டோதரியின் தந்தையாகிய மயன் என்பவனால் இச்சிவாலயம் கட்டப்பட்டதென புராணங்கள் கூறும், எனச் சொல்லிச் செல்கின்றார்.[89] மேலும் தமிழகத்தில் உள்ள 'இராமேச்சுரம்' என்ற கோயிலும் இராமன் வணங்கிய சிவன் தலம் என்ற நிலையில் தொன்மையுடையது. இதனையும், இதனோடு திருகோணச்சுரம், திருக்கேதீச்சுரம், நகுலேச்சுரம், முனீச்சுரம் என்ற நான்கு சிவத் தலங்களையும் இணைத்துப்பஞ்ச ஈச்சுரத்தலங்கள் என்ற வழக்கு இலங்கையில்

---

88. இப்பழம் பெருந்தலம் இராவணனோடு தொடர்பு படுத்தப்பட்டுள்ள பழமை வாய்ந்தது. இது அமைக்கப் பட்ட காலமும் அறியக் கூடியதாயில்லை. இராவணன் காலத்துக் கோயில் கடல் கொள்ளப்பட்டு, அதன் அழிபாடுகள் கடலுக்கடியில் இருப்பதாகப் பல ஆழ்கடல் ஆராய்ச்சியாளர் கூறியுள்ளனர். சில விக்கிரகங்களும் அண்மையிற் கடலிற்கண்டெடுக்கப்பட்டுள்ளன. இது இலங்கையின் கிழக்குக் கரையிற் வங்கக் கடலோரத்தில் முக்கோண வடிவக் குன்றின் மீது அமைந்துள்ளது. மூன்று கோயில்கள் இம்மலை மேல் இருந்துள்ளன.
—ஈழநாட்டு இடப்பெயர்களில் தமிழின் ஆளுமை-ப-223

89. ஈழநாட்டு இடப்பெயர்களில் தமிழின் ஆளுமை-ப.223.

உண்டு. இராமேச்சுரம் இலங்கையின் அருகாமையில் காணப் படுவதும், இதனை இணைத்துச் சுட்டுவதும், இதுவும் இலங்கையோடு இணைந்திருந்த தமிழகப்பகுதி என்ற நிலையில் தொடர்பு காண்பதும் பொருத்தமாக அமைகிறது.

இலங்கையில் சிவத் தலங்கள் மிகுதியாகக் காணப்பட்ட தன்மையுடன் இதனைத் திருமூலர் 'சிவபூமி' என்று இயம்புவதும் தொடர்புறுகிறது. தமிழகத்தில் சைவம் இருந் திருந்த காலத்தும், திருமூலர் தமிழகத்தைச் சுட்டவில்லை. இலங்கையையே சிவபூமியாகக் காண்கின்றார். எனவே அவருடைய பார்வையில், சைவம் தழைத் தோங்கிய பூமி அது என்ற எண்ணம் இங்கே வெளிப்படுகிறது. அண்மையில் தமிழ்ப் பல்கலைக் கழகத் தத்துவமையம் (காஞ்சிபுரம்) வெளியிட்ட பெரிய புராணம்—ஓர்ஆய்வு என்ற அ.ச. ஞானசம்பந்தன் நூல் இங்கே சிறப்புறகருத்து விளக்கம் தருகிறது. சிவன் திராவிடக் கடவுள், சைவம் தமிழகத்தில் தோன்றிய சமயம் என்பதைத் தமிழ், தமிழகச்சான்றுகளை மட்டும் தொட்டுக் காட்டாது, வடமொழிக்கருத்துகளையும் எடுத்தியம்புகின்ற தன்மை இவரது ஆய்வின் ஆழத்துடன், சைவமதத்தின் வேர் தமிழகத்தில் தொன்று தொட்டு எவ்வாறு வலிமையுறப் பொருந்தியுள்ளது என்பதற்கும் எடுத்துக்காட்டாக அமைகிறது. இலங்கை பற்றிய மேற்சுட்டிய எண்ணங்களும் இவரது கருத்துக்கு வலுவளிக்கக் கூடியதாக அமைகிறது. 'சிவன் தென்னாட்டுக் கடவுள்' (ப—41) இந்தியா முழுவதும் பரவி இருந்த இந்தச் சிவ வழிபாட்டிற்குத் தம் வேத வழக்கில் இடங்கொடுத்தே தீர வேண்டிய சூழ்நிலை உருவாயிற்று என்றாலும் வேத குருமார்கள் இப்படி இடம் தந்து ருத்ரனாகச் சிவனை ஏற்றுக் கொள்ளும் நிலையில் கூட அச்சிவனுடைய பண்புகள் என்று அன்று கூறப் பெற்றவற்றில் பலவற்றை மறைத்து விட்டனர். எப்படியும் ரிக் வேதத்தில் நுழையும் ருத்ரனுக்கு இப்பண்புகளைக் காட்டாமல் மறைத்தனர் என்றாலும் இத்தகைய முயற்சிகள் என்றுமே பலிப்பதில்லை ஆகையால் ரிக்கிலும் ருத்ரன் நுழைய நேரிட்டது. இந்தக் குருமார்கள் செய்த முயற்சிகளை ஒதுக்கி விட்டுக் கண்டால் தொல்பழஞ் சிவவழிபாடு எங்கும் தடைப் படாமல் வேதத்திலும் நுழைந்து, புராண சிவமாக வரும்வரை

சங்கிலித் தொடர் போல் அமைந்து, விளங்கக் காணலாம். சிவவழிபாடு இந்தியாவில் மட்டுமல்லாமல் யாண்டும் பரவி இருப்பதால் மிக மிக நீண்ட காலமாக உலகிடைப் பரவியுள்ளதும் இன்றும் வாழ்வதும் ஆன ஒரே சமயம் சிவவழிபாடு ஒன்றுதான் என்பது விளங்கும் (பக் 56-57.)

போன்ற பல இவரது சிந்தனைகள், பல சான்றுகளை அடிப்படையாகக் கொண்டு பழந்தமிழரின் சமயமாகத் திகழ்ந்தது சைவ சமயம் என்பதை நிறுவ உதவுகின்றன. இந்நிலையில் இலங்கையிலும் சைவத்தின் மேன்மையையும். வளர்ச்சியையும், கோயில்களின் பெருக்கையும் காண்கின்ற போது, இப்பகுதி இணைந்திருந்த நிலையையும் நாம் எண்ணிப் பார்த்தல் இயலுகிறது.

மேலும் இலங்கையின் பழங்குடிகளாகக் கருதப்படுபவர் இயக்கர், நாகர், வேடர். இவர்களது தெய்வங்களாக, சிவன், நாகம், முருகன் கருதப்பட்டனர். இம்மூவர் தொடர்பும் சிந்திக்கத்தக்கது. 'அந்தச் சிவனுக்கும் பாம்புக்கும் உள்ள தொடர்பு அனைவரும் அறிந்ததே' என மேற்சுட்டிய அறிஞரின் கருத்துடன் (ப.50) இலங்கையில் வாழ்ந்த இம்மூவகை இனத்தாரின் தொடர்பும் மேலும் ஆழமாகச்சிந்திக்கப்பட்டால் புதிய எண்ணங்கள் கிடைக்க வழியுண்டு. இம்மூவகை வழிபாடும் பண்டுதொட்டே தமிழகத்திலும் இருந்து வந்துள்ளது என்ற எண்ணமும் இவண் கருதத் தக்கது.

இத்தகையநிலையில், தமிழகம்இலங்கை இணைந்துஇருந்த பகுதி என்பதனை இலங்கையின் பழம் பெயராகவும் முதல் பெயராகவும் தெரியவரும் நாகநாடு என்பதனின்றும், திருமூலர் சுட்டும் சிவபூமி என்ற பெயரினின்றும் நாம் உறுதிப் படுத்திக் கொள்ளல் இயலுகிறது.மேலும் இச்சைவ மதக் கருத்துகளின் விரிவும், ஆழமாகஇலங்கையில் பரவி இருத்தலும் சைவமதம் பழந்தமிழரின் மதமே என்பதற்கும் அரணாக அமைய வாய்ப்புகள் உள. மேலும் சிவ வழி பாட்டிற்கு ஆதியாக நாகத்தை வணங்கும் வணக்கம் இருந்திருக்கலாமா என்பதும் எண்ணிப் பார்க்கத்தக்கது.

ஊர்ப் பெயர் ஆய்வு என்பது உண்மை இதுதான் என்று முடிவுக்கு வரத் துணைபுரியாவிடினும், உண்மைகளை உறுதிப் படுத்துதலுக்கு உறுதியாக உதவவல்லது. இவண் சுட்டப்பட்ட கருதுகோள் மேலும் உறுதிப்படும் வண்ணம் ஊர்ப்பெயர்கள் குறித்த இவ்வாய்வு உதவுவதன் மூலம் இதனைத் தெளியலாம்.

பல இனத்தாரின் தொடர்பும், இலங்கை வந்தாரை வாழ வைக்கும் நிலையில் இருந்த காரணத்தால் அனைவரும் இலங்கையுடன் தொடர்பு கொண்டு இருந்தனர் என்பதும் இலங்கையின் மாறுபட்டபெயர்கள் மூலம் தெரிய வருகின்றது.

மதுரை ஈழத்துப்பூதன் தேவனார் என்ற சங்க புலவர் பற்றிய ஆய்வில் அறிஞர்பலரும் ஈடுபடும்போது, இவரை மதுரையில் வாழ்ந்த இலங்கை ஈழம் சார்ந்த புலவர் என்று கருதிய ஆய்வு நிலையே இதுவரையிலும் இருந்தது. ஆயின் இப்பகுதியில் அமையும் ஈழம்பற்றிய ஆய்வு அக்கருத்து மறுபடியும் ஆய்விற்குரியது என்பதைக் காட்டி அமைகிறது.

# இயல் 3

# ஊர்ப்பெயர் அமைப்பு முறைகள்

தொடக்கத்தில் ஒரு கூற்றுப் பெயர்களாகவும், பின்னர் பொதுக் கூறு சிறப்புக் கூறுடனும் விளங்கிய ஊர்ப்பெயர்கள், பின்னர் மேலும் அடைகளைச் சேர்த்துக் கொண்டு, ஊரின் விளக்கத்தை எடுத்துச் சொல்ல முயன்ற நிலையில் தோற்றம் பெற்றனவே முன் அடை, பின் அடை இணைவுடன் கூடிய ஊர்ப்பெயர்கள்.

எ.கா. ஒரு கூற்று ஊர்ப்பெயர்—**காஞ்சி**

பொதுக்கூறு சிறப்புக்கூறு இணைந்த ஊர்ப்பெயர் —**லக்ஷ்மிபுரம்.**

முன் அடை இணைந்த ஊர்ப்பெயர்—**திருவாவினன்குடி**

பின் அடை இணைந்த ஊர்ப்பெயர்—**வெள்ளியணை வடபாகம்**

தமிழரின் தொடக்ககால வரலாறு தனிப்பெயர்களுடன், பொதுக்கூறு, சிறப்புக் கூறு இணைந்த பெயர்களை மிகுதி யாகத் தருகின்றது. இடைக்காலத்தில் பக்தியின் மிகுதியான செல்வாக்குக் காரணமாக, 'திரு' அடையாக இணைந்த ஊர்ப் பெயர்களும் செல்வாக்கு பெற்றன. இவை பிற ஊர்ப் பெயர் களில் இருந்து இறைச் சிறப்பு பெற்ற ஊர்களைத் தனிப் படுத்தும் நோக்கில் பின்னர் பல ஊர்ப்பெயர்களில் இணைக்கப் பெற்றது என்பதை உணர்ந்து கொள்ளுதல் இயலுகிறது. பின்னர் அரசர்கள் ஊர்ப்பெயர்களை இடுதலிலும், மாற்று தலிலும் தங்கள் செல்வாக்கைக் காட்ட முயன்றபோது பெயர்கள் தொடர்களாகத் தோற்றம் பெற்றன. இவற்றைப் போன்று நிகழ்ச்சிகள், வரலாறுகள் காரணமாகப் பெயர்கள் தோற்றம் பெற்ற நிலையிலும் இத்தகைய தொடர் ஊர்ப் பெயர்கள் தோற்றம் பெற்றன.

இன்றைய நிலையில், ஒரு குறிப்பிட்ட ஊரினை அடுத்து அல்லது ஊரின் ஒரு பகுதி தனி ஊராகச் சுட்டப்படும் தன்மையில், முன் அடை, பின் அடை சார்ந்த ஊர்ப்பெயர்கள் மலிந்து காணப்படுகின்ற தன்மையை ஊர்ப்பெயர்கள் ஆய்வு காட்டுகின்றது.

இத்தகைய அமைப்பு முறை வளர்ச்சியைக்காண, ஓர் எண்ணம் இவற்றிற்கு அடிப்படையாக இருப்பதை விளங்கிக் கொள்ளல் இயலுகிறது. தங்கள் ஊரினை விளக்கமாக அடுத்தவர்க்குச் சுட்டுதல். இது அவர்களின் அடிப்படை எண்ணமாக அமைய, அவர்களின் உளவியலும் இயல்பாகப் புலப்படுவது தெரிகிறது; தனிக் கூற்றுப்பெயர் பொதுமை அடைய, சிறப்புக்கூறு முன் இணைகிறது. விளக்கம் கருதிய நிலை இது. அடுத்து, திரு போன்ற முன் அடை இணைதல் இறைச்சிறப்பு சுட்டும் தன்மை என்பதை நோக்க தமிழரின் பக்தியுணர்வின் உளவெளிப்பாடாக இது அமைவது. தெரிகிறது. பிற முன் அடை, பின் அடை இணைதலுக்கும் விளக்கமே காரணம் ஆகிறது.

எ. கா. தலையாலங்கானம்
இலந்தையடி காலனி

தமிழகம் முழுமையும் இன்று பின் அடை இணைந்த பெயர்கள் காண்பதற்குரியவையாக உள்ளன.

காஞ்சிரோடு தெக்கின்கர
,, வடக்கின்கர — குமரி

திசையின் அடிப்படையில் இவை அமைகின்றன.

குளத்தூர் கீழ்பாகம்
,, வடபாகம்
,, தென்பாகம்—நெல்லை.

இவ்வாறு அமையும் நிலையில் மாவட்டத்திற்கு மாவட்டம் மொழியும் மாறுபட்டு இருப்பதால், இவை வழக்கு ஆய்வுக்கு வழி வகுப்பதையும் காணலாம்.

மணியாச்சி இ
,, ஐ — நெல்லை

கலிநாடு (மேல் வட்டம்)
,, (கீழ் வட்டம்) — திருச்சி

சூலமாணிக்கம் (S No. 76)
,, (S No.110) தஞ்சாவூர்
அகரம் (105)
,, (154) செங்கல்பட்டு

என பல நிலைகளில், இவ்வமைப்புகள் காணப்படுகின்றன. ஆயின் எல்லா அமைப்புகளும் விளக்கம் கருதி அளிக்கப் பட்டுள்ளன என்பது மட்டும் உறுதி.

இவ்வாறு தமிழக ஊர்ப்பெயர்கள் காலந்தோறும் சொல், பொருளில் மட்டுமல்லாது, அமைப்பு முறையிலும் வேறுபட அமைந்து வருவதைக் காண்கின்றோம்.

இத்தகையதொரு உணர்வை இலங்கை ஊர்ப்பெயர் களிலும் பெரும்பாலும் காணுதல் கூடுகின்றது. எனினும் தமிழகம் அளவிற்கு மிகுதியாக ஊர்ப்பெயர்களைத் தொகுத்தல் இவண் இயலவில்லை. ஆதலால் ஒரு சில பெயர்களையே நாம் இனங்காணுதல் இயலுகிறது.

மேலும் இலங்கையைப் பொறுத்த வரையிலும் தமிழ கத்தைப் போன்று கால வாரியாக ஊர்ப்பெயர்களை இனங் கண்டு கொள்ளல் இயலவில்லை. ஏனெனில் ஊர்ப்பெயர்கள் முழுமையாகத் தொகுக்கப்படாமையும், 'களப்பணி' முக்கிய தொரு பங்கு இவண் வகிப்பதும், ஊர்ப்பெயர் ஆய்வு அங்கே தற்போது வளர்ந்து கொண்டிருக்கும் நிலையையும் இவண் கருத வேண்டியுள்ளது. இந்நிலையில் இவண் கிடைத்துள்ள ஊர்ப்பெயர்களைக் கொண்டு பார்க்க, பெரும்பான்மையான ஊர்ப்பெயர்கள், பொதுக்கூறு + சிறப்புக்கூறு கொண்டே திகழ் கின்றன. தனிப்பெயர்கள் குறைவு, இந்நிலையில் அடை இணைந்த பெயர்கள் எனப்பார்க்க, அவையும் விரல்விட்டு எண்ணக்கூடிய அளவிற்கேகிடைக்கின்றன.

திருப்பெருந்துறை, தென்னாகிணற்றடி
திருகோண மலை, உடையா கிணற்றடி,
மயிலிட்டித்துறை, பெரிய கிணற்றடி
திருக்கேதீச்சுரம், கொக்கு நெட்டிச் சோலை.

மேலும் சில பெயர்கள் பொதுக்கூறு, சிறப்புக்கூறுடன், முன் அடை போன்று தோற்றம் தரினும், இவை முன் அடை

யாகப் பின்னர் இணைந்ததா அல்லது சிறப்புக்கூறே இரண்டு சொற்களாக அமைந்ததா என்ற எண்ணம் எழுகிறது.

சான்றாக

மாவிட்டபுரம்
கண்டபாணத்துறை

போன்றவற்றைச் சுட்டலாம். இவ்வாறு முன் அடை இணைதல் ஊரின் விளக்கத்திற்கு மேலும் ஒரு விளக்கம் கொடுக்கும் தன்மையை இப்பெயர்களும் உணர்த்துகின்றன.

அடுத்து, 'பின் அடை இணைவு' என்ற நிலையில் பார்க்க ஒரு சில ஊர்ப் பெயர்களே இங்கே சுட்டத் தக்கனவாக அமைகின்றன.

| | |
|---|---|
| தையிட்டி | மயிலிட்டி |
| தையிட்டிப்புலம் | மயிலிட்டிக் கரை |

இவற்றை நோக்கி இம்மக்களின் வாழ்வியல் நிலையையுணர்ந்து கொள்ளல் இயலுமா என்ற சிந்தனை எழுகிறது. தமிழகம் பரந்துபட்ட இடம். அங்கே குடியிருப்புகளை அமைத்துக் கொண்ட மக்கள் முதலில் பெயர் வைத்தனர். பின்னர் ஊரினை விரிவாக்கும் போது விரிவாக்கங்கள் தனிப்படச் சுட்டப்பட்ட நிலையில், பின் அடைகள் பல வகைகளில் சுட்டப்பட்டன, சொல் நிலையில், எண் நிலையில் என. ஆயின் இலங்கையில் அவ்வாறு காணுதல் பெரும்பாலும் இயலவில்லை. இதற்குரிய காரணம் என்ன என ஆராய, அங்கு வாழ்ந்த தமிழ் மக்கள் தனிப்பெயர்களையும், பொதுக் கூறு, சிறப்புக்கூறு இணைந்த பெயர்களையும் முதலில் வைத்திருக்கலாம். பின்னர் தமிழகத்தினின்றும் சென்று தங்கிய மக்கள் ஏற்கெனவே ஊர்களாக அமைந்திருந்தவற்றிலே சென்று தங்கிய காரணத்தால் புதிய பெயர்களை மிகுதியாகச் சூட்டுதல் தேவையில்லாமல் இருந்தது. மேலும், அவர்கள் சென்ற நிலையிலும் விரிவு என்ற நிலையில்லை. மேலும், அவ்வப்போது மக்கள், தமிழ் நாட்டினின்றும் சென்ற நிலையில் தமது ஊர்ப் பெயர்களையே தாம் குடியேறிய ஊர்களுக்கும் வைத்துள்ளனர். தமிழகம் போன்று மக்கட் பெருக்கமும் அங்கு இல்லை. எனவே இங்கு போன்று புதிய விரிவாக்கம் என்ற நிலையில்

பின் அடை இணைந்த பெயர்கள் இலங்கையில் அமையவில்லையோ எனவும் எண்ணிப் பார்க்கலாம் இத்துடன் 'காரைத்தீவு' காரை நகராக மாற்றம் பெற்றமை குறித்த தனது எண்ணத்தில், ம. சற்மணம், 'இவற்றில் காரைத்தீவு என்னும் ஊர்ப்பெயர் ஈழத்திற் பல இடங்களிலும் பேசப்பட்டு வருவதால் யாழ்ப்பாணத்தின் காரைத்தீவு காரைநகர் என மாற்றம் செய்யப்பட்டது' என்ற கருத்தை வெளியிடுகின்றார்.[1] இதனை நோக்க, தமிழகத்தில் மேலும் விளக்கம் குறித்துப் பின் அடை இணைத்தல் முன் அடை இணைத்தல் பொதுக்கூறு சிறப்புக் கூறு இணைந்த பெயருக்கு அமையும் நிலை பெரும்பாலும் அமைய, இவ்வாறு பெயரைத் திருத்திக் கொள்ளுதல் இலங்கையில் அமைதல் வேறுபாடாகக் கருதத் தக்கது. மேலும் ஒரே பெயர்க்குறித்த ஊர்களும் அடை இணையாது அவ்வாறே சுட்டப்படுதையும் காண்கின்றோம்.[2] எனவே இத்தகைய மனநிலையின் காரணம் மேலும் ஆராய்ச்சிக்குரியது. தமிழகத்தில் ஒரு சில ஊர்கள் இவ்வாறு இருப்பினும் இவற்றை வேறுபடுத்தியே பெரும்பாலும் அழைப்பது கண்கூடு. நாகரிகம் குறித்துப் பெயர்களை மாற்றுதலையும் மட்டக்களப்பினை மட்டு நகர் என்று ஆக்கிய நிலைகாட்டுகிறது.

---

1. இடப்பெயர் வரலாறு—மட்டக்களப்பு மாவட்டம் —ப—115.
2. பாலமுனை—இவ்வூர்ப் பெயர் மட்டக்களப்புப்பகுதியில் மூன்று இடங்களுக்கு உண்டு —,—ப—125.

# இயல் 4

# பொதுக்கூறு

ஊர்ப் பெயர்களுள் முக்கியத்துவம் பெற்று விளங்குவன பொதுக்கூறு, சிறப்புக்கூறு என்ற அவற்றின் இருபகுதிகள். இவை யிரண்டனுள் பொதுக்கூறு பற்றி ஆராயும் போது பெயர், பொதுக் கூறு இரண்டிற்குமுள்ள தொடர்பினையும் வேறுபாட்டினையும் விளங்கிக் கொள்ளுதல் முதல் தேவையாக அமைகிறது.

ஊர்ப்பெயர் ஆய்வாளர் பலரும் பொதுக் கூறு பற்றிய தங்கள் எண்ணங்களை இயம்பியுள்ளனர்.[1] பொதுக்கூறுகளே ஊர்ப்பெயர்களில் முதலில் தோன்றும் வாய்ப்பு பெறுகின்றன. பின்னர் பல பொதுக் கூறுகள் ஊரினைச் சுட்டுவதில் குழப்பம் ஏற்படுத்துவதன் காரணமாகச் சிறப்புக் கூறுகள் தோன்றுகின்றன என்பது இவர்களது பொதுவான எண்ணம். தமிழக ஊர்ப்பெயர்கள் என்ற நூல், இப்பொதுக் கூறுபற்றி மேலும் சில செய்திகளைக் குறிப்பிட்டு, இக்கூறுபற்றி மேலும் தெளிவு பெற முயன்றுள்ளது. பகுதி, விகுதி அதாவது பொதுக்கூறு சிறப்புக்கூறு மட்டுமல்லாது ஊர்ப்பெயர்கள் பிறபல கூறுகளுடன் இணைந்து காணப்படும் வாய்ப்பும், தனித்த பெயராகக் காணப்படும் வாய்ப்பும் உடையன. எனவே எல்லா ஊர்ப்பெயர்களிலும் பொதுக்கூறு இருக்க வேண்டும் என்ற எண்ணம் கொண்டு அவற்றை நோக்குதல் முறையன்று. சில பெயர்கள் ஒரே கருத்தின் அடிப்படையில் தோற்றம் பெறும்போது, ஒரே சொல்லாக அல்லது

---

1. தமிழ் இடப்பெயராய்வு--ப—113
   செங்கை மாவட்ட ஊர்ப்பெயர்கள்—ப—11
   இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள் (தொகுதி-1)—ப—51.

தொடராக நின்று ஊர்ப்பெயர் சுட்டும் தன்மையில் அமையலாம். அதில் அமையும் பெயராகிய விகுதி இன்னொரு ஊர்ப் பெயரிலும் அமைந்து, அவ்வூரைத் தனிப்படுத்த, பிறிதொரு சிறப்புக் கூறினையும் பெற்றிருப்பதாயின், அதனைப் பொதுக்கூறு எனச் சுட்டலாமே தவிர, ஒரே ஊர்ப்பெயரில் அமைந்துள்ள போது அதனைப் பொதுக்கூறு எனல் சரியானதா என்பது சிந்திக்கத் தக்கது. எனவே விகுதிகள் அனைத்தும் பொதுக்கூறு ஆகாது என்பது தெளிவானது. மேலும் இந்நூலில், எனவே பெயர்கள் எல்லாம் பொதுக் கூறுகள் அல்ல. ஆயின் பொதுக் கூறுகள் எல்லாம் பெயர்கள் ஆகும் என்ற எண்ணத்தையும் இந்நூலாசிரியர் தருகின்றார்[2]. ஆங்கிலக்கலைக் களஞ்சியமும் சில கருத்துகளைத் தருகின்றது.[3] மேலும் பொதுக்கூறு, சிறப்புக்கூறு இவை ஊர்ப்பெயர்களைப் பொறுத்த வரையிலும் உலகளாவியது என்றதொரு எண்ணமும் இவண் பெறப்படுகின்றது.[4]

தமிழகத்தின் ஊர்ப்பெயர்கள் தரும் பொதுக்கூறுகள் என நோக்க, சில எண்ணங்கள் வெளிப்படுகின்றன. தமிழரின் பண்டைய வாழ்வியலைத் தெரிந்து கொள்ள வரலாற்று மூலமாக அமையும் சங்ககால இலக்கியங்கள் 43 பொதுக் கூறு

---

2. தமிழக ஊர்ப்பெயர்கள்—பக்-31-36.

3. Originally place names need not have been fully differentiated from common nouns... The original quasi place names thus became what is now called by biological anology the generic (river) and the element used to distinguish between examples of the same class became the specific. (red-black) This principle infact is not limited to toponomy or to nomenclature, in general-father may be any father—or Father. (Jones).
Encyclopaedia Britannica -p-1160

4. The specific and generic principle of placenaming which is highly efficient and so widespread as to be considered universal-rests upon the basic linguistic principle of classification. ''—p. 1160.

களைச் சுட்டுவதாக இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள் (தொகுதி-1) நூலாசிரியர் சுட்டுகின்றார்.[5] பிறகருத்தும்உண்டு.[6]

ஆயின் இன்றைய நிலையில் தமிழக ஊர்ப்பெயர்கள் நூல் 284 ஊர்ப்பெயர்பொதுக்கூறுகளைத் தருகின்றது. இவையனைத்தும் வரையறுக்கப்பட்ட, துல்லியமான ஆய்வு முடிவுகள் அல்ல. இருப்பினும், ஓரளவிற்குச் சுட்டப்பட்ட, ஆய்வு புலப்படுத்திய நிலையில் பொதுக் கூறுகள் காலந்தோறும் பெருகி வந்துள்ள தன்மையை நாம் உணரக் கூடுகின்றது. பல சூழல்கள் அடிப் படையில் குடியிருப்புகள் பெருகி வரும் நிலையில், ஊர்ப் பெயர்ப் பொதுக்கூறுகள் பெருகி வருவதற்குரிய அடிப் படை அமைகின்றன. மேலும் காலந்தோறும் மக்கள் வாழ் வியலில் பல மாற்றங்கள் காரணமாக, குடியிருப்புகள் பெருகியமையுடன் குடியிருப்புகளைச் சுட்டுதலிலும் மாறுபாடு ஏற்பட்டது என்பதையும் தமிழரின் ஊர்ப் பெயர் வரலாறு சுட்டுகின்றது. இயற்கையின் தாலாட்டில் இயற்கைச் சூழலில் முதலில் வசித்த மனிதன், பின்னர் நிலையான உறைவிடத்தின் சிறப்பினைப் புரிந்து கொண்ட நிலையில் குடியிருப்புப் பகுதிகளையுருவாக்கி, அதன் பின்னர் செயற்கையாகத் தான் உருவாக்கிய பொருட்களையும், தாம் வாழும் ஊர்களைக் குறிப்பிடப் பயன்படுத்தியமையைத் தமிழர் வரலாறு காட்டுகிறது. பெரும்பான்மை இவ்வாறு அமைய, விலங்குப் பெயர், தமிழரின் பண்பாட்டோடும் பழக்க வழக்கங் களோடும் தொடர்புடைய பிற சில பெயர்களையும் இவ் வரலாற்றின் இடையே காண்கின்றோம். இந்நிலையில் இயற்கைப் பெயர்கள், குடியிருப்புப் பெயர்கள், செயற்கைப் பெயர்கள், பிற என நான்கு வகைகளாக இப்பொதுக் கூறுகளைப் பிரித்து நோக்கும் மரபு, தமிழக ஊர்ப் பெயர் ஆய்வாளரிடையே காணப்படுகிறது.

---

5. சங்க இலக்கிபத்தில் ஊர்ப்பெயர்கள்—தொகுதி-1 பக்-52-53.

6. கி. நாச்சிமுத்து ஏறத்தாழ 72 பொதுக்கூறுகள் இருப்ப தாகக் காட்டுவார்.

தமிழ் இடப்பெயராய்வு—பக். 133-34.

இலங்கையில் உள்ள ஊர்ப்பெயர்ப்பொதுக்கூறுகளைபற்றி, சில அறிஞர்கள் கருத்து வெளியிட்டுள்ளனர்.

தமிழக ஊர்ப்பெயர் அறிஞர்கள் போன்று, பொதுக்கூறு பற்றிய எண்ணத்தை அங்கும் காண்கின்றோம். 'ஊர்களுக்குப் பெயர்கள் அமையும் போது பொதுவாகவும் சிறப்பாகவும் அமைந்து காணப்படுவதே இயற்கை. அது போலவே மட்டக் களப்புப் பகுதிகளில் இடப்பெயர்களும் அமைந்து காணப் படுகின்றன' என்கிறார் ம. சற்குணம்.[7] இவர் இடப்பெயர் களிலே ஊர்ப்பெயர்களையும் இணைத்தே பேசுகின்றார். 'பெரும்பாலான இடப்பெயர்கள் ஊர், குடி, சேணி, முனை, சூடா, காடு, தீவு, துறை, வெளி ஆகியனவற்றை விகுதிப்பெயர் களாகக் கொண்டே அமைந்து காணப்படுகின்றன' என்னும் இவரது கருத்தும் இவண் சுட்டத்தக்கது. எனவே இப்பகுதியில் உள்ள பெரும்பாலான பொதுக்கூறுகள், இயற்கை, குடி யிருப்புப் பெயர்களாகவே அமைவதை நாம் இவண் கருதிப் பார்க்கலாம். மேலும் ஊர்களைச் சீவிக்கும் இடப்பரப்பு'[8] எனக் கருதும் இவர் 'மக்கட் டொகை பெருகப் பெருகக் காடு வெட்டி நாடாக்கிக் குளம் தொட்டு வளம் பெருக்கி வாழ வேண்டிய அவசியம் ஏற்பட்டது. எனவே ஊர்களை அண்டிக் குடியிருப்புகள் தோன்றின. உறவு முறை கொண்டபல குடியினர் சேர்ந்து வாழும் இடம் குடியிருப்புகளாய்த் தோற்றம் பெற்றன எனவும் கொள்ளலாம்[9] எனவும் எண்ணுகின்றார். திருக்கோவில் போன்ற ஊர்ப்பெயர்களைக்காண செயற்கை அமைப்பையும் கருதிப்பார்க்கலாம்.[10] இந்நிலையில் தமிழகப் பொதுக்கூறுகள் போன்றே நான்கு பிரிவுகளாகப் பிரித்து இவற்றை ஆராய்தல் இயலலாம்.[11] மேலும் 'ஈழநாட்டு இடப் பெயர்களில் தமிழின் ஆளுமை' கட்டுரையாசிரியர் தி. க. இராசேசுவரன் உரைக்கும் ''பொதுவாக மக்கட் கூட்டங்கள்

---

7. இடப்பெயர் வரலாறு—மட்டக் களப்பு மாவட்டம் ப—11.
8. ,, ,, ,,
9. ,, ,, ப—112
10. ,, ,, ,,—113
11. ஈழமும் தமிழரும் — பக்-61-78

முதலில் ஓர் இடத்தில் குடியேறும் போது நீர் நிலைகளும் மற்றும் நிலவளங்களும் உள்ள இடங்களையே தெரிந்தெடுத்தனர். அப்படிக் குடியேறிய இடங்களுக்கு அங்குள்ள குளம், வாவி, ஆறு, மரம் முதலியவற்றின் பெயர்களை இட்டு வழங்கலாயினர். இதைப் போன்றே ஊர்ப் பெயர்களின் ஈற்றில் காடு, மலை என்பவையும் சேர்த்து வழங்கப்படுகின்றன. தமிழர் உழவுத் தொழிலுக்கும், இயற்கை வாழ்விற்கும் உயரிய இடமளித்த காரணத்தால் இடங்களின் பெயர்களிலும் இவை முன்னிற்கக் காணலாம்' என்ற கருத்தையும், இவண் இணைத்துச் சிந்திக்கலாம்.[12]

எனவே தமிழரின் மிக நெருங்கிய தொடர்பு பலவகையிலும் ஈழத்துடன் காணப்பட்ட நிலை காரணமாக, பொதுக் கூறுகள், தமிழரின் நாட்டில் காணப்பட்டமை போலவே காணப்பட்டிருக்கக் கூடும் என்ற எண்ணத்தையும் நாம் மேற்சுட்டிய கருத்துகளினின்றும் பெறுகின்றோம். மேற்சுட்டிய அறிஞர்களே இக்கருத்தை உடையவர்கள் என்பதும் அவர்களது கட்டுரைகள் வழியே புலனாகின்றது.[13]

தமிழக ஊர்ப்பெயர்களில் காணப்படும் பொதுக் கூறுகளையும், இலங்கை ஊர்ப்பெயர்ப் பொதுக் கூறுகளையும் ஒப்பிட்டு நோக்கும் போது, இரண்டு நாடுகளின் தொடர்பு காரணமாக, பொதுவான ஊர்ப்பெயர்ப்பொதுக்கூறுகளுடன், தனித்த சூழல் காரணமாக, சில மாறுபாடாகவும் காணப்படு

---

12. ஈழ நாட்டு இடப்பெயர்களில் தமிழின் ஆளுமை-ப-221.

13. ஈழத்து இடப்பெயர்களும், தமிழினதும், தமிழரினதும் தனித்தன்மையைப் வெளிப்படுத்தித் தமிழர் பண்பாடு கலாசாரமும் நாடு முழுவதுமே பரவியிருந்தமையைப் புலப்படுத்துகின்றன. சிங்கள மொழி பேசப்படும் தென்னிலங்கையில் இன்றும் பல தூய தமிழ் இடப் பெயர்கள் நிலை பெற்றிருக்கின்றன. இவற்றைக் கொண்டு இலங்கையில் தமிழர் பாரம்பரியம் வரலாற்றுக் காலத்திற்கும் முற்பட்டது என்பது இக்கட்டுரையில் ஆராய்ந்து வலியுறுத்தப்படுகின்றது—'' ப- 220.

கின்றதைக் காணல் இயலுகிறது. இவை இலங்கை மக்களின், சூழ்நிலை காரணமாக வாழ்வியல் மாறுபட்டமையையும், மாறுபடக் காரணமாகியக் கூறுகளையும் இனம் காண நமக்கு உதவலாம்.

'கிராமங்களின் அகர வரிசைப்பட்டி' என்ற தமிழக அரசு வெளியிட்டுள்ள நூல் தரும் ஊர்களின் அடிப்படையில் 'தமிழக ஊர்ப்பெயர்கள்' நூல் 284 பொதுக் கூறுகளைக் காட்டு கிறது.[14] அவையாவன.

1. அக்ரஹாரம், 2. அகம் 3. அகரம் 4. அசலம் 5. அடி 6. அணி 7. அணை 8. அந்தல் 9. அந்தி 10. அம்பலம் 11. அளம் 12. அறை 13. ஆச்சிராமம் 14. ஆஞ்சி 15. ஆடி 16. ஆணி 17. ஆத்தி 18. ஆந்தி 19. ஆரண்யம் 20. ஆல் 21. ஆலம் 22. ஆலை 23. ஆளம் 24. ஆறு 25. இகம் 26. இஞ்சி 27. இயம் 28. இருக்கை 29. இருப்பு 30. இல் 31. இலங்கை 32. இலஞ்சி 33. ஈஸ்வரம் 34. உக்கடை 35. உ(ட)டப்பு 36. உடுப்பம் 37. உண்ணி 38. உவரி 39. ஊத்து 40. ஊர் 41. ஊரணி 42. ஏடு 43. ஏணி 44. ஏந்தல் 45. ஏரி 46, ஓடு 47. ஓடை 48. ஓலை 49. கட்டளை 50. கட்டை 51. கடல் 52. கடவு 53. கடை 54. கண்டை 55. கண்மாய் 56. கண்டிகை 57. கரம்பை 58. கரை 59. கல் 60. கழனி 61. கழி 62. கனி 63. காசி 64. காடி 65. காடு 66. காணி 67. காயல் 68. காரணை 69. கால் 70. கால்வாய் 71 காலணி 72. காவல் 73. காவணம் 74. கானம் 75. கிணறு 76. கிராமம் 77. கிரி 78. குட்டம் 79. குட்டா 80. குட்டை 81. குடல் 82. குடி 83. குடியிருப்பு 84. குடை 85. குண்டம் 86. குண்டா 87. குண்டு 88. குண்ணம் 89. குணம் 90. குத்தகை 91. குந்தாணி 92. குப்பம் 93. குப்பை 94. குமரை 95. குருக்கை 96. குழி 97. குளம் 98. குளி 99. குறிஞ்சி 100. குன்றம் 101. குன்னம் 102. குன்று 103. கூடல் 104. கூர் 105. கேணி 106, கேரி 107. குந்தளம் 108. கொல்லை 109. கோட்டம் 110. கோட்டா

14. தமிழக ஊர்ப்பெயர்கள் —பக்—40—41

111, கோட்டை 112. கோடி 113. கோடு 114. கோணம் 115. கோப்பு 116. கோம்பை 117. கோரை 118. கோவில் 119. சத்திரம் 120. சந்தல் 121. சந்திரம் 122. சந்தை 123. சமுத்திரம் 124. சரல் 125. சாகரம் 126. சாத்து 127. சாரம் 1 8. சாலை 129. சாவடி 130. சிலை 131. சுனை 132. சேடு 133. சேத்தி 134. சேரி 135. சோலை 136. தட்டிமால் 137. தட்டு 138. தட்டை 139. தண்டரை (லம்,லை) 140, தலை 141. தளி 142. தாங்கல் 143. தாவு 144. தானம் 145. திட்டு 146. திட்டை 147. திடல் 148. திருத்து 149. தீர்த்தம் 150. துர்க்கம் 151. துருத்தி 152. துளி 153. துறை (ர) 154. தெரு 155. தேசம் 156. தேரி 157. தேவதானம் 158. தொட்டி 159 தொழுவு 160. தோட்டம் 161. தோப்பு 162. நகர் 163. நகரம் 164. நகரி 165. நத்தம் 166. நதி 167. நந்தல் 168. நாடு 169. நிலை 170. நெகமம் 171. பட்டடை (டா) 172. பட்டணம் 173. பட்டி 174. பட்டினம் 175. பட்டு 176. படுகை 177, பண்ணை 178. பத்து 179. பதி 180. பந்தல் 181. பரப்பு 182. பரை 183. பல்லி 184. பள்ளம் 185. பள்ளி 186. பற்று 187. பனை 188. பஜார் 189. பாக்கம் 190. பாடி 191. பாடு 192. பாண்டலம் 193. பாத் 194. பாதி 195. பாரை 196. பாலை 197. பாளம் 198. பாளையம் 199. பாறை 200. பிடாகை 201. புரம் 202. புரவு 203. புரி 204. புரிசை 205. புரை 206. புலம் 207. புவனம் 208. புலி 209. புள்ளி 210. புழி 211. புளி 212. புறம் 213. பூடி 214. பூண்டி 215. பேட்டா 216. பேட்டை 217. பேடு 218, பேர் 219. பேரி 220. பொட்டல் 221பொத்தை 222. பொய்கை 223. பொழில் 224, போகம் 225. மங்கலம் 226. மடம் 227. மடு 228. மடுகு 229 மடுவு 230. மடை 231. மண்டபம் 232. மண்டலம் 233. மணி 234. மதில் 235. மரம் 236. மல்லி 237, மலை 238. மனை 239. மாகாளம் 240. முட்லு 241, முடி 242. முத்தம் 243. முளை 244. முனை 245. மூடு 246. மூலை 247, மொழி 248. மேடு 249. மேனி 250. லோகம் 251. வட்டம் 252. வடலி 253. வயல் 254, வரம் 255. வரம்பு 356. வரை 257. வல்லம் 258. வல்லி 259. வள்ளி 260. வலசு 361. வலசை 262. வலம் 263. வழி 264. வளையம் 265. வனம் 266. வாக்கம் 267. வாசல் 268. வாசி 269. வாடா

270, வாடி 271. வாய் 272. வாயல் 273. வாரி 274. வாவி 275. வாழ்க்கை 276 வாழ்வு 277. விடுதி 278. விளாகம் 279. விளை 280. வெளி 281. வேடு 282. வேரி 283. வேலி 284. ஹள்ளி

இலங்கை ஊர்ப்பெயர்களினின்றும் தெரியவரும் பொதுக் கூறுகளாக, 1 அகம் 2 அடி 3 அணை 4 அம்பலம் 5 அளை 6 ஆராட்சி 7 ஆரை 8 ஆலி, 9 ஆலை 10 ஆவி 11 ஆறு 12 ஆனை 13 இறவு 14 ஈட்டி 15 ஊர் 16 ஏரி 17 ஒடை 18 ஓட்டு 19 கட்டை 20 கடவு 21 கடலை 22 கடை 23 கண்டி 24 கரச்சை 25 கரை 26 கல் 27 கலட்டி 28 களப்பு 29 களி (ழி) 30 காடு 31 காணி 32 காமம் 33 கிணறு 34 கால் 35 கிரி 36 குடா 37 குடியிருப்பு 38 குண்டு 39 குழி 40 குளம் 41 கூடல் 42 கேணி 53 கொட்டு 44 கொல்லை 45 கோட்டை 46 கோவில் 47 சாவடி, 48 சீமா, 49 சேரி 50 சேனை, 51 சோலை 52 தரிப்பு 53 தரை 54 தலை 55 தளவாய் 56 தளை 57 தாழை 58 திசை 59 திட்டி 60 திடல் 61 தீவு 62 துறை 63 தெரு 64 தேசம் 65 தொடுவாய் 66 தோட்டம் 67 தோணா 68 நகர் 69 நாடு 70 நேரி 71 நொச்சி 72 படை 73 பண்ணை 74 பத்தை 75 பந்தி 76 பரவை 77 பள்ளம் 78 பள்ளி 79 பள்ளை 80 பளை 81 பற்று 82 பற்றை 83 பனை 84 பாடு 85 பாய், 86 பாலை 87 பாறை 88 பிட்டி, 89 புரம் 90 புலம் 91 புலவு 92 புலை 93 பூவல் 94 பை 95 பொத்தனை 96 மடம் 97 மடு 98 மடுவு 99 மணல் 100 மருது 101 மலை 102 முகம் 103 முல்லை 104 முன் மாரி 105 முனை 106 மூலை 107 மேடு 108 மோட்டை 109 வட்டுவான் 110 வட்டை 111 வத்தை 112 வயல் 113 வளவு 114 வளை 115 வாய் 116 வாயில் 117 வில் 118 வெட்டி 119 வெட்டை 120 வெளி 121 வேலி என இவை அமைகின்றன. மேலே காணப்படும் பொதுக் கூறுகளை நோக்க, இவை பெரும்பாலும் தமிழ்ச் சொற்களாகவேயுள்ளன. சில பொருள் புரியாத நிலையில் அமைகின்றன இவை தமிழ்ச் சொற்களின் திரிபாக அமையலாம்; பிறமொழிச் சொல்லாகவும் இருக்கலாம். இவற்றிற்குத் தனிச் சொல் ஆய்வும் ஊர்ப்பெயர் விளக்கமுமே மேலும் விளக்கம் அளித்தல் இயலும்.

இவ்வாய்வில் இப்பொதுக் கூறுகள் அனைத்தையும் இரு பிரிவாக வகைப்படுத்தி ஆராயலாம். 1. இரண்டு நாடுகளிலும் காணப்படும் ஒத்த பொதுக் கூறுகள். 2. இலங்கையில் மட்டும் காணப்படும் பொதுக் கூறுகள்.

**1. இரண்டு நாடுகளிலும் காணப்படும் ஒத்த பொதுக் கூறுகள்.**

தமிழக ஊர்ப்பெயர்கள் நூல் இயற்கை அமைப்பு, குடியிருப்பு, செயற்கை அமைப்பு, பிற என நான்கு வகைகளாக இப்பொதுக்கூறுகளை வகைப்படுத்தி ஆய்கிறது. இவ்வமைப்பையை இங்கும் அமைத்துக் கொள்ளலாம்.

**இயற்கை அமைப்பு**

இயற்கை அமைப்பு என பொதுக் கூறுகளில் காண, நிலம், தாவரம், மலை, நீர் நிலை, விலங்கு என்ற ஐந்து பிரிவுகளாக இவற்றைக் காணுதல் தமிழக ஊர்ப்பெயர்களை நோக்க அமைகிறது. ஆயின், இலங்கைப் பெயர்களில் விலங்கு தொடர்பான பொதுக்கூறுகளைக் காணுதல் இயலவில்லை. இதற்குரிய காரணம் ஆழமான ஆய்வில் கிடைக்கலாம்.

**நில அமைப்பு**

நில அமைப்புத் தொடர்பான ஊர்ப்பெயர்களை, இலங்கையிலும் தமிழகத்திலும் இன்று பரவலாகக் காணுதல் இயலுகிறது. ஆயின் தமிழகத்தில் பண்டைய இதன் நிலைபற்றிய எண்ணமாக, 'அன்றையஊர்ப் பெயர்களில் நில அமைப்புகள் காட்டும் கூறுகள்மிகுதியாக இல்லை. மலைகாடுபோன்றனவும், ஆறு தாவரம் போன்றனவுமே இயற்கை அமைப்புகளில் இடம் பெறுகின்றன. எனவே மனிதன் தான் வாழத் தொடங்கிய போது, தம்வாழ்விற்கு வேண்டிய நீர், வெப்பநாடு ஆகையால் காடு, தாவரப்பகுதிகள் மலைப்பகுதிகளிலேயே தம் வாழ்வினை நடத்தியுள்ளனர் என்பதற்குச் சான்றாக இக்கூறுகள் அமைகின்றன. ஆயின் இன்று இயற்கை வசதிகளைச் செயற்கையாக உருவாக்கும் நிலையில் வளர்ச்சி பெற்ற நிலையில் நிலங்கள் எல்லாவற்றிலும் தங்கள் உறைவிடங்களை அமைத்துக் கொள்ளுதலை இங்கு எண்ண இயலுகிறது' என்ற கருத்து அமைகிறது. நில அமைப்பு என்ற தலைப்பில் நில அமைப்பு,

நிலத்தின் தன்மை, மண்ணின் தன்மை, நிலப்பிரிவு, நிலப்பெயர், நில அளவு, சூழல் எனப்பலவாறாக இக்கூறுகள் தமிழகத்தில் அமைகின்றன. நிலத்தைப் பற்றியப் பலவத அறிவையும் கொண்ட தமிழர், அவற்றைத் தம் ஊர்ப்பெயர்களில் புலப் படுத்தியுள்ளமை இவண் தெரிகின்றது.

கடை, குண்டு, குழி, கோடி, கோணம், தட்டு, திட்டு, திட்டை, திடல், பரப்பு, பள்ளம், மேடு, மூலை என்ற பல அமைப்புக் கூறுகளைத் தமிழகத்தில் காண்கின்றோம். இவற்றுள், குழி, திடல், பள்ளம், முனை, மூலை, மேடு என்னும் ஆறினையும் இலங்கையில் காண்கின்றோம். 'தமிழக ஊர்ப் பெயர்கள் பிறபகுதியில் தரும் (ப - 45) 'வெளி'யையும் இதனுடன் இணைத்துக் காணலாம்.

**குழி**

தமிழகம் - கண்டாங் குழி, வெள்ளங் குழி, ஊத்துக் குழி, ஆண்டிக் குழி, பள்ளக் குழி, பாப்பாங் குழி.

இலங்கை - சுண்டிக் குழி, ஆனை குழி கச்சி மதுரன் குழி கண்ட குழி, மதுரன் குழி, முதலக் குழிய, செம்புக் குழி, ஆனைக்குழிய, சின்ன செம்புக் குழிய சிங்கக் குழிய (சிலாபம்), பிரப்பங்குழிய.

**திடல்**

தமிழகம் - மொட்டையாண்டித் திடல்
இலங்கை - மாளிகைத் திடல்.

**பள்ளம்**

தமிழகம் - ஆசாரிப்பள்ளம், முந்நீர் பள்ளம், சென்னவால் பள்ளம், முள்ளி பள்ளம், மஞ்சி பள்ளம், புளிச்ச பள்ளம், திருவீதி பள்ளம்.

இலங்கை - அட்டைபள்ளம், நட்டுபள்ளம், பள்ளம். (குரு நாகல)

**முனை**- முனை, கடலுள் நீண்டிருக்கும் தரைப் பகுதி முனை எனப்படும்.[15]

---

15. நான்காவது அனைத்துலகத் தமிழாராய்ச்சி மாநாடு ப. 114.

தமிழகம் - குமரிமுனை

இலங்கை - மண்முனை, கல்முனை, வீச்சுக்கல்முனை, சொறிக் கல் முனை, மருதமுனை, வீரமுனை, மகடூர்முனை, நொச்சிமுனை, கல்லடி முனை, நற்பிட்டி முனை, மண்டு கோட்டை முனை, கடுக்கா முனை, கோட்டை முனை, குறிஞ்சா முனை, முள்ளா முனை, பூ நொச்சி முனை, விடத்தல் முனை.

மேலும் இதனைப் போன்ற ஊர்ப்பெயர்களாக, ஆண்டி முனை, கல்முனை, கோம்பி முனை, (புத்தளம்) குறிஞ்சி முனை (அனுராதபுரம்) போன்றவற்றையும் அறிகின்றோம்.[16]

முனை என்பதற்குப் போர்க்களம், பகைப்புலம், திரள்' முள், முகம், தலைமை, நுனி, கடலுட், செல்லும் நீண்ட கரிய தரைப் பாகம் என்ற பொருட்களைக் காணுகையில், இவற்றுள் அப்பகுதி மக்கள் எப்பொருள் அடிப்படையில் இப்பெயரை வைத்திருந்தனர் என்பது தெரியின் விளக்கம் பெறலாம். எனி னும் குடாபோன்ற பிற கடற்கரை ஊர்ப்பெயர்கள், இலங்கை யின் நில அமைப்பு காரணமாகவும் இப்பெயர் அமைந்திருக்க லாம் என்ற எண்ணத்தைத் தருகிறது. தமிழகத்தில் இச்சொல் வழக்கு உண்மை எனினும் இச்சொல் பொதுக் கூறாகத் குமரி முனை தவிர வேறு இல்லை. குமரிமுனையும் மிகுதியான பண்பாட்டில் இல்லை. முனை எனப்பார்க்க, நில அமைப்பு எனின் தமிழகமும் நில அமைப்பில் ஏறக்குறைய இலங்கையைப் போன்றதே. இந்நிலையில் முனைப்பகுதிகள் இருக்கவும் வாய்ப்புண்டு. அடுத்தாற்போன்று போர்க்களம் என்னும் பொருளையும் தமிழர் கொண்டிருந்தனர். எனினும் தமிழகத் தில் இச்சொல் பயன்படுத்தப்படவில்லை. மட்டக்களப்பில் மிகுதியாகப் பெயர்களைக் காண்கின்றபோது இதற்குரிய காரணம் என்ன என்ற வினா வருகிறது.

முலை

தமிழகம் - பம்மத்து மூலை, கீழ் சூரிய மூலை, அகஸ்தியர் மூலை, சேரடி மூலை.

16. Tamil place Names in Ceylan outside the Northern and Eastern Provinces.—p—490

இலங்கை - வந்தாறு மூலை, அச்ச மூலை, கனமூலை (புத்தளம்) பனயாடி மூலை, அம்மனா மூலை மகாரட்சி முல்லா (குரு நாகல்) குளமுல்லா, பரப முல்லா (சில்லாபம்) அகத்தியடி முல்லா (படுல்லா) கரடிய முல்லா, கும்பல் முல்லா (ரத்ன புர) குரு நாயக முல்லா (மதரா) கரனாயாக முல்லா, ஓகிய முல்லா, பரகட முல்லா (கொழும்பு)

**மேடு**

தமிழகம் - பாலமேடு, பீள மேடு, காளாஞ்சி மேடு, சொலக்க மேடு

இலங்கை - பட்டி மேடு, துரை வந்தேறிய மேடு,

**வெளி**

தமிழகம் - வடக்கு வெளி, செம்பிய மாவெளி

இலங்கை - சந்தி வெளி, கோராவெளி, குறுமண் வெளி' மயிலம்பா வெளி, பன்குடா வெளி, புதுவெளி (பொலனருவா) அம்பா வெளி, மங்கள வெளி, மருக்கன் வெளி, முளகண்ட வெளி, முரண்ட வெளி, பெரிய வெள்ளிய, சின்ன வெளி, சித்தர வெளி உண வெளி, (புத்தளம்) படை யாண்ட வெளி, பண்டாரியா வெளி, போரில்லா வெளி, தாண்டவன் வெளி, கதிரை வெளி, வெல்லாவெளி, நாவிதன் வெளி, பூலா வெளி, வெட்டுக் காட்டு வெளி, கந்தன் வெளி, புட்டு வெளி, குளவெளி

நிலத்தின் தன்மை நிலையில் தமிழகத்தில், பத்து, பற்று, பாலை, பரவு, பொட்டலைக் காண்கின்றோம். இலங்கை பற்று, பாலை, இரண்டையும் கொண்டு திகழ்கின்றது.

**பற்று**

தமிழகம் — சக்கப் பற்று

இலங்கை — அடங்காபப்ற்று, வன்னிப் பற்று, பாணமைப்பற்று, அக்கரைப் பற்று, கரவாகு நிந்தவூர்ப்பற்று, சம்மாந் துறைப்பற்று, எருவில் போரதீவுப்பற்று, ஏறாவூர்ப் பற்று, கோறளைப் பற்று, மண்முனைப் பற்று

**பாலை**

தமிழகம் — சிறுபாலை, திருப்பாலை, வண்டாம் பாலை, திருக்கழிப் பாலை, பெரும்பாலை

இலங்கை — இருபாலை, முதலிப்பாலை

நில அளவாகக் காணி இடப்பெறுகிறது.

**காணி**

தமிழகம் — முக்காணி, வளக்காணி, சின்ன உலகாணி

இலங்கை—அண்டன் காணி.

மண்ணின் தன்மை என்ற நிலையில், உலரி, சரல், தேரி மூன்றையும் தமிழக ஊர்ப் பெயர்களில் காண்கின்றோம்.[17] இம்மூன்றையும் இலங்கைப் பெயர்களில் காணுதல் இத் தொகுப்பில் கிடைக்கவில்லை. மேற்குறிப்பிட்ட நூல் செயற்கை அமைப்பில் இணைத்துள்ள 'கழி' 'மண்ணின் தன்மை'யில் தான் பொருத்தம் பெறுமே தவிர செயற்கை அமைப்பில் பொருத்தமாகத் தெரிய வில்லை.[18] எனவே இதனை இவண் இணைக்கலாம்.

**கழி**

தமிழகம்—திருப்பங்கழி

இலங்கை—மட்டிக்களி, அமிர்த கழி

நிலப்பெயரான புலம் ஒரு சில இடங்களில் இரு நாடுகளிலும் அமைகின்றன.

**புலம்**

தமிழகம்—செம்புலம், கத்திரிப்புலம்

இலங்கை—உயர்வு புலம், (உயரப் புலம்) திருவன்புலம், தையிட்டி புலம்

பிற, தமிழகத்தில் காணப்பெறும் நிலப்பிரிவுகளாகிய கண்டிகை, வட்டம், நிலப்பெயராகிய நிலம், நில அளவுகளாகிய காணி, வேலி, பாதி, சூழலாகிய துருத்தி, படுகை போன்றன இலங்கையின் பெயர்களில் அமைந்துள்ளதா என்பதனை மேலும் முழுமையான ஆய்வு நல்கும். சூழலில், குப்பாணை மாவிலங்கை, மாவிலங்கை, புதுமா விலங்கை போன்றவற்றுள் அமையும் இலங்கை என்ற பொதுக் கூறு இலங்கைப் பெயரிலேயே அமைந்து தனிப்பெயராகக் காட்சி தருகிறது.

---

17. தமிழக ஊர்ப்பெயர்கள்—ப. 43
18. ,, —ப. 59

**தாவரம்**

மரங்களின் பெயர்கள், அதன் பாகங்கள், குற்றுச் செடிகள் இம்மரங்களின், தாவரங்களின் இருப்பிடம் போன்றனவற்றைத் தமிழகப் பெயர்கள் கொண்டு திகழ்வன போன்று, இலங்கையும் கொண்டுள்ளது. எனினும் இரண்டு நாடுகளிலும் மிகுதியாக இல்லை. இலங்கையில் மிகக் குறைவாகவே உள்ளன.

**அடி**

தமிழகம்—ஆலடி, மகிழடி, சாத்தியடி, இலவடி, வேப்படி

இலங்கை—நாவலடி, அரசடி, கல்லடி, மாவடி, புளியடி, புளியங்கண்டடி, செங்கலடி, மடத்தடி, சவுக்கடி, மண்டபத்தடி, திண்ணையடி, கருங்கிண்ணையடி, ஒட்டமாவடி, கண்டலடி, (மட்டக்) தூணடி, எருக்கலை அடி, இலந்தையடி, மஞ்சடி, தில்லையடி, (புத்தளம்.)

'அடி ஈற்றுப் பெயர்கள் இலங்கையில் பல உள. இந்த அடி ஈற்றுப் பெயர்கள் சிங்களத்தில் 'பெ' ஈற்றுப் பெயர்களாகக் காணப் படுகின்றன. இதனைத் தொடம்பெ, மாதம்பெ, என்னும் ஊர்ப் பெயர்களை நோக்கியுணரலாம். மட்டக்களப்பிலே தென்பால் உள்ள களிக்கம்பை, புட்டம்பை, என்பனவும், யாழ்ப்பாணப் பகுதிகளில் உள்ள மாதும்பை, தோடப்பை, மயிலப்பை என்பனவும் இவ்வகையினவாய் இருக்கலாம் எனவும் எண்ணத் தோன்றுகிறது என்ற எண்ணம் இதனோடு இணைந்தது.[19]

மரப் பெயர்கள் எனநோக்க, பனை, நொச்சி, மருது இவை இலங்கையில் அமைகின்றன.

தமிழகம்—வடக்குப் பனை, திருப்பனை, கவரப்பனை

இலங்கை—கருகம்பானை (பனை திரிபு), நட்டப்பனை, பெரிய பனை, சின்னப்பனை (புத்தளம்)

கிளி நொச்சி, சாய்ந்தமருது, ஆலையடி வேம்பு. இவை இலங்கையில் உள்ளன.

---

19. இடப்பெயர் வரலாறு-மட்டக் களப்பு மாவட்டம் -ப-118

பூந்தமல்லி, சித்தமல்லி தமிழகத்தில் அமைய, கணே முல்லை இலங்கையில் மலர் சார்பாக அமைகின்றது. காடு சார்பான பெயர்கள் தமிழகத்தில் போன்று இலங்கையிலும் பல உள.

தமிழகம்-வெங்காடு, ஈக்காடு, திருவேற்காடு, தென்னார்க்காடு,
இலங்கை—பனங்காடு, நாவற்காடு, பலாக்காடு, மாங்காடு,
முனைக்காடு, பாலைக்காடு, வெட்டுக்காடு (மட்டக்)
இடைக்காடு, நாவற்காடு சூரியகட்டைக்காடு,
கள்ளிக் கட்டைக்காடு (மன்னார்)

**சுரம்**

தமிழகம்—திருவிடைச்சுரம், அகத்தீச்சுரம், இராமேச்சுரம்

இலங்கை—திருக்கோணேச்சுரம், முனீச்சுரம், கேதீச்சுரம்

**மலை**

மலையின் பலதரப்பட்ட அளவும் தன்மையும் சுட்டும் பொதுக் கூறுகள் பல தமிழகத்தில் காண்பதற்குரியனவாக உள்ளன. மலை, அசலம், கிரி, சிலம்பு, கோடு, அறை, கல், குன்றம், பாறை பொத்தை எனப்பல இவண் சுட்டப்பெறுகின்றன.

இலங்கையில் கல், பாறை, மலை இவையே அமைகின்றன

**கல்**

தமிழகம்—கரிங்கல் ஏற கரிங்கல், வீரக்கல், நெடுங்கல், பரிக்கல்,

இலங்கை—புலிபாஞ்ச கல், அடைக்கல், குருநாகல்

**பாறை**

தமிழகம்—அழகன் பாறை, மத்தளம் பாறை, அத்திப்பாறை,
பூம்பாறை, வழுக்குப் பாறை, மட்டப்பாரை

இலங்கை—அம்பாறை

**மலை**

தமிழகம்—திப்பிறமலை, கழுகுமலை, பன்றி மலை, குடுமிய மலை சுவாமி மலை, சிவன் மலை, முது மலை, திருவண்ணாமலை, திருநீர் மலை

**இலங்கை**—கீரிமலை, கதிரமலை அன்னமலை, ஆயித்த மலை,
புல்லு மலை, தாந்தாமலை, உகந்த மலை,
நேடிமேல் (கொழும்பு) முகுணமேல் (ரத்னபுரி)
முன்மேல், கோட்மேல், கிளமேல் (கண்டி)

**நீர்நிலை**

இயற்கையான நீர்நிலை அமைப்பு நிலையில் இடம்பெறும் கூறுகளாக, ஆறு* கரை, துறை, மடு இவை இலங்கையில் அமைகின்றன. தமிழகத்தில் காணக் கிடைக்கும் உவரி, காயல், குட்டம், குட்டா, குட்டை, கூடல், மடுகு, மடுவு, வாரி போன்றவற்றை இவண் காணயியலவில்லை.

தமிழகம்—திருவாட்டார். வைப்பார், அடையாறு, பசியார்

இலங்கை—தொண்டைமானாறு, கல்லாறு, கண்டியனாறு,
கோட்டைக் கல்லாறு, கரடியனாறு. அடம்பன் ஆறு.

தமிழகம் போன்று நில அமைப்பும், குழலும், நீர் வளமும் காரணமாக இலங்கையிலும் ஆறுகள் மிகுதியாக அமையக் காணலாம். நீர் நிலைக் கருகில் தங்கள் குடியிருப்புகளை அமைத்துக் கொண்ட தமிழர் அவ்வாற்றுப் பெயர்களையே தமது குடியிருப்புக்கும் சூடி, அந்த ஆற்றின் முக்கியத்துவத்தையும் வெளிப்படுத்தியுள்ளமை இவண் வெளிப்படுகிறது.

**கரை**

ஆற்றுப் பெயர் போன்று, அதன் செல்வாக்கை இந்தக் கரை என்ற கூறும் உணர்த்துகிறது. தமிழகம். இலங்கையிலும் இப்பொதுக் கூறினைப் பரவலாகக் காணலாம்.

தமிழகம்- மணக்கரை, சாம்பவர் வடகரை, கோட்டைக்கரை,
மாங்கரை, பரவக்கரை, கனுவக்கரை, கோணக்கரை, திருவக்கரை, மல்லியகரை

இலங்கை - கோடிக்கரை, வாகரை, ஓடக்கரை, வெள்ளான்கரை, நஞ்சுண்டான்கரை, புளியன்கரை.

---

* ஆறு இயல்பாக அமைதலே பெரும்பான்மை காரணமாக அமைவதால் இவண் இணைக்கப் பட்டுள்ளது.

**துறை**

கடல்தொடர்பான பொதுக் கூறுகள் தமிழக ஊர்ப்பெயர் களில் அன்று இடம் பெறவில்லை என்பதையும், எனவே துறை என்பது பெரும்பாலும் அன்று ஆற்றுத்துறைகளைக் குறிக்கவே எழும்பியிருக்கும் என்ற எண்ணத்தையும் தமிழக ஊர்ப் பெயர்கள் நூல் தருகிறது. ஆயின் இன்று துறை என்பது கடற்றுறையைக் குறித்தும் வழங்கும் நிலைமை கண்கூடு. எனவே இப்பொதுக் கூறு சார்ந்து அமையும் ஊர்ப்பெயர்கள் அனைத்தையும் காலவாரியாகவும், வரலாற்று நிலையிலும் ஆராயின் தான் இவை எவ்வாறு அமைந்தன என்பதைத் துல்லியமாகக் கணக்கிடல் இயலும். பிறநீர் நிலைப்பெயர்கள் போன்றுஇரண்டு நாடுகளிலும் 'துறை'யும் பொதுக்கூறாக அமைந்து இவற்றின் ஒற்றுமைபட்ட தன்மையையியம்பு கின்றது.

தமிழகம்—சிந்து பூந்துரை, கொடுந்துரை, அம்பாந் துறை, திருவாவடுதுறை, நெல்லித்துரை, பயித்தந்துரை, பட்டுத்துரை, புக்கந்துரை, சீலாந்துரை.

இலங்கை- வல்வெட்டித்துறை, ஊர் காவல்துறை, பருத்தித்துறை காங்கேசன் துறை, நாவாய்த்துறை, பண்ணைத் துறை, சம்மான் துறை, கொம்மா துறை, சேனைத்துறை, அம்பிளாந்துறை, வேப்படித் துறை, சுங்கத்துறை, பெரியதுறை, பாணந்துறை, மாவிலங்கத்துறை, திருப்பெருந்துறை, கண்ட பாணந்துறை, பள்ளிவாசல்துறை.

இன்று சில ஊர்கள் இருக்கும் இடத்தினையும், அவை பெரும்பாலும் கடல்அருகில் இருக்கும் தன்மையையும் கொண்டு இவற்றைப் புரிந்து கொள்ளலாம் எனினும், சில ஆற்றுத்துறை களாக இருக்கலாம் என்னும் எண்ணமும் அமைகின்றது.

**மடு**

தமிழகம் - ஆனைமடுவு, வேடகட்ட மடுவு கொண்டல் மடுவு

இலங்கை - இத்தியடிமடு, கொடுவாமடு, களிமடு, வெற்றிலை போட்டமடு, கோரைக்கல்லிமடு, மருதையடிமடு, நெடியமடு, முடக்குமடு, சீரங்கமடு, பிரப்பையடி மடு, பாலமீன்மடு, பாலமடு, பாலையடிமடு.

**குடியிருப்புப் பெயர்கள்**

இயற்கையின் தாலாட்டில் வாழ்ந்த மனிதன், நிலையான உறைவிடத்தின் சிறப்பைப் புரிந்து கொண்ட பின்னர், குடியிருப்புகளை அமைத்துக் கொண்ட நிலையில் சுட்டப்பட்ட பெயர்களாக இவை அமைகின்றன.

குடியிருப்புப் பெயர்கள் பொதுக் கூறுகளாகத்தமிழகத்தில் ஊர்ப்பெயர்களை மிகுதியாகக் காண்கின்றோம். ஆயின் இலங்கையில் ஒரு சிலவே சுட்டும்படியாக உள்ளன.

தமிழகத்தில், அகம், இல், ஊர், குடி, சேரி, நகர் நத்தம், நாடு, பட்டினம், பதி, பள்ளி, பாக்கம், பாடி, புரம், மேடு, மங்கலம் போன்றன காலங்காலமாகப் பயிற்சி பெற, இன்று, அக்ரஹாரம், அகரம், அந்தல், இருக்கை, இருப்பு, காலனி, கிராமம், குடியிருப்பு, குப்பம், சேரி, தாங்கல், நகரம், நகரி, பட்டணம், பட்டி, பட்டு,பல்லி, புவனம், லோகம்,வரம், வலசு, வலசை, வாக்கம், வாடா, வாடி, வாழ்வு, விளாகம், விளை, ஹள்ளி போன்ற பல அமைகின்றன, இவை பலவும் பிறமொழிச் சார்புடன் அமைய,சில பிறமொழிச் சொற்களாக அமைகின்றன. ஒரே பொதுக்கூறின் திரிபாகவும் பல அமைகின்றன. பாக்கம், வாக்கம், புரம்,வரம், பள்ளி, பல்லி ஹள்ளி போன்ற பலவற்றை இவண் சுட்டலாம்.

தமிழகம் முழுவதும் பல்வேறு காரணங்களுக்காகவும் குடிபெயர்ந்த தமிழர் தம் குடியிருப்புகளைச் சுட்டுவதற்கு அமைத்துக் கொண்ட பெயர்களாக இவை அமைகின்றன. மேலும் இவையனைத்தையும் மாறுபட்ட குடியிருப்புப் பகுதி களைக் குறிக்கவே தமிழர் முதலில் சுட்டியிருக்க வேண்டும். பின்னர், சிறப்புப் பொருட்பேறினின்றும், இவை குடியிருப்பு என்பதைக் குறிக்கும் பொதுப் பொருட்பேறினைப் பெற்றிருக்கின்றன என்பதையும் கருதுதல் இயலுகிறது

சில இழிபொருள் பெற்றுள்ளன. மொழியின் இயல்பான தன்மை, இப்பொதுக் கூறுகளுக்கும் பொருத்த மாவதை இவண் நினைக்கலாம். சேரி பார்ப்பனச் சேரியையும் அன்று குறித்து இன்று இழி பொருட்பேறு பெற்று விட்டதைக் காண்கின்றோம். அதனைப் போன்று 'நகர்' சிறந்த பெரிய ஊரினைக் குறித்த நிலை சென்று, இன்று சிறிய குடியிருப்புப் பகுதிகளையும் குறிக்கத் தொடங்கியிருத்தலைச் சுட்டலாம். போரூர் என்ற கிராமம் இன்று குடியிருப்புகளால் நிரம்ப, அங்குள்ள பகுதிகள் லஷ்மி நகர், மங்களநகர் எனத் தனிக்குடியிருப்புகளாகச் சுட்டப்படுதல் அமைகிறது.

இத்தகைய நிலையில், இலங்கையின் குடியிருப்புக் கூறுகள் தரும் வரலாற்றைப் புரிந்து கொள்ளல் இயலவில்லை. ஊர்ப் பெயரின் ஆய்வு முழுமையே இவற்றிற்கெல்லாம் விடையளிக்க வல்லன.

இலங்கையில் காணப்படும். குடியிருப்புப் பொதுக் கூறுகளாக, அகம், இருப்பு, ஊர், குடியிருப்பு, சேரி, நகர், நாடு, பதி, புரம் போன்றன அமைகின்றன. இன்றுத் தமிழகத்தில் காணப்படும் பிறமொழிக் கூறுகளான காலனி போண்றவற்றை இவண் காணயியலவில்லை. மேலும் ஆழமான தொகுப்பு, இவற்றின் உண்மையை விளக்கலாம். 'புரம்' மாற்றம், பெற்று வரமாக இங்கு அமைய, அங்கு இவ்வித மாற்றம் இல்லை.

**அகம்**

தமிழகம் - மைதகம், சின்னகையகம், கல்லகம், மதுராந்தகம்.

இலங்கை - மல்லாகம், பண்ணாகம், சுன்னாகம்.

**இருப்பு**

தமிழகம் - செட்டியிருப்பு, குண்டாயிருப்பு, காத்தியாணிருப்பு மேலிருப்பு

இலங்கை - பாண்டிருப்பு, பட்டிருப்பு

**ஊர்**

தமிழகம் - இடமருவத்தூர், பெருங்கோட்டூர், மூவலூர், காவனூர், குளத்தூர், மாத்தூர், அந்தியூர்,

குன்னூர், ஆழியூர், ஈச்செங்கூர், தத்தனூர், முள்ளி குளத்தூர்.

இலங்கை— நல்லூர், புத்தூர், கரையூர், பாசையூர், நிந்தவூர்; ஏறாவூர், மகிழூர், மண்டூர்.

இலங்கை, தமிழகம் போன்ற 'ஊர்' கூறு இணைந்த ஊர்ப் பெயர்களில் மீண்டும் அடை இணையாது நிற்றலையும் இவண் சிந்திக்கலாம். தமிழகத்தில் ஊர் இணைந்த ஊர்ப் பெயர்களில் பொதுமை மிகுதி. மேலும் அடையை இணைக்கத் தூண்ட, இலங்கையில் பொதுமையின்மையே சிறப்பு அடை இணையாமைக்குரிய காரணம் எனலாம். எனவே தமிழகம் போன்று நெருங்கிய குடியிருப்புகளை இலங்கை பெற வில்லையோ என்றும் எண்ணத்தோன்றுகிறது.

## குடியிருப்பு

தமிழகம் — உத்தண்டன் குடியிருப்பு, காலன் குடியிருப்பு, கீழக் குடியிருப்பு.

இலங்கை — ஆறுமுகத்தான் குடியிருப்பு. சேனைக்குடியிருப்பு, சித்தாண்டிக் குடி, கல்முனை குடியிருப்பு, கழுவாஞ்சிக் குடி, சாத்தான் குடி, பரவன் குடியிருப்பு, புதுக் குடியிருப்பு, நடுவுக் குடியிருப்பு பழங்குடியிருப்பு, சேனைக்குடியிருப்பு (புத்தளம்).

இலங்கை ஊர்ப் பெயர்களில் பல குடியிருப்புகள் மருவி, குடி என நிற்றலைக் காண்கின்றோம். இந்நிலையைத் தமிழக ஊர்ப்பெயர்களில் காணல் இயலவில்லை.

## குறிச்சி

தமிழகம் — கல் குறிச்சி, இலுப்பைக் குறிச்சி, துலுக்கன் குறிச்சி, செங்குறிச்சி, கல்லிடைக் குறிச்சி, கள்ளக் குறிச்சி, விளாங் குறிச்சி, தேவியாக் குறிச்சி, செலகுறிசசி,

இலங்கை — வீரப்பராயன் குறிச்சி.

மலையின் அருகாமை குடியிருப்புகள் மட்டும் இப்பெயரில் சுட்டப்படுகின்றன.

**சேரி**

தமிழகம் — கூடுவாஞ்சேரி

இலங்கை — சாவகச்சேரி

**நகர்**

தமிழகம் — சகாயநகர், விருதுநகர், கிளியாநகர், புதுநகர்

இலங்கை— காரை நகர்

காரைத்தீவு, காரைநகராக இன்று மாற்றம் பெற்று இருப்பதை வரலாறு தருகிறது.

**நாடு**

தமிழகம் — அரக்க நாடு, கீழ் வல்ல நாடு, மாரநாடு, வளநாடு, ஊமத்த நாடு, கடநாடு, நன்னாடு

இலங்கை— வெளிநாடு, வன்னி நாடு

**பதி**

தமிழகம் — விஜயாபதி, நாலு வேதபதி

இலங்கை— ஆரையம்பதி

**புரம்**

தமிழகம் — ராதாபுரம், கிருஷ்ணாபுரம்

இலங்கை— மாவிட்டபுரம், சோழியபுரம், தொல்புரம், அனுராதபுரம், வல்லிபுரம், ஸ்கந்தபுரம், இராமநாதபுரம், உமையாள்புரம், உருத்திரபுரம், கணேசபுரம், கனகபுரம், காஞ்சிபுரம், குமரபுரம், மாவிட்டபுரம்.

**செயற்கை அமைப்பு**

இயற்கையைப் பார்த்துச் செயற்கையாக மேலும் பலவற்றைப் படைத்துப் பயன் கண்டவன் மனிதன். இன்று படைத்தும் வருகின்றான். இச்செயற்கை அமைப்பின் தனிச் சிறப்பும், முக்கியத்துவமும் எளிதில் அடையாளம் காட்டும் தன்மையில், இவையும் ஊர்ப்பெயரில் பொதுக் கூறுகளாகச் செல்வாக்குப் பெற்று திகழ்கின்றதைக் காண்கிறோம்.

இச்செயற்கைக் கூறுகளில், தமிழனின் வாழ்வோடு பல நிலைகளிலும் முக்கியத்துவம் பெற்ற நீர் நிலைகள் மிகுந்த இடத்தைப் பெற்றிருப்பதைத் தமிழக வரலாறு போன்று இலங்கை பெயர்களும் காட்டுகின்றன.

அணை, ஊத்து, ஊரணி, ஏந்தல், ஏரி, ஓடை, கடல், கண்மாய், கயம், கழி, கால், வாய்க்கால், கால்வாய், கிணறு, குளம், கேணி, சமுத்திரம், சாகர், சாகரம், சுனை, தடாகம், தீர்த்தம், பொய்கை, மடை, வாரி, வாவி போன்றன தமிழக ஊர்ப் பெயர்கள் சுட்டுவன. இவற்றுள், கடல் (சமுத்திரம், சாகர், சாகரம்—வடமொழிச் சொற்கள்) வாரி போன்றன ஏரியைக் குறிக்கப் பயன்படுத்தப்பட்ட சொற்களாக அமைகின்றன. இலங்கையை நோக்க, அம்பலம், அணை, ஏரி, ஓடை, ஊத்து, கால், கிணறு, குளம், கேணி போன்றன மட்டுமே பொதுக்கூறுகளாக அமைகின்றதைப் பார்க்கலாம்.

**அம்பலம்**

தமிழகம் — சுங்கானம்பலம்
இலங்கை— ஆண்டியம்பலம் (புத்தளம்)

**அணை** [20]

தமிழகம் — மேலணை, வரவணை
இலங்கை— இக்கீரனை, மாத்தனை, கடலணை

**ஏரி**

தமிழகம் — கேசவனேரி, பாகனேரி, பொன்னேரி, சித்தேரி, முருக்கேரி

இலங்கை— பூநகரி (பொன்னேரி) வாகநேரி, வன்னேரி, மின்னேரியா

**ஊத்து**

தமிழகம் — அய்யனாரூத்து, தாழையூத்து, அத்தியூத்து, கூவனூத்து, கண்ணூத்து

20. அணை—சேர்ந்த, பொருந்திய இடம் என்ற பொருளில், 'அணை' ஈற்று இடப்பெயர் 'அமைகிறது—இலங்கை இடப்பெயர் ஆய்வு—1— ப—67.

இலங்கை— தண்ணீர் ஊற்று (தனி ஊற்று), கொறுக்காப்புளி ஊற்று, வம்மியடி ஊற்று.

**ஓடை**

தமிழகம் — கடையனோடை, துலுக்கனோடை, சாம்பானோடை, காரனோடை

இலங்கை— களியோடை, மாவடியோடை, மீராவோடை காங்கேயன் ஓடை, கந்தரோடை, மருதோடை, சூரியோடை, திக்கோடை, விருதோடை, சுரியோடை

**கால்**

தமிழகம் — வாய்க்கால், இடைக்கால், பொட்ட வாய்க்கால் மணக்கால், ஊத்தங்கால், கரசங்கால்

இலங்கை— குளமங்கால்

**கிணறு**

தமிழகம் — மருதங்கிணறு, மல்லால்கிணர், காதக்கிணறு, வெள்ளக்கிணர், நாரைக் கிணறு.

இலங்கை— கொல்லன் கிணறு

**குளம்**

தமிழகம் — அச்சன் குளம், ஆரைக் குளம், இத்திகுளம், தாமரைக் குளம், வேங்கட குளம், அரசர் குளம், முக்குளம், குண்டு குளம்

இலங்கை— மாங்குளம், சிப்பிக் குளம், வன்னியர் குளம், கம்மாளன் குளம், ஈசான் குளம், பேய்க்குளம் சந்தனக் குளம், இத்திக் குளம், புளியங் குளம், பூவரசங்குளம், புற்குளம், ஆலங் குளம், பண்டாரக் குளம், கிரான் குளம், கனக ராயன் குளம், சேந்தான் குளம், பொதுக்குளம், பூக்குளம், வட்டன் குளம், பேய்க் குளம், சிப்பிக் குளம்

**கேணி**

தமிழகம் — திருவல்லிக்கேணி, சிலையன் கேணி, குருக்கேணி

இலங்கை— மாங்கேணி, காயாங்கேணி, பனிச்சங்கேணி தாமரைக்கேணி, நாவற்கேணி, கருவேப்பங் கேணி, கறுவாக்கேணி, மீராங்கேணி, ஐயங் கேணி, பொற்கேணி, சித்தங்கேணி, பத்தர் கேணி, நெடுங்கேணி, பன்றிக்கேணி, மருதங்கேணி.

இயற்கையான நீர் நிலைகளுடன், செயற்கையான நீர் நிலைகளை அமைத்து நீரினைப் பயன் படுத்திய தமிழர், தாவரங்களின் ஊடே வாழ்ந்த நிலையில், செயற்கையாகத் தம்மைச் சுற்றித் தாவரங்களையும் உண்டாக்கி, ஊர்ப்பெயர் களை அமைத்துக் கொண்டனர் என்பதும் தமிழக வரலாறு காட்டும் நிலையாகும். இதனை இலங்கையிலும் காண் கின்றோம்.

கொல்லை, சோலை, தோட்டம், பண்ணை, வேலி போன்றவற்றை இவண் சுட்டலாம்.

**கொல்லை**

தமிழகம்—மஞ்சக் கொல்லை, சொக்கன் கொல்லை.

இலங்கை—அழகொல்லை,

**சோலை**

தமிழகம்—திருவளர் சோலை, பெரப்பஞ் சோலை.

இலங்கை—தும்பாலஞ் சோலை, கொக்கட்டிச் சோலை, கூமாச் சோலை, புன்னைச் சோலை, பாலைச் சோலை, வட்டச் சோலை

**தோட்டம்**

தமிழகம்—பூந்தோட்டம், பாளே தோட்டம் பானவேடு தோட்டம்.

இலங்கை —மாதோட்டம், நரிப்புல் தோட்டம், பொன்னாங் காணி தோட்டம், அம்மா தோட்டம், குஞ்சம தோட்டம்

**பண்ணை**

தமிழகம்—நத்தம் பண்ணை

இலங்கை—தம்ப பண்ணை, வண்ணார் பண்ணை

**வேலி**

தமிழகம்—திருநெல்வேலி

இலங்கை—அச்சுவேலி, திருநெல்வேலி, நீர் வேலி.

அவர்களின் தொழில் தன்மை, கலையுணர்வு, அரசியல் தொடர்பு போன்ற வாழ்வியல் கூறினை விளக்கும் வண்ணம் அமைகின்ற செயற்கை அமைப்புக் கூறுகளையும் ஊர்ப்பெயர் களில் காண்கிறோம்.

அளம், ஆலை, சந்தை, பட்டடை, பேட்டை, பஜார், காவல், கோட்டை, துர்க்கம், புரிசை, மதில், கோயில், தளி, சத்திரம், சாலை, சாவடி, பந்தல், பாளையம், மடம், மண்டபம், வாசல் போன்ற பலவற்றைத் தமிழக ஊர்ப் பெயர்கள் தருகின்றன. இலங்கையில் ஆலை, கோட்டை, கோவில், சாவடி போன்ற சிலவற்றைக் காண்கிறோம்.

**ஆலை**

தமிழகம்—சித்தாலை, பூவாலை

இலங்கை—பன்னாலை, இளவாலை

**கடை**

தமிழகம்—புதுக்கடை

இலங்கை—சவளக்கடை என்பது யாழ்ப்பாணத்தில் உள்ளது. ஜவுளிக் கடையின் திரிபாக இருக்கலாமா என எண்ணலாம்.

**கோட்டை**

தமிழகம்—கருப்புக் கோட்டை, வெள்ளாளன் கோட்டை, புதுக்கோட்டை, தனிக் கோட்டை, குறிச்சிக் கோட்டை, காட்டுக் கோட்டை, புலியரணங் கோட்டை.

இலங்கை—வட்டுக் கோட்டை, ஆனைக் கோட்டை, சாவகன் கோட்டை காசி கோட்டை, வாகல் கோட்டை

**கோவில்**

தமிழகம்—நாகர் கோவில், மன்னார் கோவில். திரணீகற் கோவில், பெரிய கூடக் கோவில், காஞ்சிக் கோவில், கூத்தர் கோவில்

இலங்கை—திருக்கோவில்.

**சாவடி**

தமிழகம்—கீழ்ச்சித்திரைச் சாவடி, காரைச் சாவடி, குப்ப பிள்ளை சாவடி, எடையன் சாவடி

இலங்கை—மகாநவமிச் சாவடி.

**பாளையம்**

தமிழகம்—அய்யம் பாளையம், கல்லம் பாளையம், கவுண்டம் பாளையம், அக்கி செட்டி பாளையம், அரபிசம் பாளையம்.

இலங்கை—செட்டிபாளையம்

**வாயில்**

தமிழகம்—குடவாயில்
இலங்கை—கருணீகர் வாயில்.

வாயில்—வாசல், துவாரம் என்ற பொருள்கள் இதற்குண்டு. கருணீகர் வாழ்ந்த இடம் என்ற பொருளில் இலங்கையில் இப்பெயர் அமைந்திருக்கலாம்.

மேற்கண்ட பிரிவுக்குள் அடங்காத நிலையில் பல பொதுக் கூறுகள், இலங்கையில் தெரியவராத பொதுக் கூறுகள், தமிழக ஊர்ப் பெயர்களில் காணப்படுகின்றன. இவை முழுமையாக ஆராயப்படின், இப் பிரிவுக்குள் பல இணையலாம். பிறவகைப் பாடுகளாகவும் பிரிக்கும் நிலை அமையலாம். மேலும் இவை இலங்கையில் காணப்படுகின்றனவா? இல்லையா என்பதும் இலங்கையின் பெயர்கள் அனைத்தும் தொகுக்கப்படின் தான் உறுதியாகக் கூறுதல் இயலும். தமிழகத்தைப் பொறுத்த

வரையிலும், இப்பொதுக் கூறுகள் தெளிவில்லாத காரணத்தால், இவற்றின் விளக்கம் புலனாக வில்லை. எனவே இவையுணர்த்தும் செய்திகளும்புலப்படவில்லை.

### இலங்கையில் காணப்படும் பொதுக்கூறுகள்

தமிழகத்தில், இலங்கையில் இல்லாத பொதுக் கூறுகள் பல உள. இதனைப் போன்று, இலங்கையிலும் தமிழகத்தில் இல்லாத பொதுக் கூறுகள் அமைகின்றன. மேற்சண்ட பிரிவுக்குள் இவை முழுவதையும், இனங்கண்டு கொண்டு வகைப் படுத்தல் இயலலாம். ஆயின், இங்குத் தமிழகத்தின் வழக்கு, இலங்கை வழக்கு இரண்டு நிலையிலும், சில வேறுபாடு அமைவதாலும், ஒரே சொல் வழக்கு அமையும் பல பொருட்களுள், வேறுபட்ட பொருட்களை இரண்டு நாட்டாரும் பயன் படுத்துவதன் காரணமாகவும், எந்த பொருள் பற்றித் தோற்றம் பெற்றது என்பது தனித்தனியே ஒவ்வொரு ஊர்ப் பெயர் குறித்த ஆழமான ஆய்வு மூலமே தெளிவாகும். எனவே இவண் அகரவரிசையிலே இப்பொதுக் கூறுகள் ஆய்வுசெய்யப் படுகின்றன.

### ஆட்சி

தென்மராட்சி, வடமராட்சி என்ற ஊர்ப்பெயர்களை இலங்கையில் காண்கின்றோம். தென்னாட்டு, வடநாட்டு மறக்குலத்தோர் வசித்த இடம் இப்பெயர் பெற்றது என்பர்.

### ஆலி

யாழ்ப்பாணத்தில் அராலி, பலாலி, நவாலி, கிளாலி போன்ற ஊர்ப்பெயர்கள் அமைகின்றன. 'ஆலி - ஒலித்தல் என்ற பொருள் நிலையிலேயே முதன்மை பெறுகின்றது, என்ற கருத்து அமைகிறது.[21] இதனுள் பலாலிபற்றிக் கூறும்போது 'மயில்கள் பலவாக (ஆலுதல்—ஒலித்தல் மயிலின்குரல்), நின்று ஒலிக்கும் இடம் என்பர்.[22] எனின் மயிலாப்பூர் என்ற ஊர்ப் பெயருடன் இப்பெயர் தோற்றத்தில் ஒப்புமை பெறுகிறது.

---

21. இலங்கை இடப்பெயர் ஆய்வு – 1. ப—67.
22. ,, — ப - 67.

**ஆனை**

யாழ்ப்பாணத்தில் சங்கானை என்றதொரு ஊரினைக் காண்கின்றோம். தமிழகத்தில் உண்ணி, கோழி, துருகை என்ற மூன்று உயிரின் பெயர்களைக் காணுகின்றோம். ஆயின் இவ்வகையில் இதுபோன்ற பெயர்கள் இல்லை. மேலும் இந்த சங்கானையில் அமையும் ஆனை என்பது விலங்கா அல்லது மருவிய பிற சொல்லா என்பன போன்ற ஐயங்கள் எழுகின்றன. இப்பெயர் சிறப்புக்கூறுடன் இணைந்து அமையும் போது தெளிவில்லாமல் அமைகின்றது.

**இட்டி**

தையிட்டி, போயிட்டி, மயிலிட்டி, குரும்பசிட்டி என்பன இட்டி ஈற்றுப் பெயர்களாக யாழ்ப்பாணத்தில் அமைகின்றன. இடு - தங்குதல். இட்டி — தங்கி வாழும் இடம் என்ற பொருளில் வந்தது என்கின்றார் கலாநிதி. இ. பாலசுந்தரம்.[23]

**இறவு**

யானையிறவு, வலையிறவு, வலைகட்டிறவு போன்ற ஊர்ப் பெயர்கள் இலங்கையில் உள்ளன. நிலத்தின் இறக்கமான பகுதி என்ற நிலையில், நிலத்தின் அமைப்பு காரணமாக அமைந்த பெயராக இருக்கலாம்.

**கட்டு**

நாயன்மார்கட்டு, மங்கிகட்டு, மீனோடைகட்டு. தமிழ் லெக்ஸிகன், பந்தம், கட்டுப்பாடு, ஆணை, உறவின்கட்டு, அரண் எனப் பொருள் தருகின்றது (பக் - 651). ஆயின் இதனைப் பற்றிக் கூறும் போது ‘காட்டு நிலத்தினை அடுத்துள்ள கிராமங்கள்’ என அறிஞர் ஒருவரால் சுட்டப்படுகிறது[24] எனவே இந்த அறிஞர் கருத்துப்படி, காட்டு நிலத்தினை அடுத்துள்ள பகுதிகளில் குடியிருப்புகளைக் கட்டிக் கொண்டதனால் கட்டு என்ற சொல்லை இக்குடியிருப்புகளைக் குறிக்க நாளடைவில் வழங்கி இருக்கலாம் எனத் தோன்றுகிறது.

---

23. ,, — பக் - 39, 40.
24. மட்டக்களப்பு - மக்கள் வளமும் வாழ்க்கையும் —ப - 14.

**கடவு**

அங்கணான் கடவு யாழ்ப்பாணத்தில் காணப்படும் ஓர் ஊர். 'கடவு' என்பது கடவையாகவும் அமையும் என்பதைப் பெருமாள் கடவை (யாழ்) வேர்க்குத்திக் கடவை (யாழ்) ஊர்களை விளக்குகையில் சுட்டுகின்றார் சு. பாலசுந்தரம்.[25] இச்சொல், வழி, பக்கம், தணக்கு, எருமைக்கடா, ஆட்டுக்கடா போன்ற பொருட்களையுடையது (தமிழ் லெக்ஸிகன் — ப-663). இச்சொல்லுக்கு விளக்கம் தர வந்த அவர், கடவை — கடந்து செல்லுமிடம், எந்த இடத்தைக் கடந்து சென்றார்களோ, அந்த இடத்திற்குக் கடவை என்ற பெயர் ஏற்படுவதாயிற்று என்கின்றார். கோயிற் கடவை என்ற பெயர் மாவிட்டபுரத்தின் பழைய பெயர்.

**கண்டி**

யாழ்ப்பாணத்தில் அமைகிறது கோயிலாக்கண்டி. மட்டக்களப்பில் சங்கமான் கண்டி காணப்படுகிறது. எருமைக்கடா, மந்தை, அடைத்து மீன் பிடிக்கும் கருவி வகை, கண்டிக் கல், கழுத்தணிவகை போன்ற பொருட்கள் தமிழில் இதற்கு அமைகின்றன. (தமிழ் லெக்ஸிகன்-ப-689) எனினும் நீர்நிலையிலிருந்து வந்த இடப்பெயர்க்கூறு என்பது 'ஈழநாட்டு இடப்பெயர்களில் தமிழின் ஆளுமை' கட்டுரையாசிரியர் கருத்து.[26] வெளியிடம் என்ற பொருளும் இதற்கு உண்டு. எனவே மேலும் இச்சொல் ஆராய்ச்சிக் குரியது.

**கவட்டி**

கவட்டி — 'கொல்லன் கவட்டி' என்ற ஊர்ப்பெயர் யாழ்ப்பாணத்தில் காணப்படுகிறது. 'கவடு — கவட்டி-கவட்டித்தரை. கற்கள்நிறைந்த தரைப்பகுதியுடைய பகுதியைக் கவட்டி என்ப. யாழ்மாவட்டத்தில் கவட்டி என்ற பெயருடைய ஐந்து கிராமங்களும் அனேக குறிஞ்சிப் பெயர்களும் காணப்படுகின்றன. மட்டக்களப்பு வழக்கில் வயற்காணிகளில் வளம் குறைந்த நிலம் கவட்டி எனப்படும் என்கின்றார் இ. பாலசுந்தரம்.[27]

---

**25.** இலங்கை இடப்பெயராய்வு 1 — ப - 53.
**26.** ஈழநாட்டு இடப்பெயர்களில் தமிழின் ஆளுமை. ப - 226.
**27.** இலங்கை இடப்பெயர் ஆய்வு · 1 - ப. 17.

**கரச்சை**

மைலன் கரச்சையை மட்டக்களப்பில் காணலாம். உவர் நிலம் என்ற பொருளையுடையது இது என்பர்.[28] தமிழில் கரப்பு என்று சொல்லின் வழக்குத்திரிபாக இதனைக் கருதலாம். இந்த நிலத்தின் தன்மையைக் கொண்டு மேலும் முடிவு செய்யலாம்.

**களப்பு**

மட்டக்களப்பு—மாவட்டப் பெயரிலேயே அமைந்துள்ள பொதுக்கூறு இது. கடலில் ஆழமில்லாத இடம் (Shallow parts of the sea) எனத் தமிழில் குறிக்கப்படுவது களப்பு (தமிழ் லெக்ஸிகன் - ப—811). 'ஆழமற்ற நீர் நிலையைக் களப்பு என்பது இந்நாட்டு வழக்கு ... இதனை மட களப்புவ எனக் கொண்டு சேறு பொருந்திய நீர் நிலை என்னும் சிங்களச் சொல்லில் இருந்து திரிபாயமைந்தது என்றும், மட்டுக்கலப்பு எனக் கொண்டு தேன் பாயும் நாடு என்ற தமிழ்ச் சொற் பிறப்பமைந்தது என்றும் கூறுவர்' என்பர்.[29] இன்றைய மட்டக் களப்புப் பகுதியைக் கொண்டு அதன் பெயர்க் காரணத்தைச் சுட்டுகின்ற நிலையைக் காண்கின்றோம். ஆயின் தமிழில் களப்பு, கடலில் ஆழமில்லாத இடத்தைக் குறிக்கின்ற நிலையினையும், கடலின் அருகாமையும் முதலில் அந்த இடம் கடற்கரையாக இருந்த நிலையில் அது களப்பு என்ற சொல்லால் குறிக்கப்பட்டதோ என்ற எண்ணம் எழுகிறது. அதனருகில் உள்ள 'அமிர்த கழி' என்ற ஊர்ப்பெயரும் 'கழியை' நினைவூட்டுகிறது.

**காமம்**

கொடிகாமம், வீமன் காமம், வலிகாமம், உறுகாமம், இறக்காமம், பழுகாமம், கதிர்காமம், சாகாமம், தம்பல காமம் போன்ற பல ஊர்ப் பெயர்கள் இலங்கையில் உள. 'காமம்' என்பதுகுறித்து இலங்கை அறிஞர்களிடையேயும் பல

28. மட்டக்களப்பு மக்கள் வளமும் வாழ்க்கையும் - ப - 43

29 இடப்பெயர் வரலாறு — மட்டக்களப்பு மாவட்டம் பக். 120-21

விதகருத்து மாறுபாடுகள் உள. ஒவ்வொரு ஊர்ப்பெயர் குறித்தும் ஆழமான ஆய்வே இவற்றிற்கு விளக்கம் தரவியலும் என்பதற்குச் சான்றாக இக்கருத்துகள் முடிவுக்கு வர இயலாத தன்மையை இயம்புகின்றன.

'காமம்' என்பதற்கு விருப்பம், இன்பம் என்ற பொருட்களைத் தமிழில் காண்கின்றோம். (தமிழ்லெக்ஸிகன் - ப. 872) எனவே விரும்பத் தக்க இடம் என்பது இச்சொல்லுக்குப் பொருந்துமா எனப்பார்க்கலாம். மேலும் தமிழ் லெக்ஸிகன் கமம் என்பதற்கு நிறைவு, விவசாயம், வயல் என்ற பொருட்களைத் தர இப்பொருட்களையும் எண்ணிப்பார்க்கலாம். இன்னும் விவசாயத்தைக் குறிக்க கமம் கமச்செய்கை என்ற சொற்களை இலங்கைத் தமிழர் பயன்படுத்துகின்றனர். அங்குள்ள அறிஞர் ஒருவர் 'காமம் - கமம் என்பதன் திரிபு; வயல் எனப்பொருள்படும்' என்கின்றார்.[30] எனவே வயலில் குடியிருப்புகளைக் கொண்டதன் காரணமாக இப்பெயர்கள் அமைந்திருக்கலாம். தமிழகத்தில் விளை என்ற பொதுக் கூறுடன் தொடர்புடையதாக இதனை எண்ணலாம்.

'கமம் காமம்; கம என்பதன் பொருள் நீர் பூமியைப் பிளத்தல், வெட்டுதல் என்பதாகும். நிலத்தைப் பண்படுத்தி நீர் பாய்ச்சி விளைநிலமாக்கிய இடம் கமம் எனப்படும்' எனவும், 'கிராம' என்னும் வட சொல்லே 'கம'என்று கொள்ளவும் சிலர் துணிவர். கமம் வளம் நிறைவு பொலிவு என்றும் பொருள் கொண்ட சொல். இவை சிறந்த விளைநிலங்களைக் கொண்ட ஊர்களைக் குறிக்கும்' எனவும் குறிப்பிடுவர் தி. க. இராசேசுவரன்.[31]

குடா

'சோற்றுக்குடா, பாலைக்குடா, தாளங்குடா, புளியடிக்குடா புன்னைக்குடா, கற்குடா, பாசிக்குடா, கன்னன்குடா, காஞ்சுரங்குடா, முதலைக்குடா. தாழங்குடா, சிறட்டையன் குடா, ஆலங்குடா, கல்குடா, கண்டகுடா, மண்டலகுடா,

30. மட்டக்களப்பு — மக்கள் வளமும் வாழ்க்கையும் - ப. 39.
31. ஈழநாட்டு இடப்பெயர்களில் தமிழின் ஆளுமை—ப—222.

நாவற்குடா, புளியடிக்குடா, நெல்லிக்குடா, பாலைகுடா, தண்ணிகுடா போன்ற பலகுடா ஊர்ப்பெயர்கள் இலங்கையில் காணக்கிடைக்கின்றன. தமிழகத்தில் வங்காள விரிகுடா என்று கடலின் பெயரைக் காண்கின்றோமே தவிர, ஊர்ப்பெயர்க் கூறாக இது அமையவில்லை. சிலாபம் அருகில் 'குடா பாடுவ' என்ற ஊர் காணப்படுகிறது. குடா தன்மை இலங்கையின் நில அமைப்பை விளக்குவது போன்று அமைகிறது. மட்டக்களப்புப் பகுதியில் 'குடா' பொதுக்கூறுமிகுந்துள்ளது. இதற்குரிய காரணம் ஆராய்ச்சிக்குரியது. கடல் அருகே வாழவேண்டிய சூழல் காரணமாகப் பொதுவாக, இலங்கையில் இவை மலிந்து இருக்கலாம்.

**சேனை**

வரிப்பத்தன்சேனை, மாவிலங்கையடிசேனை,பாற்சேனை, வாழைச் சேனை, முறக்கட்டான் சேனை, கட்டாளைச்சேனை, பாம்பன்சேனை, பன்சேனை, அரசடிச்சேனை, ஆலயடிச் சேனை, இலுப்படிச் சேனை, இலுப்பையடிச்சேனை, கிரைக்கடிச்சேனை கூழாவடிச்சேனை, நெடுஞ்சேனை, பொன்னாங்காணிசேனை, பருத்திச்சேனை, மணற்சேனை, குரக்கஞ்சேனை, பாவக்கொடி சேனை போன்றன மட்டக் களப்பில் அமைகின்றன.

தவிர, இலங்கையின் பிறபகுதியில், சேனா கருவுச்சேனை, செட்டிசேனை, எள்ளுச்சேனை, கள்ள மேடுச்சேனை, காற்றுக்குச்சேனை, கிழவாமடுச்சேனை, குறதிகேனா, மறவன்சேனை, நெய்க்காரசேனை, புளியஞ் சேனை, சண்டிச்சேனை (புத்தளம்) குறதிசேனா (குருநாகல்) அத்தியடி மூலச்சேனா (அனுராதபுரம்) போன்றவற்றைக் காண்கின்றோம்.[32]

சேனைக்கு நாற்படை, ஆயுதம், சட்டம், தெரு, கடைத் தெரு, சந்தை, சேணம், சுருணை வகை போன்ற பல பொருட் களைத் தமிழ் லெக்ஸிகன் தருகிறது. (ப—1641)

ஆயின் இதற்கு அந்நாட்டார் ஒரே பொருளைச் சுட்டுகின்றனர்.

32. Tamil Place Names in Ceylon outside the Northern and Eestern Provinces—P—491

'காட்டு நிலத்தினை அடுத்துள்ள கிராமங்கள் சேனை என்ற பொதுக்கூறினைப் பெற்றுள்ளன.'[33]

'போர்ப்படையினர் போரில்லாக் காலங்களில் காடு வெட்டிப்பயிர் செய்த இடங்கள் சேனைகள் என்றும் அழைக்கப் பட்டுவந்துள்ளன.'[34]

காட்டுக்குள்ளே சிறு கமம் செய்தல், வேடர்கள் செய்வர்; இன்று கஞ்சா பயிரிடுவது போன்றது; இதனைச் சிங்களர் சேனை Cultivation என்பார், என்கின்றார் திரு.இராசசிங்கம்.[35]

இவற்றை நோக்க, சிறப்புக்கூறு அனைத்தும் தாவரச் சார்புடைமை,பயிரோடு தொடர்புடைய இப்பொதுக்கூறினை விளங்கச் செய்கிறது. மேலும் தமிழ் லெக்ஸிகன் சுட்டும் பொருட்கள் மிகுந்த விளக்கத்தை அளிக்காத நிலையில் போர்ப்படையினர்த் தொடர்பாகத் தோற்றம் பெற்றதாகச் இச்சொல்லைக் கருதலாம். படையினர் போரில்லாத காலங் களில் காடுகளை வெட்டிப் பயிர் செய்தனர் என்ற பொருள் பொருத்தமாக அமைகிறது. அத்தகைய இடங்கள் முதலில் சேனை எனக் குறிக்கப்பட்டு, பின்னர் காடுகளில் சிறு பகுதி விவசாயம் அனைத்தையும் குறிக்கும் பொதுச் சொல்லாக இச்சொல் ஊர்ப்பெயர்களில் இடம் பெற்றிருக்கக் கூடும் என்பதை இவண் எண்ணிப் பார்க்கலாம்.

### தளவாய்

மட்டக்களப்பில் --சடையன் தளவாய், தளவாய், படியத் தளாவ போன்ற ஊர்ப்பெயர்கள் காணப்படுகின்றன. மட்டக் களப்பில் இதற்குப் புல்வெளி எனப்பெயர் வழங்கினும்[36] தமிழில் இதற்குப்படைத் தலைவன் என்ற பெயரையே காண்கின்றோம் (தமிழ் லெக்ஸிகன்—ப—1802). எனவே இது குறித்து மேலும்

33. மட்டக்களப்பு மக்கள் வளமும் வாழ்க்கையும்— ப—43.
34. ஈழநாட்டு இடப்பெயர்களில் தமிழின் ஆளுமை—ப—220.
35. நேரில் கேட்டபோது சொல்லியது.
36. மட்டக்களப்பு மக்கள் வளமும் வாழ்க்கையும்—ப—38.

ஆய்வு தேவைப்படுகிறது. 'தளாவ' என்ற பிறசொல்லின் திரிபோ தளவாய் எனவும் எண்ணிப் பார்ககலாம்

**தாழை**

'பேய்த்தாழை'யை மட்டக்களப்பில் காணலாம். தமிழில் செடிவகையாகச் சுட்டப்படினும் ஊர்ப்பெயரில் அமைய வில்லை. தாழை மிகுதி காரணமாக இவ்விடம் இப்பெயர்க்கூறு பெற்றிருக்கலாம்.

**தீவு**

இலங்கையில் தீவு என்ற பொதுக் கூறுடைய ஊர்ப்பெயர் கள் பல உள்ளன. யாழ்ப்பாணத்தில் காரைத்தீவு (காரைநகர்), முல்லைத்தீவு, நெடுந்தீவு, கச்சைத்திவு, பசுத்தீவு, மட்டக் களப்பில் கோயிற்போரதீவு, முனைத்தீவு, கன்னியம்தீவு, நாசுவன் தீவு, அரசடித்தீவு, மான் தீவு, திமிலத்தீவு வவுணத்தீவு, ஈச்சந்தீவு, சல்லித்தீவு, கரையாக்கன் தீவு, காரைத்தீவு, கருங் கொட்டித்திவு, மல்லிகைத் தீவு, புளியன்தீவு, மகிழடித்திவு, தோற்றாத்தீவு, புளியன்தீவு, அரசடித்தீவு, பெரியபோரதீவு காணப்படுகின்றன.

இவற்றைத் தவிர, புத்தளம் பகுதியில், எருமதீவு, இப்பன்திவு, காக்கை தீவு, காரதீவு, காரைதீவு கருக்கதீவு, கிள்ளிதீவு, கோத்தன் தீவு, மண்ணதீவு, மண்டமாரித்தீவு, மாந்தீவு, முடன்திவு, ஒட்டகரன்திவு. பாம்புத்தீவு போன்றனவும் காணப்படுகின்றன.[37]

நான்கு பக்கமும் நீர் சூழ்ந்த நிலம் என்ற தமிழ் மொழிப் பொருள் இவண் அனைத்து ஊர்ப்பெயர்கட்கும் பொருந்துமா எனப்பார்க்கலாம். எனினும் இப்பகுதிகளில் இயற்கை அமைப்பு கடல் சார்பு மிகுதி காரணமாக அனைத்துப் பெயர்களும் பொருத்தமாக அமைந்திருக்கலாம் என எண்ணத் தோன்றுகிறது.

---

37. Tamil Place Names in Ceylon Outside the Northern and Eartern Provinces —p—489.

### தெரு

மட்டக்களப்பில் 'கல்லடித் தெரு' வினைக்காண்கின்றோம். தெருப் பெயர் பின்னர் ஊர்ப்பெயராகச் சுட்டப்பட்டு இருக்கலாம்.

### தேசம்

'பிரமதேசம்' என்றதொரு ஊரினை யாழ்ப்பாணத்தில் காண்கின்றோம்.

### தொடுவாய்

'மஞ்சள் தொடுவாய்' என்ற ஊர் மட்டக்களப்பில் அமைகின்றது.

தொடுவாய் என்பதற்கு அவண் நீரோடை எனப் பொருள் உரைப்பர்.[39] சங்கமுகம், புறங்கூறுகை (Confluence or junction as of two rivers or of a river with the sea) என்ற பொருட்களைக் காண (தமிழ் லெக்ஸிகன்—2089) இப்பொருள் பொருத்தமாக அமைகிறது. எனினும் 'புகார்' போன்று முதலில், இரண்டு ஆறு அல்லது ஆறு கடலினைத்தொடும் இடமாக அமைந்திருக்கலாம். பின்னர், குறிப்பிட்ட ஆறினைக் குறிக்கும் நிலையில் அப்பகுதிக்கு இப்பெயர் அமைந்திருக்கலாம். எனவே தொடுவாய் என்பது இன்றைய நோக்கில் நீரோடையாகப் பொருள் பெற்றிருக்கலாம் எனத் தோன்றுகிறது. களப்பணி செய்து நோக்க, இப்பெயருண்மை நன்றாகப் புலப்பட வாய்ப்புண்டு.

### தோணா

கீரித்தோணா, பாலையடித் தோணா இவற்றை மட்டக்களப்புப் பகுதியில் காண்கின்றோம்.

தோணா முகம் என்பதற்குத் தமிழில், A town surrounded with a moat, being the chief of 400 Villages: அகழ் சூழ்ந்ததும் 400 கிராமங்கட்குத் தலைமையானதுமான நகரம் என, லெக்ஸிகன் பொருள் கூறுகிறது (ப—2109). ஆயின் உவர் சதுப்பு நிலம் என்றக் கருத்து அப்பகுதியில் நிலவக்

---

39. மட்டக்களப்பு மக்கள் வளமும் வாழ்க்கையும்—ப—40.

காண்கின்றோம். தமிழ்ப் பொருள் நிலையில், இது இருக்குமாயின்சிறப்புடையதொரு நகரமாகத் திகழ்ந்திருக்க வாய்ப்புண்டு. ஆயின் இவ்வூர்களைப் பற்றிய அவ்வெண்ணங்கள் தெளிவாகாத நிலையில், உவர் சதுப்பு நிலத்தைத் தோணா என்று கூறும் வழக்கு அம்மக்களின் வட்டார வழக்காக இருக்கலாம் அல்லது பிறமொழித் திரிபாக இருக்கலாம்.

**படை**

மட்டக்களப்பில் 'செங்கற்படை' காணக்கிடைக்கிறது.

சேனை, அறுவகைச் சேனை, திரள், பரிகாரம், ஆயுதம், கருவி, சாதனம், இரத்தினத்திரவியம் என்ற பொருட்களைத் தமிழ் லெக்ஸிகன் தருகிறது (ப — 2445). ஆயின் பாறையமைப்பு என்பது அங்குள்ள பொருளாகச் சுட்டப்படுகிறது.[40] செங்கற்படை என்ற ஊரின் வரலாறு புரியும் போது 'படையின் விளக்கமும் புலனாகும்.

**பந்தி**

ஆனைப்பந்தி என்ற ஊர்ப் பெயர் யாழ்ப்பாணத்திலும் மட்டக்களப்பிலும், அமைகிறது. கட்டு, கட்டுதல், ஒழுங்கு, அமர்ந்தவர் வரிசை, குதிரை முதலியவற்றின் சாலை போன்ற பொருட்களில்[41] குதிரை போன்றவற்றைக் கட்டிய இடம் என்ற பொருட்களையும் காண்கின்றோம். இந்நிலையில் ஆனைகள் கட்டப்பட்ட இடமாக ஒரு காலத்தில் இருந்த இடமாக இதனைக் கருதலாம். 'போர்த்துக்கேயர், ஒல்லாந்தர் காலங்களில் யானைகளை ஏற்றுமதி செய்வதற்காக அவற்றைக் காடுகளிற் பிடித்து வந்து இவ்விடத்திற் கட்டி வைத்தனர் என்றும், அவ்வாறு கட்டி வைத்த யானைகளுக்குத் தீனிபோட அமர்த்தப்பட்ட மக்கள் அதன் பாகங்களில் வசித்தனர் என்றும் அறிய முடிகிறது. மட்டக்களப்பிலும், யாழ்ப்பாணத்திலும் ஆனைப் பந்தி என்னும் இடங்களின் பாங்கரிற் தனக்காரர் என்ற சாதியினர் வாழ்ந்து வருவதை இன்றும் நோக்கலாம்.[42]

---

40. மட்டக்களப்பு —மக்கள் வளமும் வாழ்க்கையும் — பக்-44
41. தமிழ் லெக்ஸிகன் — ப— 2482
42. நான்காவது அனைத்துலகத் தமிழாராய்ச்சி மாநாடு — முதலாம் தொகுதி — ப. 122.

### பரவை

யாழ்ப்பாணத்தில் வேலம்பரவை காணப்படுகிறது.

கடற்கரைக்கு அருகில் உள்ள ஊர்கள் கடலால் பெயர் பெற்ற நிலை பெரும்பாலும் ஊர்ப்பெயர்களில் காணப்படாத ஒரு கூறு. தமிழில் பாக்கம், அலைவாய் என்பனவும், குடா, தீவு போன்றனவும் கடற்கரைச் சார்பு காட்டுவன எனினும் கடல் பெயரால் அமையவில்லை. இவண் பரவை என்பதற்குக் கடல் என்ற பொருள் இருப்பினும், ஆடல், மதில், திடல் போன்ற பிற பொருட்கள் உண்மை[43] கடலை விடவும் இப் பொருட்கள் பொருத்தமுறுமா எனக்காண இடமளிக்கின்றது. இந்த ஊர்ப்பெயரின் உண்மை வரலாறே தெளிவினை வழங்க வல்லது.

### பரிப்பு

புத்தளத்தில் பொன்பரிப்பு என்றதொரு ஊரினைக் காண் கின்றோம். ஆயின் இதன்பொருள் புலனாகவில்லை. தமிழில் பரப்பு அல்லது பரம்பு போன்றவை இதன்தொடர்புடையதாக அமையுமா என்பதும் ஆய்விற்குரியது.

### பளை

மட்டக் களப்பில் பட்டிப்பளை, மாட்டுப்பளையும், யாழ்ப் பாணத்தில் தெல்லிப் பளையும் காணக் கிடைக்கிறது. பளை என்பதன் பொருட்களைக் காண[44] விலங்கு களைக் குறித்த இச்சொல், பின்னர் விலங்குகள் கட்டி வைக்கப்பட்ட இடத்தைக் குறித்திருக்கலாம் என்ற எண்ணத்தைத் தருமாறு அமைகின்றன. பாழி என்ற சொல்லை, பளையுடன் தொடர்பு படுத்தி இரண்டும் தூய தமிழ்ச் சொல் என்று நிறுவியது பொருத்தமானது என்பார் இ. பாலசுந்தரம்[45]

---

43. தமிழ் லெக்ஸிகன்—ப—2504
44. பள்ளை—பள்ளம், குள்ளம், பள்ளையாடு—வயிறு பருத்த பிராணி—பளை விலங்கு முதலியவற்றின் வளை—தமிழ் லெக்ஸிகன் பக்—2553-55 பளை—கால் நடைக்குரிய இடம் மட்டக்களப்பு—மக்கள் வளமும் வாழ்க்கையும்—ப—41
45. தமிழ் இடப்பெயராய்வு—ப—46

**பற்றை**

ஆரைப்பற்றை என்ற ஊர் மட்டக்களப்புப் பகுதியில் உண்டு.

காட்டருவி என்னும் பொருளில் வந்தது என்பர் மட்டக் களப்பு மக்கள் வளமும் வாழ்க்கையும் நூலாசிரியர் (ப—37). தமிழ் லெக்ஸிகன், பற்றை— Malabar glory lily— செங்காந்தள் Bushes, low shrubbery— தூறு என உரைக்கிறது (ப—2558). பற்றை என்பதற்கு மட்டக்களப்புப் பகுதியினர் காட்டருவி யினை வட்டார வழக்காகக் கொண்டிருந்தனர்; காட்டருவி ஊர்ப் பெயர்க் காரணமாக இருந்தது எனின், மட்டக் களப்பு அறிஞர் கருத்தினை ஏற்கலாம். அல்லது ஆரை அறையின் திரிபாக அமைய, பற்றை குற்றுச் செடியினைக் குறிக்க, தாவர நிலையில் இப்பெயர் அமைந்திருக்கலாம் என எண்ணவும் வாய்ப்புண்டு.

**பிட்டி**

மட்டக் களப்பில் மல்க்கம் பிட்டி, வளத்தா பிட்டி, பட்டி யடிப்பிட்டி, எருக்காப் பிட்டியும் யாழ்ப்பாணத்தில் கரைப் பிட்டியும் காணப்படுகின்றன.

தமிழில் பிட்டி என்பதற்குப் பருத்திருக்கை சிறு கடை, குழந்தை நோய்வகை, பீடு, பிசைந்தமா என்ற பொருட்களைக் காண்கின்ற நிலையைத் தமிழ்லெக்ஸிகன் தருகிறது. (ப-2551)

உயர் நிலம் என்பது மட்டக்களப்பு அறிஞர் கூறும் கருத்து.[46]

தமிழில் காணப்படும் பொருள் பொருத்தமாகத் தெரிய வில்லை. எனவே பிட்டி, உயர் நிலம் என்ற வழக்கு அங்குள்ள மக்களுடையதாக இருக்கலாம். அல்லது பிறமொழித் திரிபா என்பது மேலும் ஆய்வுக்குரியது.

**புலவு**

சோனகன் புலவு, யாழ்ப்பாணப் பகுதியில் உண்டு.

---

46. மட்டக்களப்பு—மக்கள் வளமும் வாழ்க்கையும்—ப—40
புலவு, வெறுப்பு, புலால், இரத்தம், நரகம், வயல்— தமிழ் லெக்ஸிகன்—ப-2787.

'வயல்' என்ற பொருள் இவ்வூர் பெயருக்குப் பொருத்தமாக அமையலாம். 'புலம்' என்றச் சொல்லுடன் தொடர்புடையதாக இதனைக் கருத இயலுகிறது.

**புலை**

கொத்தியா புலை மட்டக்களப்பில் காணப்படும் ஊர்.

புலை--இழிவு; புலைச்சேரி, கீழ்மக்கள் வாழுமிடம் என்பது தமிழக மக்களிடையே வழக்கில் இருப்பினும் இவ்வெண்ணம் மட்டக்களப்பு மக்களிடமும் இருப்பின், இப்பொருளைக் கொள்ள இடமுண்டு புலம் எனவும் பொருள் கொள்ளலாம் என்பர் கே. கணபதி பிள்ளை.[47]

**பூவல்**

மட்டக்களப்பில் கரடிப்பூவல், விளினைப்பூவல், எண்ணம் பாலைப்பூவல் போன்ற ஊர்ப்பெயர்கள் அமைகின்றன.

ஊருணி, ஊறுநீர் என்ற பொருள் அமையும் நிலையில்[48] நீர்நிலை காரணமாகப் பெற்ற பெயராக இவற்றைக் கொள்ளலாம். கரடிப்பூவல், கரையடிப் பூவல் போன்ற பிற ஊர்களைப் புத்தளம் பகுதியிலும் காணக்கூடுகின்றது.[49]

**பொத்தனை**

மட்டக்களப்பில் ஆனை சுட்டான் பொத்தனை என்ற ஊர் உண்டு.

தமிழில் காண இயலாத இச்சொல்லுக்குக் குளம் என்ற பொருளைத் தருகின்றனர்.[50] பிறமொழிச் சொல்லா? அல்லது திரிபா என்பது மேலும் ஆய்வுக்குரியது.

---

47. முதல் உலகத் தமிழ் மாநாடு—ப—490.
48. பூவல்—ஊருணி, ஊறுநீர், இது துரவு எனவும் பொருள் கொள்ளும். மட்டக்களப்பு—மக்கள் வளமும்வாழ்க்கையும் —ப—39.

    பூவல், செம்மண்,சிவப்பு, துரவு--பூத்திடுகை, தமிழ் லெக்ஸிகன் ப—2851.

49. மட்டக்களப்பு—மக்கள் வள்மும் வாழ்க்கையும்—ப-40
50. இது குளம் எனப் பொருளாகும்—மட்டக்களப்பு—மக்கள் வள்மும் வாழ்க்கையும்—ப—42.

**முகம்**

மட்டக்களப்பில் கோணாமுகம் என்ற ஊர் உண்டு.

வாய், வாயில், கழி, இடம், மேலிடம், நுனி, தொடக்கம், வடிவு என்ற பொருட்கள் தமிழில் அமைகின்றன[51] வாயில் போன்ற பிற பொதுக்கூறுகள் உண்மை, இதன் பொருளுக்கும் பொருத்தமாகின்றது.

**முன்மாரி**

மட்டக்களப்பில் மாவடி முன்மாரி, குருந்தையடி முன்மாரி, மருங்கையடி முன்மாரி போன்ற ஊர்களைக் காண்கின்றோம்.

முன்மாரி—முன்மாரி வேளாண்மை பயிரிடப்பட்ட இடத்தினைக் குறிக்கும் என்ற கருத்து உண்டு.[52] தமிழில் அமையும் பருவமழைக்கு முன் செய்யும் விதைப்பு என்ற கருத்தையும் இணைக்க (தமிழ் லெக்ஸிகன்—ப-3303) இவ்வாறு பயிரிடப்பட்ட பகுதிகள் குடியிருப்பாக மாற்றப்பட்ட நிலையில், இப்பெயர்களை இவ்வூர்கள் பெற்றிருக்க வாய்ப்புண்டு.

**வட்டுவான்**

மட்டக்—வட்டுவான், மகிழவட்டுவான், வெருட்டிவட்டுவான், விளாவட்டுவான், மருதுவட்டவான், முள்ளி வெட்டுவான், மயிலவெட்டுவான், வேப்ப வெட்டுவான், கொண்டவெட்டுவான்.

பல ஊர்கள் இப்பொதுக் கூறுடன் இருப்பினும் இதன் பொருள் விளக்கமுறவில்லை.

**வட்டை, வத்தை**

இப்பொதுக்கூறு கொண்ட ஊர்ப்பெயர்கள் இலங்கையில் மிகுதியாக உள எனினும் இவற்றின் பொருள் குறித்த ஐயம் இன்னமும் விலகவில்லை.

மட்டக்களப்பில் காக்காச்சி வட்டை என்ற பெயருடைய ஊருண்டு. வட்டை என்பது வழி; அது வெட்டை, அதாவது வெளி, புலம் எனவும் பொருள்படும்[53] என்ற எண்ணம் உண்டு.

---

51. தமிழ் லெக்ஸிகன்—ப—3225
52. மட்டக் களப்பு—மக்கள் வளமும் வாழ்க்கையும்—ப—40
53. மட்டக்களப்பு—மக்கள் வளமும் வாழ்க்கையும்—ப—40.

வட்டை என்பது வயல்.[54] வயல் என்பதை மட்டக்களப்புத் தமிழில் வட்டை என்றே வழங்குவர் என்றும் அறிஞர் சுட்டுகின்றனர். வட்டுவத்தை, கொற்றாவத்தை, சித்தவத்தை, நலியாவத்தை போன்ற பல ஊர்கள் யாழ்ப்பாணத்தில் உண்டு. யாழ்ப்பாணத்தில் பத்து பெயர்கள் வத்தையை ஈறாகக் கொண்டு அமைகின்றன.[55]

மட்டக்களப்பில் கோணா வத்தை (தோணாவத்தை), மானிகாவத்தை, சின்னவத்தை, தம்பலவத்தை, மல்வத்தை காணப்படுகின்றன.

வத்தை—உள்வயிர மற்றது என்பது தமிழ் லெக்ஸிகன் சுட்டும் பொருள் (ப-3488).

வத்தை-பூந்தோட்டம் எனப் பொருள்படும் என்பது கே, கணபதிபிள்ளை கருத்து.[56]

வத்தை ஈற்றுப் பெயர்கள் ஈழத்தின் பல பாகங்களிலும் மிகவும் பரந்து காணப்படுகின்றன. பெரும்பாலானோர் கருத்து சிங்களச் சொல் இது என்பதாகும். ஆயின் கலாநிதி. இ. பாலசுந்தரம் வத்தை என்பது தூயத் தமிழ்ப்பெயர் என்பதில் ஐயமில்லை என்றுரைத்து,பல விளக்கம் தருகின்றார்.

'காய்ந்து வற்றிய மரத்துண்டுகள், நீர்ப்பரப்பைக் கடக்கும் கருவியாகப் பயன்பட்டபோது அம்மரத்துண்டுகள் வத்தை என வழங்கப்பட்டன.

குடியிருப்புக்குரிய குடிசை, வீடு முதலியவற்றைத் தண்ணீர் பரவாததும், என்றும் காய்ந்ததாக, வற்றலாக இருப்பதுமான மேட்டுப் பகுதிகளில் அமைத்துக் கொண்டனர். எனவே அவர் தம் குடியிருப்புப் பகுதி பெரு வெள்ளம் ஏற்பட்டபோதும் வற்றும் பகுதியாக இருந்தபடியால் அது காலப்போக்கில் வற்றை எனப்பட்டு வத்தையாகியதில் வியப்பில்லை.

நீர்ப்பரப்பைக் கடக்கப் பயன்பட்ட வத்தைகள் மலிந்த நீர்ப்பரப்புப் பாகம் இருமடி ஆகுபெயராய் 'வத்தை' என்று சுட்டி வழக்குப் பெற்றதென்றும் கொள்க.[57]

---

54. ,, ,, —ப—42.
55. இலங்கை இடப்பெயராய்வு —1—ப—29
56. மட்டக்களப்பு—மக்கள் வளமும் வாழ்க்கையும் —ப—14.
57. இலங்கை இடப்பெயராய்வு—I—ப—28.

வட்டையே சிங்களத்தில் வத்தையாயிற்று என்பாரும் உளர், சுவாமி ஞானப்பிரகாசர் தமிழில் உள்ள வட்டம் என்பதே வத்தையாயிற்று என்று கொடுக்கும் விளக்கத்தையும் இ. பாலசுந்தரம் எடுத்தியம்புகின்றார்.[58]

**வளை**

மட்டக்—கழுதாவளை.

சுற்றிடம், சங்கு, கைவளை, சக்கராயுதம், துளை, பொந்து, உத்திரம், மரத்துண்டு என்பது தமிழ் லெக்ஸிகன் தரும் பொருள் (ப-3555).

'வளைவு என்பதன் திரிபு. வளை, வளைவு, சுற்று என்று தமிழரது இடங்கட்குப் பெயர் உண்டு. எலிவளை, பன்றிவளை இருப்பிடம்' என்ற கருத்தும்[59] தமிழரிடம் இச்சொல் பயிற்சியைக் காட்டுகிறது.

வளை—பொருள் தெரியவில்லை. வெல: கால்வாய் எனப் பொருள் கொள்ளலாம்.[60] என்ற எண்ணமும் அமைகிறது. எனவே தமிழ்மொழியில் இச்சொல்லின் பொருள் தெளிவு காண இந்த ஊர்ப்பெயரின் வரலாறு இதற்கு மேலும் தெளிவு கொடுக்கலாம்.

**வில்**

யாழ்ப்பாணத்தில் 'மிரிசிவில்' லும், மட்டக்களப்பில் எருவில், கோளாவில், ஒலிவில், தம்பிலுவில், பொத்துவில் போன்றனவும் அமைகின்றன.

மேலும் வில்லு, ஆலம்வில்லு—கவிவில்லு, கரதன்வில்லு, நாகவில்லு, பனிச்சவில்லு, தழைவில்லு, வண்ணாதி வில்லு (புத்தளம்) மீன்வில்லு (அனுராதபுரம்) போன்ற பெயர்களும் இலங்கையில் அமைந்துள்ளன.[61] கொக்குவில், கோண்டாவில், நுணாவில், மட்டுவில், மந்துவில்,

58. ,, —ப—30.
59. ஈழநாட்டு இடப்பெயர்களில் தமிழின் ஆளுமை-ப-222.
60. மட்டக்களப்பு மக்கள் வளமும் வாழ்க்கையும்—ப—39.
61. Tamil Place Names in Ceylon Outside the Northern and Eastern Provinces—p—489

கொக்காவல், வேயாவல், வேவில், கெருடாவில், மீன்வில்லு பற்றியும் குறிப்புகள் உள்ளன.[62]

'வில்' என்பதற்குக் கிரயஞ் செய்தல், அம்பு எய்தற்குரிய கருவி, மூலநாள், விற்கப்படுதல், வில்லின் நாண், விற்கிடை, வானவில் என்பது தமிழ் லெக்ஸிகன் தரும் பொருள்.

நீர்நிலையிலிருந்து வந்த பொதுக்கூறு இது என்பதும்,[63] இது தமிழ்ச் சொல்; குளம் என்ற பொருளை உடையது என்பதும்[64] அங்குள்ள அறிஞர் கருத்து.

தி. க. இராசேசுவரன் குறிப்பிடும் போது, 'வளை, வில், கமம், பத்தை, வத்தை போன்ற இடங்களைக் குறிக்கும் சொற்கள் தென்னாட்டில் வழக்கில் இல்லை என்ற காரணத்தைக் காட்டி, இவை சிங்கள சொற்களே என்ற சிலரது கூற்றை ஏற்க முடியாமல் இருக்கிறது. ...விளை என்ற தமிழ்ச் சொல்லும் வில எனச் சிங்களத்தில் வருகிறது. எனவே விலம், வில், விளை, வளை என்பனவே சிங்களத்தில் வில, வெல எனப்பல வாறு வழங்கப்படுகின்றன, எனக் கருத்துத் தெரிவித்துள்ளார்.[65]

ஆயின் 'வெளியீற்றுப் பெயர்கள் திரிந்தே வலை, வல, வளை, வெல, வில் என்ற ஈற்றினையுடைய ஊர்ப்பெயர்கள் தோன்றியிருக்க வேண்டும். ஒலுவில். பொத்துவில், கோளாவில், எருவில், தம்பிலுவில் என்னும் வில் ஈற்றுப் பெயர்களையும் கருதாவளை என்னும் வளை ஈற்றுப் பெயரையும் நோக்கலாம்' என்பர். ம. சற்குணம்.[66]

கலாநிதி பாலசுந்தரம், எஸ். சபாரத்தின முதலியார், ஹோர்ஸ்பரோ, சுவாமி ஞானப்பிரகாசர் போன்றோர் அனைவரும் வில் என்பது சிங்களச் சொல் என்ற கருத்தினடிப் படையில் இப்பெயர்களை ஆராய்வதைத் தம் குறிப்பில்

---

62. ஈழநாட்டு இடப்பெயர்களில் தமிழின் ஆளுமை—ப—226,
63. மட்டக்களப்பு—மக்கள் வளமும் வாழ்க்கையும்—ப—39.
64. ஈழநாட்டு இடப்பெயர்களில் தமிழின் ஆளுமை-ப—222.
65. ,, ,,
66. இடப்பெயர் வரலாறு—மட்டக்களப்பு மாவட்டம். முதலாம் தொகுதி—ப—117.

மறுக்கின்றார்.[67] இலங்கைத் தமிழரின் பேச்சு வழக்கில் வில் என்பது பெரிய குளத்தையும், நீர்த் தேக்கத்தையும் குறித்து வழங்கக் காணலாம். இந்த வில் என்ற சொல்லே சிங்களத்தில் 'வில்' என்ற சொல்லாகக் குளத்தைக் குறிக்கிறது. வளைந்த இடத்தை, வளைந்து நீர் தேங்கி நிற்குமிடத்தைக் காரணப் பெயராக வில் என்பது தமிழில் குறித்து வழங்கிற்று' என்று சுட்டிச் செல்கின்றார். பல தமிழ்ச் சொற்கள் வழக்கு நிலையில் வேறுபடும் தன்மையில், தமிழ் நாட்டில் வில் குளத்தைக் குறிக்கா விடினும், இலங்கையில் குறிக்கலாம். எனவே இப்பெயர், காரணப்பெயராக அமைந்திருக்கலாம் எனத் தோன்றுகிறது.

எனினும், இப்பெயர் பற்றி மாறுபட்ட கருத்துகள் வழங்கப்படுவதால், இப்பெயர் தொடர்புடைய ஊர்ப்பெயர் கள் அனைத்தையும் சிறப்புக் கூறுடனும், நிலத்தின் தன்மை யுடனும் மேலும் ஆராயின் உண்மையைத் தெளிவாகச் சுட்டல் இயலலாம்.

**வெட்டி**

மட்டக்களப்பில் கராவெட்டியும், யாழ்ப்பாணத்தில் அளவெட்டியும் காணப்படுகின்றன.

வெட்டி என்பதற்குத் தமிழ் லெக்ஸிகன் மண்வெட்டி, வழி, பழைய வரி வகை என்ற பொருட்களைத் தருகிறது (3769). கலாநிதி, இ. பாலசுந்தரம் வெட்டிக்குடி எனும் நெய் கொடுக்கும் நிவந்தக்காரர், வெட்டி எனும் கோயில் வரி முகவெட்டி என்னும் சோழர் கால அதிகாரிகள், காடுவெட்டி என்ற குறிப்பு, தணிக்கை அதிகாரிகள் போன்ற பல குறிப்பு களைச் சுட்டிக் காட்டி, சோழர் கால நிர்வாகத்துடன் இச்சொல்லைத் தொடர்பு படுத்தலாம் என்பர்[68] ஆயின் இவரே அளவெட்டிக்கு விளக்கம் கொடுக்கும் போது, 'அளறு+ வளி அல்லது அளறு + வெளியாக இருந்து அள வெட்டியாயிற்று என்க' என்கின்றார்.[69] எனவே இச்சொல் ஆய்வும் மீண்டும் ஆய்வுக்குரியது.

---

67. இலங்கை இடப்பெயராய்வு—1—பக்—12, 13.
68. இலங்கை இடப்பெயராய்வு—ப-32.
69. ,, ,, —ப-32.

முடிவுரை

தமிழகம்— இலங்கை ஊர்ப்பெயர்களில் அமைந்துள்ள பொதுக்கூறுகள் பற்றிய இவ்வாய்வு சில எண்ணங்களைத் தருகின்றது.

தமிழக ஊர்ப்பெயர்கள் நூல் இப்பொதுக் கூறுகள் தமிழகம் முழுவதிலும் காணப்படுவதை ஒப்பிட்டு, இவை தமிழகத்தின் பகுதிகட்கு ஏற்ப மாறுபடும் தன்மை, ஒன்றுபடும் தன்மை முதலியவற்றை எடுத்தியம்புகிறது.[70] இதைப் போன்று தமிழகம் இலங்கை பொதுக்கூறுகளை ஆராயும் நிலை ஆழமாக அமையின் துல்லியமாகச் சில எண்ணங்களை அளிக்கலாம்.

ஆயின் இவண், பிறர் கருத்துகளின் சார்பில் நின்று, தமிழகம் இலங்கை ஊர்ப்பெயர்ப் பொதுக் கூறுகள் ஆராயப் பட்டதன் விளைவாக மேலான சில எண்ணங்களையே பெறல் இயலுகிறது.

1. தமிழகத்தில் உள்ள எல்லா பொதுக் கூறுகளையும் இலங்கையில் காணல் இயலவில்லை.

2. தமிழ் நாட்டில் இல்லாத பொதுக் கூறுகள் பல இலங்கையில் பொதுவாகவும், யாழ்ப்பாணம் மட்டக்களப்பு பகுதிகளில் மிகுந்தும் காணப்படுகின்றன, இவற்றுள்ளும் மிகுதியானவை மட்டக்களப்பில் கிடைத்துள்ள நிலையைக் காண்கின்றோம். அங்குள்ள தமிழ் மக்கள் அவற்றைப் புதியதாக அமைக்கப்பட்ட குடியிருப்புகட்கு வழங்கியிருக்கலாம். அவர்களது வட்டார வழக்குச் சொல்லாகவும் இதனைக் கருதலாம். இங்கு இன்னொரு எண்ணமும் சுட்டத் தக்கது.

தமிழகத்தில் இருந்து சென்றவர்கள் உடனே குடியிருப்புகளை அமைத்துக் கொள்ளும் போது தாய்நாடு உணர்வு காரணமாக இங்குள்ள பொதுக்கூறுகளைச் சுட்டிச்சென்றனர் எனவும் பின்னர் அங்கு நிலைத்து வாழத் தொடங்கிய போது தமக்கு ஏற்ற சூழ்நிலையில், அங்குள்ள வட்டாரச் சொற்களையும் புதிய குடியிருப்புகட்குச் சுட்டினர் எனவும் எண்ணலாம். அல்லது, இங்கு இருந்து சென்ற தமிழர் வைத்த பெயராக தமிழகம் இலங்கை ஒத்த பொதுக் கூறுகளையும், அங்கேயே

70. தமிழக ஊர்ப்பெயர்கள் —பக் 67—85.

பண்டு தொட்டு வாழ்ந்து வரும் தமிழர்கள் வழங்கிய குடியிருப்புகளாக இலங்கையில் மட்டும் வழங்கப்படும் பொதுக்கூறு சார்ந்த குடியிருப்புகள் அமைந்திருக்கலாமோ எனவும் எண்ணிப்பார்க்கலாம். ஆயின் இவையனைத்திற்கும் விளக்கமும் தெளிவும் தனித்தனியே ஊர்ப்பெயர் ஆய்வு முடிவிலேயே அமையக்கூடும்.

மேலும் இலங்கையில் கிடைக்கும் தமிழக ஊர்ப்பெயரில் அமையும் பொதுக்கூறுகள் அனைத்தையும் முதலில் தொகுக்க வேண்டும். பின்னர் அவற்றைப் பகுதி வாரியாக நோக்க வேண்டும். அப்போது எங்கு தமிழகத்தோடு நெருங்கிய உறவு இருந்திருக்கிறது என்பது தெளியலாம். சான்றாக யாழ்ப்பாணத்தில் மிகுதியாக ஒத்த பொதுக்கூறுகளையும், மட்டக்களப்பில் தனித்த பொதுக்கூறுகளையும் காண இயன்றால் அதனைக் கொண்டு முடிவுகள் பல பெறலாம். இலங்கை முழுவதும் உள்ள பொதுக் கூறுகள் தமிழரோடும் தமிழோடும் இலங்கை கொண்டிருந்த தொடர்பை விளக்கலாம். யாழ்ப்பாணத்தில் ஒத்த பொதுக்கூறுகள் மிகுதியாக அமையின் மூலம் அவற்றின் காலந்தோறும் தமிழர்கள் குடியிருப்புகளை, குடியேற்றம் காரணமாகத் அமைத்துக் கொண்டே இருந்தனர் என எண்ணலாம். மட்டக்களப்பில் வேறுபட்ட பொதுக்கூறுகள் மிகுதி எனில், அங்கு வந்த தமிழ் மக்கள் நெடுங்காலமாகத் தங்கி, அதன் காரணமாக தமக்குரிய வழக்குத் சொற்களைக் கொண்டு, தாம் புதிதாகக் அமைத்த குடியிருப்புகளைச் சுட்டியிருக்கலாமோ எனவும் எண்ணலாம். இவை அனைத்தும் மேம்போக்கான பார்வை தரும் சிந்தனைகளே. காலங்காலமாகத் தெரியாமலிருந்த ஊர்ப்பெயர்களை ஆழமாக ஆய்வு செய்தால் இவற்றைப் பற்றிய துல்லியமான முடிவுகளைப் பெறல் இயலலாம். மேலும் முக்குவதேசம், மலையர் குகநாடு என்ற மட்டக்களப்பின் பிறபெயர்கள், மலையாளப்பகுதி மக்களிடம் வழங்கிய தொல் தமிழ்ப் பெயர்களை இனங்காட்டுகிறது. தமிழ்ச் சொல்லில் பொதுக்கூறுகள் பரவலாக அமையும் தன்மை இலங்கை முழுமையும் தமிழர் வாழ்ந்து வந்திருக்கின்றனர் என்ற எண்ணத்தைத் தரினும், தமிழகத்தின் மிக

அண்மையில் இருக்கும் வடமாநிலமும், பின்னர் அதன் அருகே இருக்கும் திருக்கோண மலை,மட்டக்களப்பு,சிலாபம்,புத்தளம், அனுராதபுரம், பொலனருவா பகுதிகளும் அவர்களுக்கு மிக நெருக்கத்தைத் தந்துள்ளன என்பதையும் நாம் பொதுவாகப் பார்க்கும் போது உணர்ந்து கொள்ள முடிகின்றது. நடுப்பகுதி, தெற்குப் பகுதி நெருங்கிய காட்டுப் பகுதி காரணமாகவும் இவண் தமிழர்கள் இவ்விடத்திற்கு அதிக முக்கியத்துவம் கொடுக்காது முதலில் இருந்திருக்கலாம்' பிறமொழியினர் தெற்குப் பகுதியில் செல்வாக்குப் பெற்றதுவும் காரணமாக இருக்கலாம்.

அடுத்து இப்பொதுக்கூறுகளைக் கொண்டு, தமிழக ஊர்ப் பெயர்கள் நூல் ஆசிரியர் முதலில் இயற்கை அமைப்பு பின்னர் குடியிருப்பு, பின்னர் செயற்கை அமைப்பு என இக்கூறுகள் காலந்தோறும் வளர்ந்து வந்துள்ளதைக் காண்கின்றோம் என்று காட்டும் கருத்து இவண் ஒப்பிடற்குரியது. இவ்வாறு காணும்போது இயற்கை, தாவரப்பெயர்கள் போன்றனவும் பின்னர் ஊர் போன்ற குடியிருப்புகளும் பின்னர் அம்பலம் போன்ற செயற்கை அமைப்புகளும் இவண் அமைந் திருக்க வாய்ப்புண்டாகி, இவற்றின் மூலம் எத்தெந்த ஊர்கள் பழமையுடையவை; எவை பின்னர் ஏற்பட்டவை என்ற எண்ணத்தைப் பெறல் இயலலாம். இலங்கையிலும் இத்தகைய வரலாறு தேவைப்படுகிறது.

3. தமிழகத்தில் காணப்படும் பொதுக்கூறுகளில் சில இலங்கையின் பிற பகுதிகளில் காணப்படுகின்றன. ஆயின் மட்டக்களப்பு, யாழ்ப்பாணம் பகுதியில் இவை காணப்பட வில்லை. தொகுப்பு முழுமையுறாத நிலையில் இக்கருத்து அமைகிறது. சான்றாக அம்பலம், காணி, பரப்பு, பாடு, வயல் போன்றவற்றைச் சுட்டலாம்.

4- சில பொதுக்கூறுகள், சான்றாக குட்டி, (ஆனைக்குட்டி —புத்தளம்) முண்டல் (முண்டெல்—சிலாபம், பசக்காடு முண்டல் புத்தளம்) வேம்பு—மதுர மடு வேம்பு (புத்தளம்) போன்றன இப்பகுதிகளில் மட்டுமே காணக் கிடைக்கின்றன· இதற்குக் காரணம் உண்டா எனப்பார்க்கலாம்.

5. தமிழகத்தில் செயற்கை நீர் நிலைகள் இராமநாதபுரம் மாவட்டத்தில் மிகுதி. நீரினைத் தேக்க வேண்டிய சூழல் இம்மாட்டத்திற்கு அமைகிறது. மழை குறைவே இதற்குரிய காரணம். இதனைப் போன்று, குளம், கேணி, வில் போன்ற ஊர்ப்பெயர்களை யாழ்ப்பாணம், மட்டக்களப்பு மாவட்டத்தில் காண்கின்றோம். எனவே இங்கும் குளம் மிகுதியாக அமைந்து நீரினைத்தேக்கி, பயன்படுத்திய தன்மை புலனாகிறது. நீர் நிலையின் தொடர்பு, இவர்களது விவசாயத் தொடர்பையும் காட்டுகிறது.

6. மக்களின் மொழி நிலையில் அமையும் வேறுபாடும் இவண் சுட்டத் தக்கதாக அமைகிறது.

தமிழர் தமிழகத்தில், 'துறை' என்ற பெயரைப் பயன் படுத்தும் போது 'துரை' எனவும் பயன்படுத்தும் தன்மையைக் காண்கின்றோம். கிணறு—கிணர், ஆறு—ஆர் எனவும் அமைகிறது.

சிந்துபூந்துரையாகவும் மல்லாங், கிணர்அடையார் எனவும் சுட்டப்படுகிறது. ஆயின் இந்த மொழி மரூஉதலை, ஈழத்தில் காணயியல வில்லை. அவர்கள் துறை கிணறு ஆறு எனவே சுட்டுகின்றனர்.

சிங்களத்தில் தமிழ்ச் சொற்கள் சுட்டப்படும் போது குளம்-குளம எனவும், பள்ளம்—பள்ளம எனவும் மூலை—முல்லா எனவும் சுட்டப்படுகிறது. அம்பாறை அம்பாற என வழங்குகிறது. எனவே இவ்வாறுள்ள மரபைக் கொண்டு நாம் தமிழ்ச் சொற்களைப் புரிந்து கொண்டு அப்பகுதி பற்றி ஆராயின் மேலும் எண்ணங்கள் புலனாகலாம். 'குளம்' என்று சுட்டப் படும் பிற சொற்கள் இதனைப் போன்று விகுதி மாறி வரும் சில ஊர்ப்பெயர்கள் இவற்றின் வரலாற்றை ஆராய்ந்து அங்குத் தமிழ் மக்கள் வசித்தனரா? எனப் பார்க்கலாம்.

பனை என்பது சின்னப் பனை என புத்தளத்தில் வழங்க, பித்திப்பனே என தெகம்போவில் வழங்குகிறது. இதனைப் போன்று,

பாத்தி—மாணிக்க பட்டியா
சின்னவிலு பட்டியா (பொலனருவா)

புலை—கரக்கா பொல (குறுநாகல)

காளிபொல ,,
மரப்பொல—கொழும்பு
நெகண்ட பொல ,,
கொடுவாள் பொல (ரத்னபுரம்)
வெட்டி பொல (கண்டி)
ரகுபொல (பதூல்ல)

எனப் பல பெயர்கள் காணக் கூடுகின்றன.

எனவே வடக்குப்பகுதி, கிழக்குப்பகுதியில் பெரும்பான்மை தமிழர் காரணமாக மிகுதியான வழக்குச் சொற்கள் மாறாமல் அமைய, தென்பகுதிகளில் பிறமொழியாளர் காரணமாக வேறுபடச் சுட்டப்பட்டிருக்கக் காண்கின்றோம்.

இதனைப் போன்று மலை, குளம் இல்லாத பகுதிகள் இப் பொதுக் கூறுகளால் சுட்டப்படும் நிலையும் ஆராயத் தக்கது. சான்றாகச் சேந்தான் குளம் பற்றிச் சுட்டும் போது இது தமிழர் குடியிருப்பு, எனவே குளமல்லாத நிலையிலும், தமிழகத்தில்இருந்து வந்து இங்குக் குடியேறிய தமிழர் தம்நாடு நினைவாக இப்பெயரை வைத்தனர் என்ற எண்ணத்தைக் கலாநிதிஇ. பாலசுந்தரம் தருகின்றார். இதனை ஆராயும் போது இத்தகைய பெயர்களை எல்லாம் தொகுத்து இக்கருத்தை அடிப்படையாக கொண்டு ஆராயின் மேலும் தெளிவு கிடைக்குமா எனப்பார்க்கலாம். சான்றாக மலையில்லாத பகுதி கீரிமலை. இது தமிழகத்தில் இருந்து வந்து குடியேறிய மக்கள் வைத்த பெயராக இருக்குமோ என ஆராயலாம். இப்பொதுக் கூறுகளை நோக்க இன்னொரு எண்ணமும் எழுகிறது தமிழகத்தில் காலனி, பஜார் போன்ற பிறமொழிக் கூறுகள் பொதுக் கூறுகளாக இணைந்த ஊர்ப் பெயர்களைக் காண்கின்றோம். ஆயின் இலங்கையில் இல்லை. இதற்குரிய காரணம் என்ன? ஆங்கிலேயரின் தொடர்பு இரண்டு நாட்டிலும் உண்டு என்ற எண்ணம் இதற்கு அடிப்படையாக அமைகிறது.

எனவே இலங்கையில் அமையும் பொதுக் கூறுகள் முழுவதையும் தொகுத்து மேலும் ஆழமாக ஆராயின், தமிழகத்தில் வகுக்கப்பட்ட இத் தொகுப்புக்களில் இவற்றை அடக்குதல் தவிர, பிற வகைப்பாடும் அமையுமா என்ற உண்மையும் தெளிவாகும்.

# இயல் 5

## சிறப்புக் கூறு

பொதுக் கூறுகள் மக்கள் வாழுமிடம், நில அமைப்பு இயற்கைச் சூழல் போன்றவற்றை மிகுதியாக உணரத் துணை செய்கின்றன. ஆயின் செயற்கைச் கூறுகள் என நோக்க மக்களின் வாழ்வியல் செய்திகளை முழுமையாகப் புரிந்து கொள்ள சிறப்பாக உதவுகின்றன என்பது ஊர்ப்பெயர் ஆய்வு காட்டும் எண்ணமாக அமைகின்றது. எனவே ஊர்ப் பெயரில் மட்டும் முன்னர் அமையாது மக்களின் வாழ்வியல் தொடர்பான மிகுதியான செய்திகளைப் புரிந்து கொள்ளச் செய்தலிலும் இவை முதன்மை நிலை கொள்கின்றது எனல் பொருத்தமானதாகும்.

ஊர்ப்பெயர் ஆய்வாளர்கள் சிறப்புக் கூறுகளைப் பல விதமாகப் பிரித்து நோக்குகின்றனர். இவை எல்லாவற்றையும் அமைப்பு விளக்கப் பெயர்கள் இயற்பெயர்த் தொடர்ப் பெயர்கள் என்ற இருபெரும் பிரிவில் அடக்கலாம் என்கின்றார் கி. நாச்சிமுத்து[1] மா. நயினார் 1. விளக்கப் பெயர் அடைகள் 2. ஆட்பெயர்கள் 3. பிறவகைகள் என மூன்றாகப் பகுக்கின்றார்[2]. இவற்றையெல்லாம்நோக்கி, தமிழகஊர்ப்பெயர்கள் நூலாசிரியர், ஒன்பது வகையாக இவற்றைப் பகுக்கலாம் என்கின்றார்.[3]

1. தமிழ் இடப்பெயராய்வு—ப—114
2. பேரும் பெருமையும்—ப—15
3. தமிழக ஊர்ப்பெயர்கள்—பக்—108—109

1. விளக்கப் பெயர்கள்
2. ஆட்பெயர்கள்
3. நிகழ்ச்சிப் பெயர்கள்
4. உருவாக்கப் பெயர்கள்
5. மங்கல வழக்குப் பெயர்கள்
6. பிறமொழிப் பெயர்கள்
7. தழுவுப் பெயர்கள்
8. வழக்குத் திரிபுப் பெயர்கள்
9. பிற

மேற்பகுத்த இந்த ஒன்பது வகைகளையும் தமிழக ஊர்ப்பெயர் களில் நாம் காண்கின்றோம். இலங்கையில் கிடைத்துள்ள ஊர்ப்பெயர்களும் இந்த ஒன்பது வகைப்பட்ட பிரிவுகளை உள்ளடக்கியே காட்சி தருவது போல் தெரிகின்றன. இந் நிலையில் ஊர்ப்பெயர்களை இடும் விதத்தில் இரண்டு நாடு கட்கும் இடையேயுள்ள ஒற்றுமைகளை நாம் இனங்கண்டு கொள்ளல் இயலுகிறது. மேலும் எவ்வாறு தமிழகத்தில் உள்ள பெயர்களின் வரலாற்றைப் புரிந்து கொள்ளல் முழுமையாக இயலவில்லையோ, துல்லியமான முடிவினை நாம் கொள்ளல் இயலவில்லையோ அதாவது இப்பெயர்கள் இந்த பகுப்பினைச் சார்ந்தன என்பது இனங் கண்டு கொள்ளக் கூடியதாக இல்லையோ அந்நிலை இலங்கைப் பெயர்களிலும் நாம் சுட்டக்கூடியதாக உள்ளது. எனவே இங்கும் ஊர்ப்பெயர்கள் ஒவ்வொன்றின் தனிப்பட்ட வரலாற்றினைப் புரிந்து கொண்ட பின்னரே ஊர்ப்பெயராய்வு சிறப்பும், துல்லியமும் பெறும் என்ற எண்ணம் வலுப்பெறுகிறது. எனினும் இந்த ஆய்வில், பொருள் புரிந்த அளவிற்கு இப்பெயர்கள் பிரிக்கப்பட்டு நோக்கப் படுகின்றன.

## 1. விளக்கப் பெயர்கள்

"ஊரினைச் சிறப்பாக விளக்குவதற்கு, பொதுக் கூறின் முன்னர் சேர்க்கப் பட்ட அடை இது என்ற எண்ணத்தின் அடிப்படையில் நோக்க, ஓர் ஊரினை விளக்கும் பெயர் என்ற பொருள் அமைகிறது. இதனைக் கலைக் களஞ்சியம் (பகுதி—15 ப—1160) Descriptive Names எனச் சுட்டுகிறது. இந் நிலையில் அந்த ஊரினை வருணிப்பதாக அமையும் கூறு எனல்

பொருத்தமானதாகலாம் ஊரின் பல தன்மைகளையும் இயல்பு களையும் வருணிக்கலாம்'' என்பது விளக்கப் பெயர் பற்றிய எண்ணமாக அமைகிறது.[4]

இப்பகுதி இயற்கை அமைப்பு, செயற்கை அமைப்பு என இரண்டு பகுதிகளாக அமைகிறது. இயற்கை அமைப்பில் ஊர்ப்பெயர் ஆய்வாளர்களின் கருத்துப்படி, தாவரம், விலங்கு பறவைப் பெயர்கள் போன்றன, நீர் நிலை, மலை, நிலத் தொடர்பான உண்மைகள் என்ற 5 பெரும் பிரிவுகள் அமைகின்றன. செயற்கை அமைப்பில் செயற்கையாக மனிதன் உருவாக்கிய அமைப்புகள், தொழில்கள் அடிப்படையில் அமையும் பெயர்களை எண்ணலாம்.

**தாவரப் பெயர்கள்:**

தமிழகத்தில் தாவரப் பெயர்கள் கொண்ட ஊர்களைத் தொன்று தொட்டே காண்கின்றோம். வெப்பநாடு என்ற நிலையிலும், தாவரப்பயன் மிகுதியும், நீர் நிலைத் தொடர்பும் தாவரங்களின் அருகில் வாழ்ந்த தமிழர் மனநிலையைக் காட்டு கின்றன. இலங்கையின் ஊர்ப் பெயர்களும் இத்தகைய ஒன்றிய தமிழர் மனநிலையையே இயம்புகின்றன இம்மன நிலைக்குக் காரணமும் ஒன்றே. அதாவது பெரும்பாலும் ஒரே சூழலும், தட்பவெப்ப நிலையும் ஒரே மாதிரியான தாவரங் களின் வளர்ச்சியினைக் காட்டும் தன்மையில் அத்தகைய சூழல் காரணமாக அங்கு வாழும் மக்கள் மனநிலையும் ஒற்றுமைப் பட்டிருப்பதை நாம் எண்ணிப் பார்க்கலாம். தமிழக ஊர்ப் பெயர்கள் நூல் தமிழகத்தின் தெற்கிலும் வடக்கிலும் அமைந்துள்ள இரண்டு மாவட்டங்களை நோக்கி இப்பெயர் களை ஆராயும்போது சில கருத்துகளைத் தந்துள்ளது. ''செங்கல்பட்டு மாவட்ட ஊர்ப்பெயர்களில் மரப்பெயர்களாக அத்தி, ஆல், ஆர், இலந்தை, இலுப்பை, ஈச்சம், கடம்பு, சவுக்கு, கமுகு, காஞ்சி, கிளாம், நாவல், நெல்லி, நொச்சி, புங்கு, புன்னை, புளி, மருது, மா, முருங்கை, முருக்கு, மூங்கில், விளாம், வேல், வேம்பு போன்றன அமைகின்றன. ஆயின் அத்தி, ஆல், இலந்தை, இலுப்பை, ஈச்சம், காஞ்சிரம், புன்னை,

4. தமிழக ஊர்ப்பெயர்கள்—ப.110

புளி, மருது, மா, விளாம், வேம்பு இவற்றையே குமரி மாவட்ட ஊர்ப்பெயரில் காண்கின்றோம். பிற மரங்களை நேரில் காண்கிறோம். மேலும் செங்கல்பட்டில் இல்லாத ஊர்ப் பெயர்ச் சிறப்புக் கூறுகளாகக் குமரியில் உடை, வஞ்சி, தெங்கு, பலா போன்றன அமைகின்றன. ஆயின் இவையும் செங்கல்பட்டில் இல்லாதவை இல்லை "[5] என்ற எண்ணத்தை அங்குக் காண, தமிழகம் முழுவதும் மரங்களின் ஒற்றுமையை எணணிப் பார்த்தல் இயலுகிறது. தமிழரின் வாழ்வோடு இம்மரங்கள் பிணைந்திருந்த நிலையையே இவற்றின் அருகாமையில் வாழ்ந்த அவர்தம் வாழ்வியல் முறை விளக்கு கிறது. இத்தகைய வாழ்வியல் தொடர்பை இலங்கை வாழ் தமிழரிடமும் காண்கின்றோம். மரங்களோடு பிணைந்து காணப்பட்ட வாழ்க்கையையும் தமிழகத்தோடு ஒத்த நிலை காரணமாக மரங்களில் காணப்படும் ஒற்றுமையும், அவற்றி னருகே வாழ்ந்து இருந்த அவர் தம் வாழ்க்கையையும் நாம் உணர இயலுகிறது.*

அரசு, ஆல், இலந்தை, இலுப்பை, அத்தி, ஈச்சம், கறுவாய், காரை, குருந்தை, கொக்கு நெட்டி, கொறுக்காப் புளி, சந்தனம், தாழை, தில்லை, தென்னை, நாவல், நெல்லி, நொச்சி பலா, பனை, பாலை, புன்னை, மருது, மா, வாழை, வேம்பு போன்ற மரங்களை இலங்கை ஊர்ப்பெயர்கள் தருகின்றன. இவை அனைத்தையும் தமிழகத்தில் மட்டுமல்லாது தமிழக ஊர்ப்பெயர்களிலும் காணுதல் இயலுகிறது. தவிர சில புதிய பெயர்களை இலங்கையில் காண்கின்றோம். பிளான், கணம், கிரான், கூமா, கூழா, நுணா, மண்டு போன்ற வற்றினையும் மரம் எனக்காண்கின்றோம். தமிழ் லெக்ஸிகனில் பார்க்கும் போதும் இவை எவ்வாறு இவற்றின் பொதுக் கூறு களுடன் இணைகின்றன என்பதுவும் ஆய்வுக்குரிய ஒன்றாக அமைகிறது. சில அறிஞர்களின் விளக்கம் இவண் சுட்டத் தக்கது.

---

5. தமிழக ஊர்ப்பெயர்கள் — ப—115.

* கட்டுரையின் இறுதியில் இப்பெயர்கள் தொகுத்து தரப்பட் டுள்ளன.

அம்பிளாந்துறை என்ற பெயரில் அமையும் பிளான் என்பதற்கு விளக்கமாகச் சிலவற்றைக் கூறலாம். பெரிய விளான், சிறிய விளான் என்ற ஊர்ப்பெயர்களும் உண்டு. பிளான் என்பதற்குச் சரியாகப் பொருளைத் தேர்வு செய்ய முடியாத நிலையில் விளான் என்பதன் திரியாகப் பிளான் அமையுமோ என றுஎண்ணலாம். எனவே அம் விளான் துறை அம்பிளாந்துறையாகியிருக்கலாம். ஆயின் தனிப்பெயராக குப்பிழான்— பிளாவை என்பவற்றைக் காண, பிழான், பிளான் மேலும் ஆய்விற்குரியதாக அமைகிறது. 'அம்பிளாந் துறை, முன்பு அம்பிலாந்துறை என அழைக்கப்பட்டு வந்துள்ளது'[6] என்ற எண்ணம் 'பலாவுடன்' தொடர்பு காட்டு கிறது. பலா பெயர் பரவலாகத் தமிழகத்தில் இருப்பது தெரிகிறது. பலாக்காடு ஊர்ப்பெயராக மட்டக்களப்பிலும் உண்டு.

மேலும்,

**மண்டு**—மண்டூர் என்பது மண்டு மரங்கள் நிறைந்த குடியிருப்பாய் இருந்து இடப்பெயரைப் பெற்றிருக்க வேண்டும் என்பர். ம. சற்குணம்[7] பிறஊர்ப் பெயர்களாகத் தில்லை, மண்டூர், மண்டுகோட்டை முனை அமைகின்றன,

**கிரான்**— ஒரு விதப்புல்; கிரான் குளம். கிரான் பறங்கியர் பெயராகவும் இருக்கலாம்.[8]

**கூவில்**—கூந்தற்பனை நிறைந்த இடம் என்ற அடிப்படையில் இப்பெயர் வழங்கிற்றோ எனவும் ஆராயலாம்.[9]

போன்ற எண்ணங்களே இப்பெயர்கள் குறித்துத் தெரிய வருகின்றன.

---

6. இடப்பெயர் வாலாறு— மட்டக் களப்பு மாவட்டம்— ப. 117
7. இடப்பெயர் வரலாறு—மட்டக் களப்பு மாவட்டம் ப.111
8. மட்டக்களப்பு மக்கள் வளமும் வாழ்க்கையும்—ப.
9. இலங்கை இடப்பெயராய்வு— ப.15.

மரப்பெயர்களாக இத்தன்மையில் ஊர்ப்பெயர்களின் நிலை அமைய சில செடிப்பெயர்கள், தாவரஉறுப்புப் பெயர்கள், கொடிப் பெயர்களும் அமைகின்றன. தமிழகத்தில் இத்தகைய ஊர்ப்பெயர்களை மிகுதியாகக் காண்கின்றோம், திருநெல்வேலி, முளை மூடு, தாழையூத்து, மஞ்சள் கொல்லை. பூந்தமல்லி, திரு முல்லை வாயில், செங்கல்பட்டு, (செங்கழு நீர்ப்பட்டு) போன்ற பல உள.

இலங்கையில், அகத்திக் குளம், கடுக்கா முனை, கள்ளியங்காடு, கள்ளியந் தீவு, காயாங்கேணி, தும்பங்கடவை, தும்பங் கேணி,பருத்திச்சேனை, பருத்தித்துறை, பாவக் கொடி சேனை, பொன்னாங்கணிசேனை, மஞ்சள் தொடுவாய், மல்லிகைத் தீவு, முல்லைக் கட்டை, முல்லைத் தீவு போன்ற செடிசார்ந்த ஊர்ப்பெயர்களைக் காண்கின்றோம். தமிழகம் போன்று, இச்செடிகள் மட்டுமே உள்ளதால் இப்பெயர்கள் வந்தன என்பதுஇயலாது.ஆயின் இச்செடிகளின் முக்கியத்துவம் இப்பெயர்களை இவ்வூருக்கு வழங்கியிருக்கலாம். தவிர, கொட்டைக் களம், கொடிகாமம், கொத்துக்குளம் தாமரைக் குளம், தாமரைக் கேணி, திருநெல்வேலி, பச்சிலைப் பள்ளி புல் மோட்டை, புல்லு மலை, புற்குளம், பூநகரி, பூக்குளம், பொன்னாங்காணி சேனை, முள்ளாமுனை, முள்ளானை, முள்ளி வெட்டுவான் போன்ற ஊர்ப்பெயர்ச் சிறப்புக் கூறுகள் பொருள் விளக்கம் தருகின்றன. தாவரத்தின் பல இனங்களும், கூறுகளும் எவ்வாறு முக்கியத்துவம் பெற்று, அந்த இடத்தைச் சுட்டப்பயன்படுகின்றன என்பதும் தெரிய வருகின்றன.

'கொட்டைக்களம்' விதைகள்,தானியங்கள் தொடர்புடைய களம் என்ற பொருளில் அமைய வாய்ப்புண்டு. பிறதாமரை, பச்சிலை, புல், பொன்னாங்காணி என்பன வெளிப்படையான பொருள் தருகின்றன.

மட்டக்களப்பில் கொத்துகுளத்து மாரியம்மன் கோயில் சிறப்புடைய கோயில்.

மட்டு நகரின் இடதிசைக்கண் அமைந்துள்ள ஊர் இது.

'கொந்தலர்க் காநிறை கொத்துக் குளத்துயர் கோயிலின் கண்
வந்தமர் தேவி மகமாரி தெய்வ மலர்க் கொடியே'[10]

10. மட்டக்களப்பு—மக்கள் வளமும் வாழ்க்கையும் –ப—124.

என்ற பாடல் கொண்டு இவ்வூர்ப்பெயரின் காரணத்தை ஊகிக்க இடம் அமைகிறது. இதற்குப் பிறகாரணங்கள் எதுவும் சுட்டப்படாமையும், இது இயற்கைச் சார்புடைய பெயரே என்ற எண்ணத்திற்கு வழி வகுக்கிறது.

'கொந்தலர்க்கா நிறை கொத்துக்குளம்' என இப் பாடலாசிரியர் சுட்டும் தன்மையும், இந்த ஊர் நாற்புறமும் கழனியாற் சூழப்பட்டு, எழில்மிகு மட்டு மாநகரில் அமைந்துள்ளது என்ற விளக்கமும், தாவரங்கள் எழில் கொஞ்சும் தலம் இது என்ற எண்ணத்தைத் தருகிறது. எனவே 'சோலைகளில் உள்ள மலர்க் கொத்துகள் நிறைந்து காணப் படும் குளம்' 'என்ற பொருளில் இடப்பெயர் பின்னர் ஊர்ப் பெயராகியிருக்க வழியுண்டு. கொத்துக்குளம் எனப்பொருள் கொண்டு 'மிகுதியான குளங்கள்' கொண்ட இடம் எனப் பொருள் கொள்வர். மேற்குறித்த பூங்கொத்து என்ற எண்ணம் சிறப்பாக அமைகிறது. இதனோடு ஒத்ததாகப் பூக்குளம் என்ற ஊர்ப்பெயரும் அமைகிறது.

இப்பெயர்களுள் ஆய்வுக்குரியதாக அமைகின்றவையும் உண்டு, சம்பில்துறை, தும்பாலஞ்சோலை, பழுகாமம் வெள்ளயம் பத்தை, மாவிலங்கத்துறை போன்றனவற்றை இவண் நோக்கலாம்.

**சம்பில்துறை** —வலிகாமத்தில் அமையும் ஊராக இது சுட்டப் படுகிறது. இதனைப்பற்றி கலாநிதி. இ.பாலசுந்தரம், 'இதன் பழைய பெயர்கள் சம்பு கோவளம், ஐம்பு கோளம், சம்புக்கல், ஐம்பு கோளப்பட்டினம், ஐம்புத்துறை என்றெல்லாம் வழங்கலாயின. கி.மு. மூன்றாம் நூற்றாண்டில் அசோகன் புத்த சமயத்தைப் பரப்பும் நோக்குடன் தன் மகளாகிய புத்தபிக்குணி சங்கமித்தையை, வெள்ளரசின் கிளை ஒன்றுடனும், பரிவாரங்களுடனும் இலங்கைக்கு அனுப்பினான். அவர்கள் இந்தச் சம்புத் துறையில் வந்து இறங்கித் தரை மார்க்கமாக அனுராதபுரம் சென்றார்கள் என மகாவம்சம் (19: 35: 22: 23: 40: 35) கூறுகிறது. அவர்களை வரவேற்று தேவநம்பிய தீஸன் வெள்ளரசின் கிளை ஒன்றைச் சம்பு கோளத்தில் நாட்டினான் என்றும், அதனருகே திசை மாறாவை என்ற இடத்தில் திசமகாவிகாரை என்ற புத்த

பள்ளியைக்கட்டுவித்தான் என்றும் மகாவம்சம் செப்புகின்றது. இவற்றின் அழிபாடுகள் சம்பில்துறை, திருவடிநிலைப் பகுதிகளில் இன்றும் காணப்படுகின்றன.

சம்புத்துறை சிங்கள இலக்கியங்களில் 'ஜம்புகோள' எனக் கூறப்படுகின்றது. இது சம்பு கோவளம் என்ற பழைய பெயரின் மரூஉ எனவும் கொள்ளலாம். இது மாதகல் துறைக்கு அண்மையில் உள்ளது. இந்த சம்புத் துறையிலிருந்தே தேவநம்பிய தீஸனால் அசோக மன்னனிடம் அனுப்பப்பட்ட தூதுவர்கள் மரக்கலம் ஏறிச் சென்றனர் என வரலாறு கூறுகிறது.

பண்டைக் காலத்தில் சம்பு கோளம், மாந்தை என்ற இரு துறைமுகங்களும் மிக்க கீர்த்தி வாய்ந்திருந்தன. வங்காளத்தில் உள்ள தாம்ரவிப்தி எனும் துறைமுகத்திற்கும் சம்பு கோளத்திற்கும் கடல் வாணிகத் தொடர்பு இருந்து வந்தது. பௌத்தம் இங்கு வருமுன்பே வடக்கில் உள்ள ஜம்பு கோளப்பட்டினம், வடமேற்கில் உள்ள மாதோட்டம், கிழக்கேயுள்ள கோணேஸ்வரப்பகுதி ஆகியவை நாகரிக வளர்ச்சியில் முன்னின்ற துறைமுகங்கள் என்பதை விஜயன், பண்டுகாபயன் கதைகள் எடுத்தியம்புகின்றன (க. சிற்றம்பலம்; 1964: 111)

தேவநம்பியதீஸன் காலத்திற்குப் பின்பு (கி. மு. 3 ஆம் நூற்றாண்டு) சம்பு கோளத்துறைமுகம்பெரிதும் பயன்படுத்தப் படவில்லை. அதனால் இதன் செல்வாக்குக் குறைவது ஆயிற்று' என எழுதிச் செல்கின்றார்.

இவரது கருத்துகளில் சில கருததுகள் இவண் சுட்டத் தக்கன. 1. அனைத்துப் பெயர்களும் பொதுக் கூறுகளில் வேறுபாடு கொண்டாலும் சிறப்புக் கூறாகச் 'சம்பு'வைக் கொண்டுள்ளன. சம்பு என்பதற்குப் பொருள் நாவல். 2. பொதுக்கூறுகளில் துறை, கோவளம் என்பன, கடல் சார்ந்த இதன் இருப்பிடத்தை இனஞ் சுட்டவல்லன. 3. கி.மு. 3 ஆம் நூற்றாண்டிற்கு முன்னரேயே இப்பெயர் கொண்டதாக இவ்விடம் திகழ்ந்துள்ளது. 4. சிங்கள இலக்கியங்களில் 'ஜம்புகோள' குறிப்பிடப்பட்டாலும், தமிழ்ப்

பெயரே முதன்மையானது. திரிந்த பின்னரே சிங்களத்தில் இவ்வாறு சுட்டப்படுகின்றது.

இக்கருத்துகள் இலங்கையின் இப்பகுதி 'நாவல் மரம்' காரணமாக இப்பெயர் பெற்றது என்பதை உறுதிப்படுத்துகின்றன. இந்த சூழலில் 'நாவலந்தீவு' என்ற தமிழகம் அல்லது இந்தியாவின் பெயர் சிந்தனையில் எழுகிறது. 'நாவலந்தீவு' என்பதற்கும் சம்புத்துறைக்கும் பெயர் தவிர வேறு தொடர்புண்டா? எனப்பார்க்கலாம்.

"பொன்றிதழ் நெடுவரை உச்சித் தோன்றித்
தென்றிசைப் பெயர்ந்த வித் தீவத் தெய்வதம்
சானகச்சம்பு தன்கீழ் நின்று
மாநில மடந்தைக்கு வருந்துயர் கேட்டு
வெந்திறல் அரக்கர்க்கு வெம்பகை நோற்ற
சம்பு வென்பாள் சம்பாதியினள்"
... ... ... ... ...
கரகங்கவிழ்த்த காவிரிப்பாவை
... ... ...
தொழுதனள் நிற்ப தொன்மூதாட்டி
... ... ...
செம்மலர் முதியோன் செய்த வந்நாள்
என் பெயர்ப்படுத்த இவ்விரும் பெயர் மூதூர்
நின் பெயர்ப்படுத்தேன் நீ வாழிய வென'

(பதி: 3–31)

என மணிமேகலைப் பதிகம் தொடர்ந்து அமைகிறது. இங்கு இரு எண்ணங்கள் புலப்படுகின்றன. இக்கதையின் உண்மை,பொய்ம்மை பற்றிய எண்ணம் இவண்தேவையில்லை. ஆயின் சம்பாபதி என்ற பெயர் இவ்விடத்திற்கு இருந்தது என்பது ஒன்று; இரண்டு காவிரிப் பூம்பட்டினத்திற்கு இப்பெயர் சிறப்பாக அமைந்தது என்பது. எனவே நாவலந்தீவு அல்லது சம்புத்தீவு அல்லது சம்பு சார்ந்த ஒரு பெயரை இப்பகுதி கொண்டு திகழ்ந்தது என்பதுமட்டும் உண்மை. இந்நிலையில், தமிழகத்தின் ஒரு பகுதியாகத் திகழ்ந்த காவிரிப் பூம்பட்டினம் எவ்வாறு இப்பெயரைத் தனக்கென்றுசிறப்பாகப்

பெற்றிருந்ததோ அதனைப்போன்று, முன்பு இணைந்திருந்த நிலையில், சம்புத்துறை என்ற பெயரை இலங்கையின் இப்பகுதியும் பெற்றிருக்கலாமோ என எண்ணத் தோன்று கிறது.

தமிழகத்தில் நாவல் மரங்கள் பரவிக் காணப்படுகின்ற மையும், அப்பெயருடன் பல ஊர்ப் பெயர்கள் அமைகின்ற மையும் பல இன்று வரை காணப்படுகின்ற நிலையும் இவண் (நாவலூர்—தெ.ஆர்க்) சுட்டத் தக்கன. இலங்கையிலும் நாவலடி, நாவலப் பிட்டி, நாவலங் கட்டை, நாவற்காடு, நாவற்குடா, நாவற்குழி, நாவற் கேணிபோன்றபலபெயர்களின் வரலாறு இரண்டு பகுதியிலும் காணப்பட்ட நாவற் மரத்தை யும் அதனை ஒருமித்த நிலையில் ஊரின் பெயராகச் சூட்டிய இப்பகுதி மக்களின் ஒன்றிய மனநிலையையும் காட்டு கின்றன. இன்று மட்டக்களப்பில் திருக்கோவில் என்று வழங்கு மிடம் முன்பு 'வெள்ளை நாவற் பதி' எனப் பெயர் கொண்டு விளங்கியது என்பது இவண் இணைத்து எண்ணற் குரியது.

**பழுகாமம்**

மட்டக்களப்பில் காணப்படும் பழுகாமம் என்ற சொல்லில் அமையும் 'பழு' என்பதற்கு 'ஆலமரம்' என்பது பொருள். 'பழூர்' என்பது ஆலமரத்தூர் என்ற பொருளில் அமையும் என்பது தமிழகத்தில் உள்ள ஓர் ஆய்வாளரின் கருத்து[17] எனவே 'ஆல்' என்பது 'பழு' என்ற சொல் லினால் அன்று மக்கள் குறித்த நிலையில் தமிழர் அன்று வைத்த இவ்வூர்ப் பெயர் இவ்வூரின் தொன்மையையும், வழக்கு ஒப்புமையையும் இனங்காட்டுகின்றது.

**மா விலங்கத் துறை**

மட்டக்களப்புப் பகுதி ஊர் இது. இதற்குரிய பொருள் என்ன எனப்பார்க்க, இலங்கை என்ற பெயருடன் தொடர்பு டையதாக இருக்கலாமா என நோக்கலாம். இத்துடன் தமிழகத்தில் மாவிலங்கை என்று, கீழ்மாவிலங்கை, மேல் மாவிலங்கை என்ற இருஊர்களைச் சங்கக்காலம் தொட்டே காண்கின்றோம். சிறுபாணாற்றுப் படையில் சுட்டப் படும் இவ்வூர், சென்னைக்கருகில் திண்டிவனம் பகுதியில் காணப்

11. Studies in Indian Place Names—Vol—1—P—73

படும் இரு ஊர்களாக அமைகின்றன. இவை இரண்டிற்கும் தொடர்பு உண்டா என்பது எண்ணத் தக்கதாக அமைகிறது. இப்பெயரையும் தமிழகப் பெயர்களையும் நோக்க இலங்கை என்ற பெயர் அன்று பரவலாக வழக்கில் இருந்தது என்று கருதலாமா என்னும் நோக்கிலும் ஆராயலாம்.

தாவரப் பெயர்களை இவ்வொப்பியல் நோக்கில் காண, மரப்பெயர்கள் தமிழகத்திலும் இலங்கையிலும் மிகுதியாகக் காணப்படுகின்றன. பிற தாவரச் சார்புப் பெயர்கள் மிகுதியாக இல்லை. தமிழகம் போன்ற அளவிற்குக் கூட இலங்கையில் காணக் கூடவில்லை. ஆயின் இலங்கை முழுவதிலும் மேலும் ஊர்ப்பெயர்களைத் தொகுத்தால் தமிழகம் அளவிற்குக் கிடைக்க வாய்ப்புண்டு. எனினும் பொது நிலையில் மரப் பெயர்களே மிகுதியாகக் கிடைப்பதைச் சுட்டலாம். மேலும் ஒன்றிரண்டு பெயர்களைத் தவிர அனைத்தும் இரு நாட்டிலும் ஒன்றியே காணப்படுகின்றன. ஊர்ப்பெயர்களாக அமைந்து அவ்வூர்களை இனங்காட்ட மிக உதவியாக அமைவன மரங்கள் என்ற நிலையில், இவை அனைத்து இடங்களிலும் பொருத்தமாக அமைந்திருக்கலாம் என்பதை இவண் கருதுதல் இயலுகிறது. பிற அந்த அந்த ஊர்களில் முக்கியத்துவம் பெற்ற நிலையில் கிளைத்த பெயர்களாக அமைய வாய்ப்புண்டு. பிற தாவரச் சார்பு பெயர்கள் சான்றாக புல், கிரான், கொட்டை, போன்றன முக்கியத்துவம்காரணமாகவோ அல்லது தனிப்பட்ட நிலை காரணமாகவோ பெயரில் இடம் பெற்றிருக்கலாம். சம்பில் துறை, பழுகாமம், மாவிலங்கத்துறை போனறன தமிழர், இலங்கை வாழ் மக்கள் தொடர்பை வரலாற்று வழியுறுதிப்படுத்துகின்றன. குடியேற்ற தொடர்பையும் நிலத் தொடர்பையும் இவை காட்டி, தொன்று தொட்டு இன்று வரையிலும் தொடர்ந்து வரும் உறவையும் சிறப்பாக இயம்புகின்றன.

மேலும் இலங்கையில் மட்டும் சுட்டப் பெறும் தாவரப் பெயர்கள் தமிழ்ப் பெயர்களா என்பதும் ஆராய்விற்குரியது. அல்லது சிங்களர் தொடர்பு காரணமாக, சிங்களச் சொற்களாக இவை இருக்கலாமா என்ற நோக்கிலும் ஆராயலாம். இத்தன்மை, பின்னர் வரும் ஊர்ப்பெயர் கூறுகள் ஆய்விலும் ஏற்கத்தக்கது.

**விலங்குப் பெயர்— பறவைப் பெயர்கள்—பிற உயிர்கள்**

தாவரப் பெயர்கள் அளவிற்கு இப்பெயர்கள் இல்லாவிடினும் ஓரளவிற்குப் பெயர்கள் உள. வரலாற்று நிலையில் பார்க்கத் தமிழக வரலாற்றிலும் இந்நிலையே அமைகிறது. ஊர்ப்பெயர்களின் தொடக்க காலவரலாறும் "ஊரினைக் குறிப்பிட்டுக் காட்ட இயங்கா பொருளே இயங்கு பொருளை விட மேன்மையானது. சிறப்பானது என்ற எண்ணம் காரணமாக இயங்குகின்ற விலங்கிற்கு அதிக முக்கியத்துவம் கிடைக்கவில்லை'[12] என்ற எண்ணத்திற்கு வழிவகை செய்கிறது. எனினும், பின்னர் இப்பெயர்கள் சார்பாகப் பல பெயர்கள் தோன்றியுள்ளன. தமிழகத்தில்பரவலாகச் சில பெயர்கள் அமைகின்றன. சான்றாகச் சிலவற்றை இவண் சுட்டலாம்.[13]

எறும்புக் காடு
பாம்பன் விளை } குமரி
நரிக்குளம் காலனி

கழுதமலை, கரடிக்குளம், தேரைக்குளம்
நாலாட்டின்புத்தூர் — திருநெல்வேலி.

கிளியூர் உடும்புக் குளம், சிறுமான் குளம்
ஆனையூர்—இராமநாதபுரம்

பன்னிமடை
புலிக்குட்டி } மதுரை
கீரிபட்டி

கானக்கிளிய நல்லூர், சிங்கத்தா குறிச்சி,
தும்பிவாடி—திருச்சி.

பெரும்புலியூர், குருவிக்கூத்தன் ஏந்தல், குட்டிப்
புலிச்சி ஏந்தல்—தஞ்சாவூர்

காடையூர், புரவிபாளையம்,ஆனைமலை—கோயம்புத்தூர்
நந்திபுரம்—நீலகிரி,

காடம்புலியூர் போத்துவாய், நல்லாவூர், கோழியூர்
—தெ.ஆர்க்காடு

கோழி மூக்கனூரு, கீரிப்பட்டி, எருமைப்பட்டி—சேலம்

கோழிப்புலியூர், கருடபுரம், ஆட்டுப்பாக்கம்— வட ஆர்க்காடு

---

12. தமிழக ஊர்ப் பெயர்கள்— ப—116
13. " பக். 117—119.

சின்னபுலியூர், கரடிபுத்தூர், போத்தூர்—செங்கல்பட்டு

இப்பெயர்களைக் கொண்டு, தமிழக ஊர்ப்பெயர்கள் நூல், இப்பெயர்களைப் பற்றிய சில எண்ணங்களைத் தருகின்றது.

சங்க கால வரலாற்று நிலையில், தொடர்ந்து இடைக் காலத்திலும் மக்கள் வளர்க்கும் விலங்குகள், அல்லது மக்கள் வாழிடங்கட்கு அருகில் வாழும் உயிரினங்களையே இப்பெயர் கள் சுட்டுகின்றன. தொடர்ந்தும் இதே நிலையே அமைகிறது எனவே புலி, சிங்கம், கரடி போன்ற பெயர்கள் இடம்பெறினும் இவை இன்னமும் ஆழமான ஆய்வுக்குரியன. தமிழர் காடுகளை வெட்டி தங்கள் குடியிருப்புகளை அமைத்துக் கொண்டனர் என்ற நிலையில், காடுகளை வெட்டும்போது அப்பகுதியில் வாழ்ந்த விலங்குகள் என்ற நிலையில் இப்பெயர்கள் பெற்றிருக் கலாம். எனினும் இவையும் ஊர்ப்பெயர்களின் தனித்த ஆய்விற்குப் பின்னரேயே முழுமையான உண்மையென ஏற்றுக் கொள்ளல் இயலும். ஏனெனில் தமிழக மன்னர்கள் கொண்ட சின்னங்களாகப் புலி, சிங்கம், நந்தி போன்றவற்றைக் காண்கின்றோம். மன்னர்களுக்கும் ஊர்ப்பெயர்களுக்கும் மிகுதியான தொடர்பு இருந்ததை வரலாறு காட்டுகிறது. எனவே அப்பெயர்கள் இச்சார்புடன் அமைந்திருக்கவும் வாய்ப்பு உண்டு. காளையார் கோயில் போன்று இறைச்சார்பு பெறவும் வாய்ப்புண்டு. எனவே இப்பெயர்களும் மேலும் ஆய்வுக்குரியன. இருப்பினும், சில பெயர்கள் இவ்வுயிர்களின் முக்கியத்துவம் காரணமாகவே அமைந்திருத்தல் இயலும். சான்றாக ஆனை மல்லூர், குருவி அகரம், கறையான் குழி, பாம்பன் விளை, பசுவளி, மந்தைவெளி போன்ற பலவற்றை இவண் குறிப்பிடலாம். இந்நிலையில் ஈழத்து ஊர்ப்பெயர் களிலும் இத்தன்மையை எண்ணுதல் இயலுகிறது.

ஆனை, கரடி, புலி தவிர பிற அனைத்தும் நாடு வாழ் உயிர்களாகவே காணப்படுகின்றன. மேலும் இறைவனுடன், அரசனுடன் தொடர்பு உயிர்களாக இவண் மிகுதியாகத் தெரியவில்லை. எனினும், அனைத்து இவ்வகை ஊர்ப் பெயர்களும் ஆயப்படும் போது மேலும் விளக்கம் கிடைக் கலாம்.

தமிழகம் போன்று எல்லா வகையான உயிர்களையும் காணமுடியவில்லை. எனினும் சில அமைகின்றன. இவற்றுள் புதுமையான, சிறப்புடையதாகச்சில அமைகின்றன. சான்றாக, வந்தாறு மூலை, புலி வளைந்தான், மீன் வில்லு, மயில் சார்பு பெயர்கள் முதலியவற்றைச் சுட்டலாம்.

மைலா குடியிருப்பு, மயிலாங்குளம், மயிலாடும் பாறை, திருமயிலாடி, மைலம்பாடி, மைலேரி பாளையம், மைலம், மயிலாடுந் தாங்கல், காட்டு மயிலூர், மைலாப்பூர், மயிலாடு துறை போன்ற பல ஊர்ப்பெயர்களைத் தமிழகத்தில் மயில் சார்புடன் காண்கின்றோம். இதனைப் போன்று இலங்கையில் மயிலணி, மயிலப்பை, மயிலம்பா வெளி, மயிலவெட்டுவான், மயிலியோடை, மயிலிட்டி, மயிலிட்டிக் கரை, மயிலன் கூடல் போன்ற பெயர்களைக் காண்கின்றோம். மயில் தொடர்பான இத்தகைய பல பெயர்கள், இப்பகுதிகளில் மயிலின் மிகுதியினை இனங்காட்டுவதுடன், மக்கள் மனங்கவர்ந்த பறவையாகவும், இது விளங்கியதைக் காட்டுகிறது. இந்நிலையில், மக்களின் மனங்கவர்ந்த நிலையிலும், உயிர்கள் ஊர்களின் பெயராக இடம் பெற்றிருப்பதை உணர முடிகிறது. மேலும் தொழில் நிலையில் வளர்ப்பு நிலையில் பசு வளி, மந்தை வெளி போன்றவற்றைச் சுட்டலாம்.

கீரிமலை என்ற பெயர் பற்றி எண்ணும் போது, இ. பாலசுந்தரம் குறிப்பிடும் எண்ணங்கள் சுட்டத்தக்கன. "இங்கு முன்னர் காடு இருந்தது என்றும், இங்கு கீரிப் பிள்ளைகள் அதிகம் காணப்பட்டன என்றும் அதனால் இவ்விடத்திற்குக் கீரிமலை என்ற பெயர் ஏற்பட்டது என்றும் கூறப்படுகிறது.

நாகுலம் என்னும் இதன் பழைய நாமம் நகுலம் என மருவிப் பின்னர் தமிழில் கீரிமலை என்றாயிற்று என்கிறார் இராசநாயகம் (1926:3). ஆனால் குமாரசாமி(1918:131) கிரி என்னும் வட சொல்லும், அதன் பொருள் தரும் மலை என்னும் தமிழ்ச் சொல்லும் சேர்ந்து கீரிமலை ஆயிற்று என்றார்."

ஆயின் கீரிமலை, கீரியுடன் சார்புடையதாக அமைந்திருக்கலாம் என்ற எண்ணத்தை வரலாறு தருகிறது.

கி.மு 543—இல் இலங்கை அரசைத் தாபித்த விஜயன் என்பவன், தனது இராச்சிய பாதுகாவலுக்காய் இலங்கையின் பழைய ஆலயங்களைப் புதுப்பித்தான் அவ்வகையிற் திருக்கோணேசர் கோயில், திருக்கேதீஸ்வரன் கோயில், கீரிமலைச் சாரலின் பழுதுபட்டுக் கிடந்த திருத்தம்பாலேச்சுவரம், திருத்தம்பலேசுவரி கோயில், கதிரை ஆண்டவர் கோயில் முதலியவற்றைத் திருத்தி இந்தியப் பூசகர்களை வரவழைத்து ஆங்குக் குடியமர்த்தினான்' என்றும் கூறப்படுகிறது [14] என்ற எண்ணம் காணப்படுகிறது. எனவே கி. மு 543-க்கு முன்னரேயே இப்பெயர் காணப்படுவது தெரிகிறது. இங்குக் காணப்படும் பழம் பெயர்கள் அனைத்தும் தமிழிலேயே அமைந்துள்ளதாகத் தெரியும் நிலையில், கீரிமலையும் தமிழ்ப் பெயராகக் கொள்ள வாய்ப்பு உண்டு. அடுத்து, 'கீரி' இந்தியாவிலும், இலங்கை, மொசபட்டோமிய போன்ற பகுதிகளில் வாழும பிராணி எனப் பார்க்க, ஆதிமுதலே இது இப்பகுதியில் வாழ்ந்து வரும் நிலயில், தமிழரும் இதற்கு இப்பெயர் வைத்திருப்பர் என்ற நிலையில் கீரி தமிழ்ப் பெயரென்றும், நகுலம் வடமொழிப் பெயரென்றும் கொள்ளலாம். மேலும் 'கீரி' சார்புடைய பல பெயர்களைத் தமிழில் காண, நகுலம், நகுலன் என்று இரண்டும் வடமொழிச் சார்பையே காட்டுகின்றன. சிலப்பதிகாரத்தில் சுட்டப்படும் 'பிள்ளை நகுலம் பெரும் பிறிதாக' என்ற தொடரில் அமையும் நகுலம் வடமொழிச் சொல் என்பது உணரக்கூடிய ஒன்றாக அமைகிறது. எனவே இராச நாயகம் சுட்டும் தன்மையில் அன்றி இயல்பாகவே இதற்குக் கீரிமலை என்ற பெயரே பொருத்தமானதாக அமையலாம். எனினும் இவண் மலையில்லாமை 'மலை' பொதுக்கூறாக அமைந்ததன் காரணத்தை மேலும் ஆராயத் தூண்டுகிறது.

காங்கேயன் துறையிலிருந்து மேற்கே இரண்டு மைல் தொலைவிற் கடற்கரையோரமாகப் புனித நீருற்றுத் தலமாகக் கீரிமலை அமைந்துள்ளது. இங்கு முன்னர் காடு இருந்தது. கீரிமலை நீருற்றை ஈழத்துக் குற்றாலம் என்பர். ஆனால் இது மலையருவி அன்று. நிலத்து நீரூற்றாம் என்ற கருத்துகளையும்

---

14. இலங்கை இடப்பெயராய்வு— 1—ப—19

காண்கின்றோம்.[15] எனவே திரு. குமாரசாமி சுட்டும் கிரி மலை என்ற இருசொற்களின் இணைவு கீரிமலைக் குரியகாரணம் என்று சொல்லுமளவிற்கு 'மலை' சிறப்புடையதா என்பது நோக்கத்தக்கது.

மட்டக்களப்பில் சுட்டப்படும் 'வந்தாறு மூலை' என்ப தற்குக் குரங்கு சார்புடையது என்ற விளக்கம் அமைகிறது.[16] ஆயின் தமிழகத்தில் இவ்வழக்கு உண்மையா? என்பதைப் பார்க்க வேண்டும். தமிழ் லெக்ஸிகன் இப்பெயரைச் சுட்ட வில்லை. ஆசிரிய நிகண்டு குரங்குகளின் பெயர்த்தொகுப்பில் இப்பெயரைச்சுட்டவில்லை குரக்கஞ்சேனை என்றதொரு ஊர்ப் பெயரினை மட்டக்களப்பில் காண்கின்ற பொழுது குரங்குகள் இருக்க வாய்ப்பு அமைகிறது. எனவே இச்சொல் பிறமொழிச் சொல்லாக இருக்கலாம்.

இப்பெயர்களை நோக்க தமிழகம் இலங்கை நிலஅமைப்பில் கொண்ட ஒற்றுமை, ஒரே விலங்கு பறவை போன்ற உயிர் களைப் பெற்ற நிலையிலும் அமைகிறது. இருப்பினும் வட்டார வழக்கம் காரணமாகச் சிலபுதிய சொல்லாட்சியையும் காண்கின்றோம்.

**நீர்நிலைப் பெயர்கள்**

பொதுக் கூறுகளில் மிகுதியாக இடம்பெறும் நீர்நிலைப் பெயர்கள் சிறப்புக் கூறாகவும்சுட்டுதல்பெறுகின்றன. எனினும் பொதுக்கூறு அளவிற்கு இடம் பெறவில்லை. இதற்குக் காரண மாக, "ஊரின் சிறப்பான தன்மையே, பெருமைக்குரிய தன்மையே இடம் பெறும் தன்மையில், நீர் நிலைகள் தமிழகம் எங்கும் மிகுந்திருநத நிலை சிறப்புக் கூறாகும் நிலையை விட, பொதுமைத் தன்மைக்கே முதலிடம் அளித்திருக்கலாம் என்ற எண்ணத்தைத் தருகிறது என்பதை எடுத்துக் காட்டலாம்.[17] எனினும் இச்சிறப்புக் கூறுகள் இணைந்த ஊர்ப்பெயர்கள் தமிழகம் முழுவதும் பரந்து காணப்படுகின்றன.

ஆத்தூர், குளத்தூர், அருவிக்கரை, ஊத்துக்குழி, ஏரியூர், கூடலூர், பாலாத்தூர் காவேரிப் பட்டணம், பெண்ணையூர் போன்ற பல அமைகின்றன.

---

15. இலங்கை இடப்பெயர் ஆய்வு—1—பக்—18—19
16. மட்டக்களப்பு மக்கள் வளமும் வாழ்க்கையும் ப—41.
17. தமிழக ஊர்ப்பெயர்கள்—பக்—122

தமிழகம் போன்றே நீர்நிலைப் பெயர்கள் பல பொதுக் கூறாக அமையும் தன்மை இலங்கை ஊர்ப்பெயர்களிலும் அமைகின்றன. எனினும் தமிழகம் போன்றே சிறப்புக்கூறு ஆக சில பெயர்களே தென்படுகின்றன. எனவே மேற் சுட்டிய எண்ணத்தையே இங்கும் கருதுதல் இயலுகிறது.

அளவெட்டி, கரைவாகு, நிந்தவூர்ப்பற்று, கரவெட்டி, கரைப்பிட்டி, கரையாக்கன் குளமங்கால், கரைப்பிட்டி, கரையாக்கன் தீவு, கிணற்றடி (பெரிய கிணற்றடி) கரைதீவு கரைவாகு, கரைவெட்டி பெண்ணையாறு போன்றவற்றை இவண் தெரியவருகின்றோம்.

குளமங்கால் என்பதற்கு விளக்கம் தேடும் போது இ. பாலசுந்தரம் அவர்களின் கருத்து எண்ணத்தக்கது.

'குளம்' என்பதற்குப் பொதுவாக நாம் நம் வழக்குப் பெயரையே கொண்டு பொருள் எண்ணுதல்மேம்போக்கானது. ஆயின் அவர், 'இது குளமண்கால் என்பதன் திரிபாகும். இங்கு வெட்டுக் குளம், கட்டுக் குளம் என்ற இரு சிறு குளங்கள் உள. குளமண்—களிமண்; களிமண் எடுப்பதற்ச் செல்லும் வழி என்ற பொருளில் இப்பெயர் ஏற்பட்டிருக்கலாம்.' என்கிறார்.[18]

கிணத்துக் கடவு என்ற தமிழக ஊர்ப்பெயரைப் போன்று (கோயம்பத்தூர்) கிணற்றடியைக் காண்கின்றோம். பெண்ணையூர் என்ற பெயரைச் செங்கல் பட்டு மாவட்டத்தில் பார்க்க முடிகிறது. ஆற்றின் பெயர்த் தொடர்பால் அமைந்த ஊர் இது என்கிறார் செங்கல்பட்டு மாவட்ட ஊர்ப்பெயர்கள் நூலாசிரியர்.[19] பெண்ணையாற்றின் காரணமாகப் பெற்ற ஊர்ப்பெயர் இது என்பது தெரிகிறது. யாழ்ப்பாணத்துப் பெண்ணயாறு என்ற பெயர் பற்றிய கருத்தும் இவண் சுட்டத் தக்கது. பெண்ணையாறு என்ற தமிழக ஆற்றுப் பெயர் காரணமாக, பெண்ணையூர் அமையினும், பெண்ணை என்று பனைமரத்தினடிப் படையில் ஆறு பெற்ற பெயராக அமையலாமா என்பதும் எண்ணத்தக்கது.

---

18. இலங்கை இடப்பெயர் ஆய்வு—1 ப.7.
19. செங்கல்பட்டு மாவட்ட ஊர்ப்பெயர்கள்—ப. 235

'கரை' சார்பு பெயர்கள் கிணற்றங்கரை குளத்தங்கரை ஆற்றங்கரை வாய்க்கால்கரை போன்ற நீர்க் கரைகளையே சுட்டும் நிலையில், நீர் நிலைப் பெயர்களுடன் இவை இணை கின்றன.

அளை என்பதற்கு நீர் வழிந்தோடும் சிறு வாய்க்கால் என்ற பொருள் உரைக்கின்றார் சு. பாலசுந்தரம். இதன் அடிப் படையில், 'அளவெட்டி என்பது வடிகால்கள் வெட்டப்பட்ட இடம் எனப் பொருள் தருவதாகும். மழைக் காலங்களில் காணி களில் தேங்கி நிற்கும் மழை நீர் வழிந்தோடும் பொருட்டுப்பல அளைகள் (கால்வாய்கள்) இங்கு வெட்டப்பட்டு, அவை வழுக்கியாற்றுடன் தொடுக்கப் படுதல் வழக்கம், இக்காட்சியின் வெளிப்பாடாகவே கும்பளை, அளவெட்டி என்பன காரணப் பெயர்களாகத் தோற்றம் பெறலாயின'[20] என்று உரைத்துச் செல்லும் தன்மை, அவர்கள் பயிர் வளர்த்த தன்மையைப் பறை சாற்றவல்லது.

கழியோடை என்பதும் நீர் நிலைச் சார்புடைய பெயராக அமைந்து அதன் சூழலை இனங்காட்டுகின்றது.

இப்பெயர்களுள் பல இன்று தமிழரால் வழங்கப்பட்டும், தமிழர் அறிந்த பெயர்களாகவும் இருக்க, சில அங்குள்ள மக்களின் வட்டார வழக்காகவும் உணரக் கூடியதாக அமை கின்றன. சான்றாக 'அளை' என்பதைச் சுட்டலாம். அளை என்பது சிறு உயிர்கள் வசிக்கும் இடம் என்ற பொருள் பயன்பாடு இங்கு அமைய, அங்கு வாய்க்கால் என்று சொல்வது சுட்டத் தக்கது.

**நிலம்—தொடர்பான பிற கூறுகள்**

நிலத்தின் அமைப்பு, மண் அமைப்பு, அளவு, தன்மை, சூழல், தோற்ற நிலை, பழமை, புதுமை, திசை, சுட்டு நிலை, அழகு, கிடைக்கும் பொருள் போன்ற பல, நிலமும், நிலம் சார்ந்த கூறுகளையும் இப்பகுதியில் காணலாம். பல ஊர்ப் பெயர் கள் ஊரின் சிறப்பைத் தனிப் படுத்திக் காட்டும்நிலையில், மேற் சுட்டிய நிலஞ்சார்ந்த உண்மைகளைத் தம் சிறப்புக்கூறுகளாகத் தாங்கி நிற்கின்றன. இவை தமிழகம், இலங்கை இரண்டு பகுதி களிலும் காணக் கூடியதாக அமைகின்றன. சான்றாகப்

20. இலங்கை இடப்பெயர் ஆய்வு—1.ப.3

புத்தளம், நீண்ட கரை, இடமருவத்தூர், பொட்டல்புதூர் கரிசல் குளம், செங்கோட்டை, மேல் நெடுங்குளம், மணத் தட்டை கீழ்பாக்கம், இடையாத்தூர், பெருமருதூர், சின்ன கிருஷ்ணா புரம், வடசேரி போன்றவற்றைச் சுட்டலாம். இந் நிலையல் இலங்கையில் தெரிய வருகின்ற ஊர்ப்பெயர்களாக

| | |
|---|---|
| அக்கரைப்பற்று | நெடுங்கேணி |
| அம்பாரை | நல்லூர் |
| அமிர்தகழி | நடுவுக் குடியிருப்பு |
| கல்முனை | பழங்குடியிருப்பு |
| (பெரிய கல்லாறு) | பன்குடா வெளி |
| (சொறிக்) கல்முனை | புத்தளம் |
| (வீசக்) கல்முனை | மக்குவில் |
| கல்முனைக் குடியிருப்பு | மட்டக்களப்பு |
| கல்லடி | மண்முனைப் பற்று |
| கல்லடித் தெரு | மணற்சேனை |
| கல்லடி முனை | மணற்றி |
| கல்லாரை | மண்டான் |
| கல்லாறு | மன்னார் |
| கற்குடா | மாத்தளை |
| குருநாகல் | மாதோட்டம் |
| கோணாமுகம் | முனைக்காடு |
| சின்னவத்தை | வட்டுக் கோட்டை |
| திக்கரை | வலிகாமம் |
| | வாகரை |

போன்ற பல ஊர்களைக் காண்கின்றோம். இப்பெயர்கள் தமிழகத்தில் போன்று நில அமைப்பு, மண், இருப்பிடம், பழமை, புதுமை, கல் மிகுபகுதி. மலைப்பகுதி போன்றன வற்றின் அடிப்படையில் எழுந்தவை என்பது வெளிப்படையாக தெரிகிறது. இங்கும் பெரும்பான்மை பெயர்கள் எளிதாகத் தமிழகப் பேச்சு வழக்கின் அடிப்படையில் அமைய, சில பெயர்கள் ஆய்வுக்குரியனவாக அமைகின்றன.

அக்கரைப்பற்று தமிழகத்தில் உள்ள 'அக்கரை'யை நினைவுப்படுத்துகின்றது. நல்லூர், புத்தளம் போன்றனவும் இந்நிலையினதே.

மண்முனைப்பற்று, கல்லடித்தெரு மண், கல்சார்பு நில அமைப்பினைக் காட்டுகின்றன. மலைப்பகுதிகளையும் சில இனங்காட்டுகின்றன. மட்டக்களப்பு என்ற பெயர் குறித்துப் பல எண்ணங்கள் அமைகின்றன.

இலங்கையின் கிழக்குக் கரையோரத்தில் அமைந்துள்ள மாவட்டம் மட்டக்களப்பு மாவட்டம். தமிழர்கள் வாழும் நிலையில் தமிழ் ஈழத்தின் ஒரு பகுதியாக இயங்குகிறது.

''மட்டக்களப்பு மாவட்டம்—வெருகல் ஆறு, வங்காள விரிகுடாக்கடல், அம்பாறை மாவட்டம், பொலநறுவை மாவட்டம் ஆகியவை முறையே இதன் வடக்கு, கிழக்கு, தெற்கு எல்லைகளாக அமைகின்றன. 9516 சதுரமைல் பரப்பளவு கொண்ட இம் மாவட்டம் கிழக்கிலிருந்து மேற்காக நெய்தல், மருதம், முல்லை, குறிஞ்சி ஆகிய முறையில் நாநில வள அமைப்புடன் திகழ்கின்றது.

'மட்டக்களப்பு இம்மாவட்டத்தின் தலைநகரமாகும். இந்நகரிலே தொடங்கித் தெற்கு நோக்கி முப்பது மைல் நீளமுடையதாக மட்டக்களப்பு வாவி அமைந்துள்ளது. அவ்வாவிக்கு மேற்குப் புறமாக உள்ள கிராமங்கள் அனைத்தும் படுவான்கரை என்றும், கிழக்குத் திசையில் உள்ள ஊர்கள் எழுவான் கரை என்றும் வழங்கப்படுகின்றன.' என்ற எண்ணத்தைத் தமது ஈழத்து நாட்டார் பாடல்கள் என்ற நூலில் தருகின்றார் கலாநிதி. இளையதம்பி பாலசுந்தரம் (பக்.28—29).

'மட்டக்களப்பு மாநிலமானது இலங்கைக் கரையின் கிழக்கில் அமையப்பெற்றுள்ளதும் மிகவும் பழைய வரலாற்றினை உடையதுமான ஒரு பரந்த நிலப்பரப்பாகும். இம்மாநிலம் வடக்குத் தெற்காக வெருகல் நதிமுதல் குமுக்கன் ஓயாவரை 135 மைல் நீளத்தில் அமைந்திருக்கிறது. மட்டக் களப்பு என்னும்கடலேரி இதனை வாவி எனக்கொள்வாருமுளர், ஏறக்குறைய வடக்குத் தெற்காக, 30 மைல் தூரத்திற்கு மாத்திரம் அமையப் பெற்றுள்ளதாயிருந்த போதிலும் இக்கடலேரியினது செல்வாக்கினை இப்பிரதேசம் முற்றிலும் பெற்றுள்ளதாயிருப்பதன் காரணமாக இம்மாநிலம் இக்கடலேரியின் பெயர் சூட்டப்பட்டுள்ளதாயிருக்கின்றது. அது மாத்திரமன்றி இம்மாநிலத்தில் பரந்து படியப்

பெற்றிருக்கும் வண்டல் களிமண் செறிந்த தாழ்நிலமானது-இது பெரும்பாலும் கடல் மட்டத்திலிருந்து 20 அடி உயரத்திற்குக் குறைந்துள்ளது. முன்னொரு கால் அதாவது புவிச்சரிதவியலின் படி 'மயோசீன்' சுண்ணாம்புகற்பாறைகள் தோன்றியுள்ள பூர்வகாலத்தில், பரவைக் கடலினால் மூடப்பெற்றிருந்த களப்பாயிருந்தபடியினால் 'மட்டக்களப்பு' என்னும் பெயரைப் பெறுவதற்கும் பொருத்தமானதெனக் கொள்வது தவறாகாது. இம்மாநிலத்தின் மிகக் கூடிய நீளம் 135 மைல் ஆகும். அதன் மிகக்கூடிய அகலம் சுமார் 50 மைல் ஆகும் அதன்பரப்பு 2704 - 2 சதுரமைல்களாகும் என்ற எண்ணத்தை மட்டக்களப்பு மக்கள் வளமும் வாழ்க்கையும் (பக்-26) நூல் தருகிறது. ஆங்கிலக்கலைக் களஞ்சியமும் (Encyclopaedia Britannica) இதே கருத்துகளை இயம்புகின்றது.[21] இம்மூன்று குறிப்புகளினின்றும் மட்டக்களப்பு பற்றிய சில விளக்கங்களைத் தெரிகின்றோம். எனினும் பரப்பளவு பற்றிய கருத்து முற்றிலும் வேறுபட அமைகின்றது.

இவ்விலங்கைப் பகுதியான 'மட்டக்களப்பு' என்ற பெயர் குறித்தும் சில காரணங்கள் சுட்டப்படுகின்றன. இலங்கை என்ற நாட்டின் பிற பெயர்கள் போன்று இதற்கும் பிற பெயர்கள் பல உள. வரலாற்றுத் தெளிவு தரும் நிலையில் இவையுள்ளன. மட்டக்களப்பினை ஆங்கிலத்தில் Batticaloa என்கின்றனர்.

'மட்டக்களப்பு' என்னும் பெயர் ஆங்கமைந்துள்ள வாவியின் பெயரையொட்டியே எழுந்தது எனக் கருத இடமுண்டு. மட்டம் + களப்பு (கடல்நீரும் ஆற்று நீரும் கலந்து நிற்கும் இடம் களப்பு (Lagoon) எனப்படும்) = மட்டக்களப்பு

---

21. Batticaloa— a town and admininstrative district on the east coast of Ceylon. The town is situated on an island 69 mil. s. of Trincomalee. The population of the town was 22957 and of the district 196189, in 1963. Area of district 1016 sq. mil. Batticaloa was formerly of importance as a port, but this is now used only by local sailing boats...Vol. 3. Page. 289.

மட்டமான (ஆழமற்ற) சதுப்பேரி என்ற பொருளைத் தரும் மட்டக்களப்பு என்னும் பெயர், அவ்வாவியின் இருமருங்கிலு முள்ள நாட்டிற்கும் பெயராயிற்று எனக் கொள்ளப்படு கின்றது. மட்டக்களப்பு என்பது இன்று மட்டக்களப்பு நகரையே சுட்டுகின்றது. இப்பெயரைச் சிங்களத்தில் மடகளப்பு என்றும் வழங்குவர்' என்கின்ற கருத்து மட்டமான ஏரி அல்லது வாவி என்ற பொருளில் இப்பெயர் வழக்கு பெற்றது என்ற எண்ணத்தைத் தருகின்றது.[22]

கே. கணபதி பிள்ளை தமது கட்டுரையில், 'மட்டக்களப்பு என்பது மட்டமான கடலேரி அல்லது உப்பாறு எனப்பொருள் படும். களப்பு என்னும் பதம் ஆழமற்ற கடலேரி எனவும் பொருள் கொண்டுள்ளது, என இக்கருத்தை வலியுறுத்து கின்றார்.[23] மேலும், 'மட்டக்களப்பு என்னும் கடலேரி—இதை வாவி எனக் கொள்வாரும் உளர். ஏறக்குறைய வடக்கு தெற்காக முப்பது மைல் தூரத்திற்கு மாத்திரம் அமையப் பெற்றுள்ளதாயிருந்த போதிலும் இக்கடலேரியினது செல்வாக் கினை இப்பிரதேசம் முற்றிலும் பெற்றுள்ளதாயிருப்பதன் காரணமாக இம்மாநிலம் இக்கடலேரியின் பெயர் சூட்டப் பட்டதாயிருக்கின்றது' என்ற எண்ணமும் இப்பகுதியின் பெயர்க்காரணத்தை எடுத்தியம்புகிறது.

இந்நிலையில் இலங்கையின் இப்பகுதி இவ்வேரியின் செல்வாக்கு காரணமாக இப்பெயர் பெற்றது என்பது இடப் பெயராய்வு நோக்கில் ஏற்றுக்கொள்ளத் தக்கதாக அமைகிறது. மேலும் இலங்கையின் பிற பகுதியை ஆண்ட அரசர்களும் இப்பெயரை மாற்றாது குறித்து வந்துள்ளமையும், இவ்வாவி யின் செல்வாக்கினையுணர்த்தி இப்பெயர்க் காரணத்திற்கு வலுவூட்டவல்லது.[24]

---

22. ஈழத்து நாட்டார் பாடல்கள்—பக்-29, 30.
23. மட்டக்களப்பு மக்கள் வளமும் வாழ்க்கையும்—ப—26.
24. கண்டியைத் தமது இராசதானியாகக் கொண்டு ஏறக் குறைய 300 ஆண்டுகளுக்கு மூன் அரசாண்டு வந்த இலங்கை மன்னர்கள் இப்பிரதேசத்திற்கு மிகக் கூடிய மதிப்பினைக் கொடுத்திருந்தனர். அக்கால மட்டக்களப்பு மாநிலத்தினை அம்மன்னர்கள் 'மட்டக்களப்புவ' சேற்று வாவி என்றழைத்தனர்.
—மட்டக்களப்பு மக்கள் வாழும் வாழ்க்கையும்—ப—26,

எனவே இவ்விடத்திற்கு மட்டமான களப்பு என்ற தன்மையில் இப்பெயர் வந்திருக்க வேண்டும் என்று அறிஞர் பலர் கருத்தே பொருந்துமாறு அமைகிறது. எனினும் இதற்கு, மட்டுநகர் என்ற வழக்கு நிலை கருதி, கீழ் கண்ட கருத்தையும் உரைக்கின்றனர்.

'மட்டக் களப்பு வாவியின் மேற்குப் பகுதியில் உள்ள மரச் சோலைகளில் இருந்து பண்டுதேன் (மட்டு) வடிந்தோடி வந்து வாவியிற் (களப்பில்) கலந்ததால் அவ்வாவி மட்டுக் களப்பு→ மட்டக்களப்பு எனப் பெயர் பெற்றுக் காலப் போக்கில், அது அமைந்துள்ள பகுதி மட்டக் களப்பு என்றும் பெயர் பெறுவதாயிற்று, என்று இந்நாட்டு வளத்தில் ஈடுபட்ட புலவர்கள் கூறுவா.[25]

மேலும், "சேறு நிறைந்த நீர் நிலை" என்று பொருள்தரும் மட்டக் களப்புவ என்ற சிங்களச் சொல்லின் திரிபே மட்டக் களப்பு என்பாருமுளர். மட்டம் அல்லது, மட்டு, களப்பு என்னும் தமிழ்ச் சொற்களால் இப்பெயர் ஆக்கம் பெற்றிருப்பதால் அவர்கள் கருத்து ஏற்புடைத்தன்று. அன்றியும் இப் பிரதேசத்தில் உள்ள பெரிய களப்பு, கோரக் களப்பு, எனத் தமிழால் அமைந்த இடப்பெயர்களும், மட்டக்களப்புத் தமிழ்ப் பெயரென்பதை வலியுறுத்துகின்றன எனக் கூறும் கலாநிதி, சு. பாலசுந்தரம், மேலும், மட்டறால் (Prawn), மட்டத்தேள். மட்டச் சிப்பி, மட்டப்பரண், மட்டப்பலகை என்ற வழக்காறுகளையும் எடுத்துக் காட்டுகிறார்.[26]

மேலும் மட்டக்களப்பு மான்மியம் என்ற நூலில்,

சீரிலங்கும் மட்டமெனும் களப்பு நாட்டை
மட்டக் கந்தமே சூழ்ந்த களப்பென வகுத்து
மண் முனை மட்ட வாழ்வுறு களப்பு
மட்டமாநகர் தன்னில்,
மட்டமாங் களப்பை ஆண்டு

25. ஈழத்து நாட்டார்ப்பாடல்கள் — ப - 30.
26. " "

எனப்பல இடங்களில் பேசப்படுவதாகத் தெரிகிறது.[27] எனவே மட்டமாகிய களப்பு என்று பொருள்படும் மட்டக் களப்பு என்ற பெயர் வந்துள்ளது என்பது தெளிவு. களப்பு என்பது தூய தமிழ்ச் சொல்' என்ற எண்ணங்களையும் காண்கின்றோம்.[28] கண்ணகி வழக்குரை காதை, கோவலனார் கதை போன்ற இலக்கியங்களில் இவ்வூர்ப்பெயரின் பயிற்சியைக் காட்டும் ஆசிரியர், எனவே மட்டக்களப்பு என்ற பெயர் பிரவேசம் 15 ஆம் நூற்றாண்டில் இலக்கியத்தில் எறியுண்டென்பது பெற்றாம் என்கின்றார்.[29]

பன்றித்தீவு சல்லித் தீவு பாலமுனை பாசிக்குடா
என்றெக்காலமும் வழங்கும் ஏறாவூர் தனைக் கடந்து
சென்றப் போ புளியன்துறை சேரப்புறக் கிட்டோடி
மன்ற லொத்த தொடை மார்பர் மட்டக் களப்பில்
விட்டார்

— கண்ணகி வழக்குரை காவியம்

விட்டனரே கெவுஸிமுனை விரைவாகப் பன்டித்தீவு
மட்டசல்லித் தீவுடனே பாலமுனை தான் கடந்து
விட்டபாசிக் குடாவுடனே வினையாற்றுக் குடாகடந்து
மட்டு புன்னைக் குடாகடந்து மட்டக்களப்பில் விட்டனரே

— கோவலனார் கதை

என்ற பாடல்களையும் சான்று காட்டுகின்றார் இவர்.

இதன் பிறபெயர்களாக,

| | |
|---|---|
| மலையாளர் | — மலையர் குகநாடு |
| நாகர் இயக்கர் | - நாகமுனை |
| வங்கர் | — மட்டக்களப்பு |
| கலிங்கர் | — உன்னரசி கிரி |
| சிங்கர் | — மண்முனை அமைகின்றன. |

இப்பெயர்களை நோக்க நாகர், இயக்கர் ஆதிகுடிகள் என்ற நிலையில் 'நாகமுனை' என்பதே இதன் முதல் பெயராக அமைய வாய்ப்பு அமைகிறது. இந்நிலையில் யாழ்ப்பாணம் என்ற பகுதியின் பெயராக அமையும் 'நாகநாடு'ம் இவண்

---

27. மட்டக்களப்பு மக்கள் வளமும் வாழ்க்கையும் — ப - 24.
28. ,, — ப - 24, 25
29. ,, — ப - 25.

ஒப்பிட்டு நோக்குதற்குரியதாக அமைகிறது.[30] இந்நிலையில் இப்பகுதியில் வசித்த நாகர் இனத்தார், காரணமாக நாகநாடு நாகமுனை என்ற பெயர்கள் இப்பகுதி முழுவதற்கும் அமைந்திருக்கலாம் என்ற எண்ணம் தோன்றுகிறது. இலங்கை அல்லது இலங்கையின் வடபகுதி முழுமையும் நாகதீபம் எனச் சுட்டப்பட்ட எண்ணமும் இதனோடு தொடர்புடையது.

அடுத்து, வரலாற்றுக் காலத்திற்கு முன்னரும் தமிழ் மக்களும் சிங்கள மக்களும் கலந்து வாழத் தொடங்கி விட்டனர் என்ற எண்ணத்தின் அடிப்படையில் பார்க்க.[31]

வங்கர்—மட்டக்களப்பு என்றபெயரை வழங்கினர் என்பது வினாவிற்குரியதாக அமைகிறது. இது வங்கர் வைத்த பெயராக இருப்பின், மட்டக்களப்பின் பெயர் மேலும் ஆய்விற்குரியதாக அமைகிறது. ஆயின் இன்று, கலைச்சொல் மொழி பெயர்ப்பில் ஊர்ப்பெயர்களை ஒலி பெயர்க்க வேண்டும் என்ற எண்ணம் அமைவது போன்று, வங்கர் தமிழர் சூட்டிய மட்டக்களப்பினை அவ்வாறே ஒலித்தனரா என்பதும் ஆய்வுக்குரியது.

மலையாளர் மலையர் குகநாடு என்று குறிப்பிட்டனர் என்பதை நோக்க, மலையாளத்தில் வாழ்ந்த குகர் என்பார் இங்குக் குடியேறினர் என்பதற்குரிய சான்றுகளைக் காண்கின்றோம். எனவே அவர்கள் தம் பெயரை இட்டுக் கொண்டுள்ளனர் என்பதை உணர்கின்றோம். தவிர, சிங்களர் 'மண்முனை' என்று சுட்டினர் என்பதைக் காண மண்முனை தனித் தமிழ்ப்பெயர் போன்று தோற்றம் அளிப்பினும் இச்சொல்லுக்குச் சிங்களத்தில் என்ன பொருள் என்று காணுதல்தேவை.

இவ்வாறு இந்தியாவின் பல பகுதிகளிலும் இருந்து வந்த மக்கள் இன்று, தமிழர், சிங்களர் என்ற பெயர் கொண்டு இவண் வாழ்கின்றனர். இவர்கள் தவிர இஸ்லாமியர், கிறித்தவரும் இன்று வாழ்கின்றனர். இவர்களைப் பற்றிக் கூறும்போது, மட்டக்களப்பு மக்களின் சமய சமரசபண்பாடு ஆராயும் அறிஞர் கீழ்க்கண்டவாறு இயம்புகின்றார். 'மட்டக்களப்பு மக்களின் சமயப் சமரசபண்பாடு பற்றி

30. மட்டக்களப்பு மக்கள் வளமும் வாழ்க்கையும்—ப—48.
31. ,, —ப—46.

ஆராயும்பொழுது, புவியியல் அமைவிலான தரைத்தோற்றம், அதற்கேற்ப ஊர்கள் அமைந்தமை முதலிய அடிப்படையான அம்சங்களை உள்ளத்திலே நிலை நிறுத்திக் கொள்ள வேண்டியுள்ளது. தமிழர், இஸ்லாமியர், சிங்களவர், கிறித்தவர் முதலியோர் பெருமளவு கூடி வாழ்கின்ற இப்பெரு நிலப்பிரதேசம் வெருகல் கங்கை தொடக்கம் பாணகை ஈறாகப் பரந்து கிடக்கிறது. மிகவும் நீண்டும் அகலத்தில் ஒடுங்கியும் காணப்படும் மட்டக்களப்புப் பிரதேசத்தின் புவியியற் தரைத்தோற்றம், தரையியல்பு என்பன, இனரீதியிலே குடிகள் கலந்தமைந்து வாழ்ந்த முறைக்கும் அவை தம்மிடையே சமரசப் பண்பாட்டை வளர்த்துக் கொண்டமைக்கும் அடிப்படை ஆதாரங்களாக அமைந்துள்ளன. மிக நெடுங்காலமாக தமிழரும் இஸ்லாமியரும் கலந்து வாழுகின்ற நாடு மட்டக்களப்பு என்று எழுதும் தன்மையில் முதன்மை நிலை தமிழர், இஸ்லாமியருக்குரியது என்பது தெரிகிறது.[32] பின்னர் சிங்களவரும் இவண் இணைய பின்னர் கிறித்தவர்களும் இங்கே வாழ்க்கையைத் தொடங்கினர் என்பதைஉணரக் கூறுகின்றது.

மக்கள் நிலை இவ்வாறு அமைய, யாழ்ப்பாணத்தை விடவும் கண்டியின் அருகாமை காரணமாக, கண்டி அரசுடன், நெருங்கியத் தொடர்பு கொண்டிருந்த நிலைமையை மட்டக் களப்பு வரலாறு காட்டுகிறது. இந்நிலையில் ஊர்ப்பெயர் களிலும், தென்பகுதி மக்களின் தாக்கம் கண்டிப்பாக இருக்கும் என்பதை எண்ணல் இயலுகிறது.

கிழக்கு ஈழத்தின் தென்பகுதியாக மட்டக்களப்பு திகழு கிறது. இந்நிலையில் திரிக்கோண மலை வடபகுதியாக அமைகிறது. இன்றுதென்பகுதியான மட்டக்களப்பு மாவட்டம் இரண்டு பிரிவாக பிரிக்கப்பட்டு உள்ளது. அவை யாவன மட்டக்களப்பு, அம்பாறை.

**கிடைக்கும் பொருட்கள்**

நில அமைப்பில் நில அமைப்பு, இயற்கைச் சூழல், திசை, இருப்பிடம் போன்றனவற்றுடன், அங்குக் கிடைக்கும் பொருட் கள் பற்றிய உணர்வும் ஊர்ப் பெயர்களில் உண்டு. மணப் பொருள், உலோகப் பொருள், இவற்றுடன் உணவுப் பெயரும் அமைகின்றன. இவை முழுவதையும் தனியே ஆராயின் புதிய செய்திகள் கிடைக்க வாய்ப்புண்டு.

32. மட்டக்களப்பு மக்கள் வளமும் வாழ்க்கையும்— ப—74.

ஜவ்வாது பட்டி. சூடசத்திரம், கஸ்தூரி பாளையம், குங்கிலிய நத்தம், பாலூர், கருப்புக் கட்டி ஏந்தல், மீனங்குடி, நெய்க்காரப்பட்டி, உப்புக்கோட்டை சாலிச்சந்தை, அன்ன சாகரம், தேனம்பாக்கம், அமுதூர் மேடு, வெண்ணையூர் அவலூர் பேட்டை போன்ற பல பெயர்களைக் காண் கின்றோம். மணப்பொருளை விட உணவுப் பொருள், உலோகப்பொருள் சார்பு மிகுதியாகத் தென்படுகிறது.

இலங்கா மணியபுரம், முத்துப்பட்டணம், பொன்ன மங்கலம், மணிகெட்டி பொட்டல், சிந்தா மணிப்பேரி, கனகம்பாடி, ரத்தினம் குட்டம், பொன்மேனி, பித்தளைப் பட்டி, மணியம்பலம், முத்தூர், செம்பனார் கோயில், கனகம் பட்டு, வைரபாளையம், வெள்ளியம்பதி போன்ற பலவாறாக ஊர்ப்பெயர்கள் உள. விலையுயர்ந்த கற்கள், முத்து உலோகம், அல்லது, உணவு அல்லது மணமாக இருப்பினும் இவை பல கருத்துகளைக் கொண்டு அமைந்துள்ளன என்பதை ஓரளவிற்கு ஊகிக்க முடிகின்றது. கஸ்தூரிபாளையம் மணப் பொருளா? ஆட்பெயரா? பித்தளைப்பட்டி, பித்தளை உருவாக் கப்பட்டஇடமா? அல்லதுகிடைத்த இடமா? அல்லதுபித்தளைப் பொருட்கள் செய்த இடமா? மணியம்பட்டு வெள்ளியம்பதி கோயில் சார்பு உடையனவா? இதனைப்போன்ற பல தெளிவு படாத நிலையில் அமைகின்றன.

மேலும் நுண்மையான பிரிவுக்கு வழிவகுக்கும் மணப் பொருட்கள், உலோகப் பொருட்கள், அன்று கிடைத்த இடமாக இருப்பின், இன்று கிடைக்க வழியுண்டா போன்ற எண்ணங்கள் இவண் எழுகின்றன.

இவற்றைப் போன்ற ஊர்ப்பெயர்கள் இலங்கையிலும் உள, இலங்கையின் இன்னொரு பெயராகச் சுட்டப்பட்ட தாப்ரபனேயுடன் (தாமிரபரணியின் திரிபு) செம்புக் குளம், பொன்பரிப்பு, பொன்னாலை, வெள்ளியம்பத்தை கனகாம்பிகைபுரம், (பன்னாலை) பொன்னாலைக் கட்டுவன், போன்றவற்றை இவண் சுட்டலாம் எனினும் உலோகம் போன்றுமணம், உணவுப் பொருட் ஊர்ப்பெயர்களை நாம் காணயியலவில்லை. இலங்கை முழுவதிலும்

காணப்படும் தமிழ் ஊர்ப்பெயர்களை ஆராயின் கிடைக்க வாய்ப்பு உண்டு. இப்பெயர்கள் பற்றிய விளக்கங்கள் மேலும் தெளிவு அளிக்கும்.

இலங்கையின் பிறபெயர்களாக அமையும் மாணிக்கத்தீவம் முத்துத்தீவம், ரத்தினத்தீவம் என்பனவும் இவண் சுட்டத் தக்கன. முத்துச்சல்லாபம், சிலாபம், ஹல்லாவ என வழங்கப் பட்டது, இவை முத்துக்கிடைத்த நிலையைச் சுட்டுகின்றன. இன்று அத்தொழில் நடைப்பெறுகிறதா? மேலே சுட்டிய பொருட்கள் இலங்கையில் கிடைக்கின்றவா? என்பது மேலும் இப்பெயர்களின் காரண வலுவை எடுத்தியம்பும்.

உணவுப்பெயர் என்ற நிலையில் தமிழகத்தில் மிகுதியான பெயர்களைக் காண, இலங்கையில் அமிர்தகழி என்றதொரு பெயரினை மட்டுமே இப்போதைய தொகுப்பில் காணுதல் இயலுகிறது.

அமிர்தகழி மாமாங்கேஸ்வரர் கோயில் என்பது மட்டக்களப்பில் சிறப்பு வாய்ந்த தலம். இவண் கழி என்பது நீர்நிலைச் சார்புடன் தொடர்புடைய நிலையை அறி கின்றோம். ஆயின், இதில் பொதுக்கூறாக அமையும் 'அமிர்த' என்பதற்குரிய பொருள், காரணம் விளங்குமாறு இல்லை. மேலும் 'கழி, என்னும் போது சேறு' கலந்த நீரினைத் தான் இன்று நினைவு கூர்கின்றோம். எனவே 'அமிர்தம்' என்னும் சொல்லோடு இது எவ்வாறு பொருந்தும் என்பதும் எண்ணத் தக்கது. எனினும் தமிழர்கள் போன்று, இலங்கை வாழ் தமிழர்கள், ஊர்ப்பெயர் சூட்டுவதில் மட்டுமல்லாது, அதற்குப் பொருள் புரியாத நிலையில், புராணக் கதைகளை இணைத்து விளக்கம் கூறுவதிலும் ஒரே எண்ணப் போக்குடன் அமை கின்றனர் என்பதை இப்பெயராய்வு நமக்குக் காட்டுகின்றது.

தமிழக ஊர்ப்பெயர்களில் பல ஊர்ப்பெயர்கள் இயற்கைச் சார்பாக அமைந்தவை. சில இறைத் தொடர்பால் எழுந்தவை. ஆயின், ஊர்ப்பெயர்கள் இறையுறையும் தலங்களாகத் திகழ்ந்த மையும், அல்லது தொடர்பும் காரணமாக, புராணக்கதை களைக் கூறி விளக்கம் கூறுவது ஒரு மரபாக அமைகிறது. இது தவிர்க்கப்பட்டு. உண்மைக் காரணம், பல துறை அறிவையும் கொண்டு நோக்கப்பட வேண்டும் என்பது ஊர்ப்பெயர் அறிஞர்கள் சிலர் தரும் எண்ணமாக அமைகிறது. சான்றாக

அழுந்தூர் என்பது சங்ககால ஊர்ப்பெயர். ஆயின் பிற் காலத்தில் சைவச் சார்பும், வைணவச் சார்பும் காரணமாக, இதற்கு இரண்டு தெய்வச் சார்பும் சுட்டிப்பெயர் விளக்கம் தருவதைக் காண்கின்றோம்.[33] இதனைப் போன்று பல பெயர்கள் அமைகின்றன.

இந்நிலையிலேயே 'அமிர்த'கழிக்கும் விளக்கம் தந்துள்ளனர் இலங்கை மக்கள்.

''சீதையைத் தேடி இலங்கையிலுள்ள அசோகவனத்தை அடைந்த அனுமான் இலங்காபுரியைத் தனது வாலினால் எரியூட்டிய பின்னர் வாலிலே பற்றிக் கொண்டிருந்த நெருப்பையணைப்பதற்கு இந்த மாமாங்கத் தலத்தில் உள்ள தீர்த்தக் குளத்திலே வாலை விட்டதாகக் கூறப்படுகின்றது.

சீதையைக் காத்து வந்த இராவணனை அழித்துச் சீதையைச் சிறைமீட்ட பின்னர், இராமர் இந்தியாவுக்குத் திரும்பிச் சென்ற வழியில், இக்கிராமத்தினூடாகச் சென்ற தாகவும், அந்நேரம் சோர்வடைந்து இப்பகுதியிலே இளைப்பாறும் போது இலிங்க பூசை செய்ய வேண்டிய விருப்பம் ஏற்பட்டதும், அனுமானை இலிங்கம் எடுத்து வருவ தற்கு இந்தியாவிற்கு அனுப்பியதாகவும், அனுமார் வருவ தற்குத் தாமதம் ஏற்பட்டதும், இராமர் ஒரு பிடி மண்ணை எடுத்து இலிங்கம் அமைத்து அதற்கு அபிஷேகம் செய்வதற்குத் தீர்த்தம் தேவைப்பட்டதால் தனது கோதண்டவில்லை எடுத்துப் பக்கத்தில் ஊன்றியதும் அதனால் ஏற்பட்ட பள்ளமே நீர் சுரந்து குளமாகி அதுவே அவிமுத்தி தீர்த்தக் குளமாகியது.

இந்தியாவுக்குச் சென்று இலிங்கத்துடன் வேகமாகப் பாய்ந்து வந்த அனுமானுடைய பாதங்கள் பட்ட இடமே இத்தீர்த்தக்குளம்''[34]

இத்தகைய கதைகளுடன் மேலும் ஒரு கதை, தமிழகத்தில் பல மூர்த்திகள் குறித்து உலவும் கதைகளுடன் மிகவும் இணை கின்றது.

''இராமரால் வைத்து வணங்கப்பட்ட இலிங்கமானது காலப்போக்கில் அடர்ந்த காட்டுப் பகுதியில் இருந்ததாகவும்,

33. இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள்—தொகுதி—2. ப-27
34. மட்டக்களப்பு மக்கள் வளமும் வாழ்க்கையும்—ப. 116.

விந்தனைப் பகுதியில் வாழ்ந்த வேடர்கள் தேன் எடுப்பதற்காக இப்பக்கமாக வரும்பொழுது, ஒரு நாவல் மரத்தில் தேன் இருப் பதைக் கண்டவொரு வேடன் அதனை எடுக்க நாவலைக் கோடாரியால் வெட்டும் போது கோடாரி, தவறி இலிங்கத்தின் மேல் விழுந்ததாகவும், அதனை வேடன் கவனியாமல் தேனை எடுத்துக் கொண்டு ஒரு மரத்தடியில் இளைப்பாறியதாகவும், அவன் சற்றுக் கண்ணயரும் போது இறைவன் கனவிலே தோன்றி உன்னுடைய கோடரியால் அடியுண்ட எனது உடல் வலியெடுக்கின்றது. எனவே சுடு தண்ணீர் வைத்து வார்க்கும் படிக் கூறியதாகவும், வேடன் விழித்தெழுந்து ஓடிச் சென்று பார்த்தபோது, இலிங்கமொன்று இருப்பதனையும், அதிலே கோடரிபட்ட தடம் இருப்பதையும் கண்டு, பயபக்தியுடன் சுடு தண்ணீர் வைத்து அபிஷேகம், பூசை முதலியன செய்து இலைகளாலும், குழை கொடிகளாலும் பந்தல் ஏற்படுத்தி, பக்தியுடன் வணங்கி வந்தான் என்றும் அறிய முடிகிறது.''[35]

இத்தலத்தில் உள்ள கோயிலில் உள்ளது சிவலிங்கமெனினும் இதனை மாமாங்கேஸ்வரப் பிள்ளையார் என்றே மக்கள் வழிபடுகின்றனர்.

இக்கதைகளையும், 'இவற்றுள்ளே வங்காள விரிகுடா கடலோடு மட்டுநகர் வாவி சங்கமமாகும் இடத்திலே அமையப் பெற்றுள்ள அமிர்தகழி என்னும் கிராமம், என்ற எண்ணத் தையும் நோக்க, இக்கதைகளின் நிலை ஆய்வுக்குரியதாகிறது. இதன் கிழக்கிலே அவிமுத்தித் தீர்த்தம் என்ற தீர்த்தக் கரை யுண்டு எனக் காண, அமிர்தகழி இயற்கைச் சார்புடைய பெயராகவே அமைய வாய்ப்பு மிகுகின்றது. களப்பு, கழிப் பகுதி எனினும் இடையில் நல்ல நீர் கிடைக்கும் இடம் என்ற நிலையிலும் பெயர் பெற்ற இப்பகுதி, பின்னர் ஊர்ப்பெயரா கவும் விளங்கத் தொடங்கியுள்ளது எனக் கருத இடமுள்ளது. மேற்கூறிய காரணங்களைக் கொண்டு நோக்கிய மாமாங் கேஸ்வரப் பெருமான் கோயில் கட்டுரையாசியர், 'இக்காரணங் களில் இருந்து இத்தலம் பழைமை வாய்ந்தது என்பதை உணரக் கூடியதாக உள்ளதேயொழிய, அதனை வரலாற்று முறையில் நிறுவுவதற்கு எவ்வித பட்டயங்களோ, கல்வெட்டு

35. மட்டக்களப்பு மக்கள் வளமும் வாழ்க்கையும்
—பக்—116—117.

களோ, புதைப் பொருட் சான்றுகளோ எமக்குக் கிடைக்க வில்லை' என்கின்ற எண்ணம் இவண் சுட்டத் தக்கது[36]

**எண்ணுப் பெயர்கள்**

தமிழகத்தில் காணப்படும் எண்ணுப்பெயர்ச் சார்பு ஊர்ப்பெயர்கள்போன்று மிகுதியாக இலங்கையில் கிடைக்க வில்லை:

தமிழகத்தில் ஒத்தைப்பட்டி, இரு மரம், முக்கூடல். நான்கு நேரி, அஞ்சானக் குட்டி, எழுவர் குளம், எட்டான் குளம், நவக்கானி போன்றன பல அமைகின்றன.

ஏழாலை என்றதொரு இடத்தினை யாழ்ப்பாணத்தில் காண்கின்றோம். ஏழாலை என்பது ஏழு ஆலையா அல்லது ஏழில் என்பது ஏழிற்பாலை என்ற கிழங்கு வகைத் தாவரம் கருதி இப்பெயர் அமைந்ததா என்பதும் கருதத் தக்கது. இலங்கை இடப்பெயர் ஆய்வுநூல், ஆலைகளின் இயல்பு நோக்கி, இப்பெயர் அமைந்தது என்று இயம்புகின்றது.[37]

**2. செயற்கை அமைப்பு**

தமிழகத்தில் இயற்கைக் கூறுகள் ஊர்ப்பெயரில் இடம் பெற்ற அளவிற்குச் செயற்கைக் கூறுகள் இடம் பெறவில்லை. இவ்வொற்றுமை இலங்கையிலும் அமைகிறது. இவற்றைப் பற்றிய எண்ணமாக, 'செயற்கை அமைப்புகள், இயற்கை அமைப்புகளைவிட, ஊர்ப் பெயர்களின் காலத்தை நாம் உணர்ந்து கொள்ளவும், காலந்தோறும் மனிதன் உருவாக்கிய செயற்கை அமைப்பு முன்னேற்றத்தை நாம் உணர்ந்து கொள்ளவும் பெரிதும் துணையாகின்றன என்பது அமை கிறது.[38]

தமிழகத்தில், கோட்டையடி, கோவில் விளை, தேரூர், செங்கல் படை, அணைக்கரை, அம்பலத் தாடி, மண்டப சாலை, தோரணக்கல் பட்டி, பாலம்பாடி, சத்திரப் பட்டி, மாளிகைத்திடல், கைலாயமஹால் தோட்டம், கோட்டைப் பூண்டி, கணவாய் புதூர், வேலிவயல், காவல் சேரி போன்ற பலவற்றைக் காண்கின்றோம். இவை அனைத்தையும் நோக்க,

36. ,, ,, பக்—116.
37. இலங்கை இடப்பெயர் ஆய்வு 1—ப. 38.
38. தமிழக ஊர்ப்பெயர்கள்—பக் 134

செயற்கை அமைப்புகள் தமிழர்களால் மிகுதியாக உருவாக்கப் பட்டு இருப்பினும், சிலவே அவற்றுள் ஊர்ப்பெயராக இடம் பெறுகின்றன என்பதை நாம் தெரிந்து கொள்ள முடிகிறது. சான்றாக கோவில், சந்தை, தொழுவம், தேர், கோட்டை, மடம்,செங்கல், மண்டபம், சத்திரம், அரண்மனை, மாளிகை, காவலிடம போன்றவற்றைச் சுட்டலாம். மக்களுடன் மிகுந்த தொடர்பும், ஊரினுள் சிறப்புடன் காணப்படும் அல்லது காணப்பட்ட தன்மையும் இப்பெயர் சூட்டலுக்கு அடிப் படையாகலாம். இவற்றைப் போன்று இலங்கையிலும் காணப்படும் பெயர்கள் எண்ணத்தக்கவை.

ஊர்க்காவல் துறை
கோட்டைக் காடு
கோயிலாக் கண்டி
கோவிற் கடவை
சங்கு வேலி
நாவாய்த் துறை
மாளிகைத் திடல்.

தமிழக மக்களின் எண்ணம் இங்கும் பொருந்தக் காணலாம். இலங்கையில் மக்கள் புதியதாகச் செயற்கை அமைப்புகளை அமைத்துக் கொண்டதாகவும் தெரியவில்லை.

மாளிகைத் திடல் என்ற ஊரைத் தஞ்சையிலும் காண் கின்றோம். இது சோழர் அரசச் சார்புடையது என்ற எண்ணம் உண்டு. இலங்கையிலும் அது பொருத்தமாகலாம். மேலும் வரலாற்றுச் சார்பு பெயர்கள், ஆட்பெயர்கள் போன்று இவையும் வரலாற்று விளக்கம் தர வாய்ப்புத் தருவன போல் தோன்றுகின்றன. தமிழகத்திலுள்ள அனைத்து ஊர்ப் பெயர்களும், இவை காரணமாக ஆராயப்படும் போது பல விளக்கங்கள் கிடைக்கலாம். ஊர்ப்பெயர்கள் சிலவற்றிற்கு விளக்கம் கிடைக்கின்றன.

மாளிகைத் திடல் பற்றி, யாழ்ப்பாண சரித்திரம் நூலாசிரியர், மாளிகை கட்டப் பட்டவிடம் பின்னர் நாளில் பழைய நகரமெனப்பொருள்படும் தொல்புரம் எனப்பட்டது. மாளிகை இருந்த இடம் இன்றும் மாளிகைத் திடல் எனப்படுகின்றது என்கிறார்.[39]

39. யாழ்ப்பாண சரித்திரம்—ப. 5

இன்று 'சிலாவ' எனச் சுட்டப்படும் சிலாவத்தின் முழுப் பெயர் முத்துச் சலாபமாகு . முத்துக் குளிக்கும் இடமாக இலங்கையில் விளங்கிய இடம் இது. தமிழக முத்து போன்று ஈழத்து முத்தும் அன்று பெயர் பெற்றுத் திகழ்ந்தது. அர்த்த சாத்திரத்தில் குறிப்பிடப்படும் ஈழத்து முத்து பற்றி, அருள் செல்வ நாயகம், முத்துகளில் இரண்டு வகைகள் இருக்கின்றன. ஒன்று பாண்டிக் கபாடகம். மற்றது தாமிர வருணிகமாகும். சாணக்கியன் குறிப்பிட்ட தாமிர வருணிகம் என்பது ஈழத்து முத்தேயாகும். ஈழத்திலே முத்துக் குளிக்கும் இடமாகவும், துறை முகமாகவும் முத்துச் சலாபம் துலங்கியது. முத்துச் சலாபத் துறையிலே எத்தனையோ பிறநாட்டு கலங்கள் முத்து வாணிபத்திற்காக வந்து போயின[40] என்கிறார். எனவே பண்டு தொட்டு, தமிழர் தங்கி வாழ்ந்த இடம் இது என்பதும் இவண் புலனாகின்றது. தனித்தமிழ்ப் பெயரான இது இன்று சிலாவம் என்று அழைக்கப் படுவது வேதனைக்குரியது. சிங்களர் இதனை ஹல்லாவ என்பர். (இலங்கையின் பெயராகவும் இது சுட்டப்பட்டமையை முன்னர் கண்டோம்.)

சங்குவேலி 'கி. பி. 1748 இல் முடிபுனைந்த சிங்கைப் பரராசசேகரன் இரண்டாவது தமிழ்ச் சங்கத்தைச் சங்குவேலி என்னும் ஊரில் நிறுவினான், முதற்சங்கம் சிதைந்து போயின மையினாற்றான் மன்னவன் இரண்டாவது சங்கத்தை நிறுவினான் என்ற செய்தி[41] இப்பெயர் குறித்து ஒரு சில எண்ணங்களைத் தருகின்றது,

இவ்வூர்ப் பெயரினை யாராயும் போது, எவ்வாறு புத்த மதம் வளர தமிழ் மன்னர்கள் துணை புரிந்தனரோ அதனைப் போன்று, ஈழத்தில் இருந்த சிங்கள மன்னர்கள், தமிழ்மொழி வளரவும் துணைபுரிந்துள்ளனர் என்பதை அறிய முடிகிறது. இது குறித்து நோக்க சில எண்ணங்கள் தெளிவா கின்றன. 'நாலாம் பராக்கிரமபாகு என்ற சிங்கள மன்ன வனது சபையில் போசராசபண்டிதர்' என்னும் தமிழ்ப்புலவர் சரசோதி மாலை என்னும் சோதிடநூலை அரங்கேற்றினார். சிங்கள மன்னவனுடைய சபையில் தமிழ்ப் புலவனொருவன்

40. ஈழமும் தமிழரும்—ப. 105
41. ஈழமும் தமிழரும் —ப.52

சோதிட நூலை அரங்கேற்றினான் எனில், அக்காலையில் ஈழமெங்கும் தமிழ் வாழ்ந்து கொண்டிருந்தது என்பது தெளிவாகிறது. சிங்கள மன்னவர்களும் தமிழ்மொழி கற்றுத் தேர்ந்தவர்களாக இருந்தார்கள் என்பதற்குச் சரசோதிமாலை அரங்கேற்றம் ஓர் எடுத்துக்காட்டாக அமைகிறதன்றோ?' 'வரோதய சிங்கை ஆரியன் என்னும் மன்னவன் தமிழை வளர்ப்பதற்காகத் தமிழ்ச் சங்கமொன்றை நிறுவினான்' என்பனவற்றைக் காண்கின்றோம்.[42] எனவே இலங்கையில் தமிழ்ச் சங்கங்கள் நிறுவப்பட்டன என்பது தெரிகிறது. முதல் சங்கம் அழிவுபட, இரண்டாம் சங்கம் நிறுவப்பட்டது என்பதைக் காண, இந்த, ஊர்ப் பெயரினையும் ஆராய வேண்டியதாக அமைகிறது. யாழ்ப்பாணத்தில் இருந்த இடம் சங்கவேலி. இன்று சங்குவேலி என்று அழைக்கப்படுகிறது. 13-ஆம் நூற்றாண்டில் வடக்கே யாழ்ப்பாண இராச்சியம் நிறுவிய ஆரியச் சக்கரவர்த்திகள் தமிழ் வாழ, பல்லாற்றானும் முயன்றமை தெரிய வருகிறது. இந்நிலையில், இந்த சங்கம் முதன் முதல் நிறுவப்பட்ட இடம் எது என்பது ஆய்வுக்குரியது. ஏனெனில். இரண்டாம் சங்கம் சங்கவேலி என்னுமிடத்தில் நிறுவப்பட்டது என்பதை எண்ண, முதற் சங்கம் இருந்த இடம் அல்லது முதற் சங்கத்திற்குச் சொந்தமான இடம் என்ற நிலையில் அந்த இடத்திலேயே இரண்டாம் சங்கம் நிறுவப்பட்டிருக்க வாய்ப்புண்டு, எனினும் தமிழ்ச் சங்கங்கள் தொடர்பாக இப்பெயர் பெற்றது மட்டும் உண்மையென்பது புரிகிறது. சங்க வேலியே இன்று திரிந்து சங்குவேலி ஆகியிருக்க வாய்ப்புண்டு.

ஊர் காவல் சார்புடைய நிலையில் ஊர்க்காவற்துறை என்றபெயர் அமைந்துள்ளது என்பது பெயரின் பொருள் தரும் எண்ணமாகும். ஆயின் இன்று அதனை வழங்கும் தன்மை (ஊராத்துறை)[43] மாறுபட்ட பொருண்மைக்கு வழி வகுக்கின்றது.

'தானனகள் இருந்தமை பற்றி அங்குள்ள துறை 'ஊர் காவற்றுறை' எனப்பட்டதுமாம். ஊறாத்துறை எனக் கொண்டு பன்றித்துறை எனப் பொருள் கொள்வாரும் உளர்' என்பது ஒரு கருத்து.[44]

42. " பக். 50—51
43. இலங்கையில் தமிழ்ப்பண்பாடு -ப—94
44. யாழ்ப்பாண சரித்திரம்—ப—21

'ஊர்காவற்றுறை என்பது kayts என்ற ஒல்லாந்த சொல்லின் மொழிபெயர்ப்பு. kayts என்பதற்குக் காவல்துறை என்பது பொருள். இந்தக் காவற்றுறையிற் கடலுள் ஒரு கோட்டையும், கரையில் ஒரு கோட்டையும் இருந்தன. கரையில் இருந்தது அழிந்து விட்டது. கடலில் இருப்பது Hamen kiel என்று பெயர் பெற்றது.[45]

செயற்கைக் கூறா அல்லது ஆட்பெயரா என்று ஆய்வு தெளிவிக்கப்பட வேண்டிய பெயர்களாகவும் மிகுதியாக அமைகின்றன. சான்றாக அனுராதபுரம் பற்றி நோக்கலாம்.

'அனுராதபுரம் என்ற பெயர் அனுவ என்ற சிங்களப் பெயரில் இருந்து வந்தது என்று சொல்வதுண்டு. அனுவ என்றால் 90 என்று அர்த்தம். சிங்களவர் இனத்தையே நிறுவிய விஜயனின் சீடரான அனுராதாவினால் இந்த ஊர் ஸ்தாபிக்கப்பட்டதாகச் சொல்லுகிறார்கள். சில சந்ததிகளுக்குப் பிறகு, இங்கே அனுராதா என்ற பெயரில் குடியிருந்த பெருமகன் ஒருவருக்கு நிறைய கிராமங்களை இந்தப் பகுதியில் அரசன் மானியமாகக் கொடுத்தானாம். அதனால் அனுராதபுரம் என்ற பெயர் ஏற்பட்டதாகவும் கூறுகிறார்கள்.'[46]

ஆட்பெயர் என்ற நிலையில் இவ்வாறு பெயர்க்காரணம் சுட்டப்பட, அனுராதபுரம் எந்த அடிப்படையில் பெயர் பெற்றது என்ற கருத்தினை 'ஈழ நாட்டு இடப்பெயர்களில் தமிழின் ஆளுமை' என்ற தமது கட்டுரையில், தி. க. இராசேசுவரன் என்பவர் சுட்டுகின்றார்.

'இப்பட்டினம் பழைய நாட்களில் பெரிய நகரமாகவும் விளங்கியுள்ளது, பல தமிழ் அரசர்கள் இங்கு இருந்து ஆட்சி புரிந்துள்ளனர். புத்த மதத்தினரின் புனித யாத்திரைத் தலங்களில் இதுவும் ஒன்று, மகிந்தனும் அவன் தங்கை சங்கமித்திரையும் புத்தகயாவிலிருந்து புனித வெள்ளரசங் கொம்புகளை எடுத்து வந்து இங்கே நாட்டினர். இவ்விடத்தில் அவ்வரசு

45. காரைநகர் மான்மியம்—ப. 55.
46. இலங்கைப் பயணக்கதை—ப. 37

இன்றும் இருக்கிறது... 'அனுராதா' என்ற அரசன் பெயரால் இந்நகருக்கு அனுராதபுரம் என்னும் பெயர் வந்தது என்பர். இது பொருத்தம் உடையதாயில்லை. பறங்கி வரலாற்று ஆசிரியர், கியூரோஸ் சுவாமியார், '90 அரசர் ஆண்ட, மாளிகை என்ற கருத்திலே தான் இது 'அணுராசபுரம்' எனப் பட்டது என்பர். இது நெடுங்காலமாகத் தமிழர் வழங்கி வரும் பெயர். சிற்பவேலைகளில் மிகவும் நுணுக்கமான அணு, பரமாணு, தேர்த்துகள் (மானசாகரம் என்னும் சிற்ப சாத்திர நூலில் இவை பற்றி விவரிக்கப்படுகிறது) என்ற அளவைகள் கொண்ட சிற்ப முறையில் அமைந்த இரதங்கள் (இரதக் கோயில்கள்) அமைந்த காரணத்தால் அணுரதபுரம் என்னும் பெயரே ஏற்றுக்கொள்ளக்கூடியது. அந்நாளில் சிறந்த சிற்பி கள் ரதக்காரர் (தேரர்) என்று அழைக்கப்பட்டனர். கோயில் வகைகளில் குகைக்கோயில், கற்கோயில், தேர்க்கோயில் எனப் பலவகையுண்டு. அவற்றில்தேர்க் கோயில்கள் (இரதக் கோயில்) பலஅ நுராதபுரத்தின் கண்ணே இருந்தன.இவ்விடத்துப்பழையச் சிவன் கோயில் ஈசனின் பெயரும் அனுரேசர் ஆகும். இதன் பழைய நகரில் தமிழர்களின் பண்பாட்டுச் சின்னங்கள் பல உள, என எழுதிச் சொல்கின்றார். வரலாற்றுப்பார்வையான இக் கருத்தின் உண்மை மேலும் ஆய்வுக்குரியது. தமிழகத்தில் மன்னர்கள் அல்லது நகரை அமைத்தவர்கள் பெயரால் ஊர்கள் பெயர் பெறல் காணப்படுகின்றது. இது போன்று, செயற்கையாக உருவாக்கிய கோயில் அதன் பகுதிகள் பெயரால் ஊர்கள் பெயர் பெற்றமையும் உண்டு. மேலும் 'சுரக் கோயில்' என்றதொரு பெயரின் விரிவாகச் சக்கரக் கோயில் என்பது சுட்டப்பெறுகிறது. எனவே இரண்டு நிலையி லும் இப்பெயர்க் காரணங்கள் உண்மையாகும் நிலையில், இரண்டின் உண்மை மேலும் ஆயப்பட்டு, உண்மை வலியுறுத்தப்பட வேண்டிய நிலை அமைகிறது.

'இலங்கையில் தமிழ்ப்பண்பாடு' நூல் தமிழருக்கும் இந்நகருக்குமுரியத் தொடர்பை இனங்காட்டுகிறது.[47] சிங்கள மொழியில் காணப்படும் மிகப்பழைய கல்வெட்டு ஒன்று, பிராமியின் மிகப்பழைய எழுத்து வடிவத்தில் பொறிக்கப் பட்டுள்ளது. அது, அனுராதபுரத்தில் அக்காலத்தில் இருந்த தமிழரின் மண்டபம் ஒன்றைச் சுட்டுகிறது. அங்குத் தமிழர் கள் ஒன்றாகக் கூடிக்கலந்து அளவளாவுவராம்.

47. இலங்கையில் தமிழ்ப்பண்பாடு -ப - 44.

அநுராதபுரம் போன்று இரண்டு காரணிகள் சொல்லப் படும் பெயராக மாவிட்டபுரம் அமைகின்றது. ஆட்பெயரா அல்லது செயற்கை அமைப்பா என்ற வினா போன்று, இவண், ஆட்பெயரா அல்லது புராண நம்பிக்கையா என்ற கருத்து அமைகிறது.

'உக்கிர சிங்கராஜன் மாருதப்பிரவாக வல்லியுடன் வந்த தளபதியாகிய மகாவிட்டன் என்பவனை, அக்கோயிலை நடத்தும் சர்வாதிகாரியாக்கி, மாவிட்டபுரமென இப்போது வழங்கும் இடத்தில் இருத்தினான்' என்ற எண்ணம் மகா விட்டன் காரணமாக 'மகாவிட்டபுரம்' மருவி, மாவிட்டபுரம் ஆயிற்று என்ற கருத்தைத் தருகின்றது.[48]

ஆயின் மாருதப்பிரவாக வல்லியே தனக்குக் குதிரை முகம் நீங்கிய இடம் என்ற காரணத்தால் கோயிற்கடவை என்னும் இடத்திற்கு மாவிட்டபுரம் எனப்பெயர் சூட்டினாள் எனவும் கூறப்படுகிறது. (யாழ்ப்பாண வைபவமாலை — ப. 19)[49] எனவே இரண்டு செய்திகளுமே மாருதப் பிரவாக வல்லியுடன் தொடர்பு கொண்டமை, இவர் சார்ந்த வரலாற்றுடன் மீண்டும் இவ்வூர்ப்பெயரை ஆய்வு செய்யின் உண்மை விளங்க லாம்.

**ஆட்பெயர்க் கூறுகள்**

தமிழக ஊர்ப்பெயர்கள் நூல், ஆட்பெயர்க் கூறுகளைச் சில நிலைகளில் பகுத்து ஆராயலாம் என்று சுட்டி, ஆய்கின்றது. 1. ஆடவர் பெயர்கள் 2. மகளிர் பெயர்கள். 3. சாதிப்பெயர் கள். 4. தொழிற் பெயர்கள் 5. உறவுமுறைப் பெயர்கள் என்ற பெரும் பிரிவுகளையும், ஆடவர் மகளிர் குறிக்கும் பெயர்கள், உறுப்புப் பெயர்கள். பருவ அடிப்படையில் எழுந்த பெயர்கள் நினைவுப் பெயர்கள் போன்றவற்றை இணைத்தும் காணலாம் என்ற கருத்தின் அடிப்படையில் இலங்கை ஊர்ப்பெயர்களைத் தமிழகத்துடன் இணைத்து ஆராய, சில எண்ணங்கள் தெளிவா கின்றன.

தமிழக ஊர்ப்பெயர்கள், இவை குறித்த மிகுதியான பெயர் களைத் தருகின்றன. இலங்கையில் மிகுதியாகக் காணப்பட வில்லை எனினும் ஓரளவுக்கு இவையனைத்தையும் காணக்கூடு கின்றது. ஒத்த மன உணர்வு என இதனைக் கொள்ளலாம்.

---

48. யாழ்ப்பாண சரித்திரம் — ப. 5.
49. இலங்கை இடப்பெயராய்வு 1 - ப — 58.

தனித்தனியே இவையனைத்தையும் நோக்க துல்லியமான எண்ணங்கள் கிடைக்கவழியுண்டு.

**ஆடவர் பெயர்**

ஆட்பெயர், தெய்வப்பெயர் என இருபிரிவுகளாக ஆடவர் பெயர்களைப் பிரிக்கலாம். ஆட்பெயர், சாதாரண மனிதர் பெயர், மன்னர் அல்லது ஆளுவோர் பெயர், தலைவர் பெயர், வீரர் பெயர் என மேலும் வகுக்கலாம். தெய்வப் பெயர்கள், தெய்வங்கட்கு மட்டுமல்லாது, பின்னர் மக்களும் அப்பெயர் கொண்டு அழைக்கப்பட்டனர்; படுகின்றனர். ஆகவே ஆழமான ஆய்வே துல்லியமான பகுப்பிற்கு வழிகோலும் என்ற நிலையில், காணப்படும் சில ஆடவர் பெயர்களை இவண் எண்ணலாம்.

இரவிபுதூர்—கு
ஏகாம்பர புரம்—நெ
விஜய ரெகுநாதபுரம்—திரு
ஆதிகேசவபுரம்—தஞ்
உப்பிலி பாளையம் – கோ
ஹரிராஜபுரம்—தென். ஆ.
அண்ணாமலைப்பட்டி—சே
அரிச்சந்திரபிள்ளை தாங்கல்—வட. ஆ.
முனியன்தாங்கல்—செங்
சந்திரன் குளம்—இராம
பாலகிருஷ்ணபுரம்—மது

இலங்கையை நோக்க, குறைந்த பெயர்கள் தாம் காணக் கிடைக்கின்றன.

அதிரன் புலம் (யாழ்)
ஆறுமுகத்தான் குடியிருப்பு
உசன் நயினார் எல்லை
காங்கேசன் துறை (யாழ்)
காததான் குடியிருப்பு (மட்டக்)
கனகராயன் குளம்
சடையன் தளவாய்
சிறட்டையன் குடா (மட்டக்)
தொண்டமானாறு
நயினா தீவு
நாதனை (மட்டக்)

மும்முடிச் சோழ மண்டலம், நாரந்தானை (யாழ்)வீரப்ப ராயன் குறிச்சி (யாழ்) ஜனநாதபுரம் வேலம்பரவை (யாழ்) வேலனை (யாழ்) போன்ற பெயர்கள் ஆடவர் பெயர்க்கூறுக ளாக அமையலாம் என்ற எண்ணம் சில அறிஞர்களின் எண்ணம் கொண்டு உணரக் கூடியதாக அமைகிறது.

இறை சார்ந்த, சமயஞ் சார்ந்த பெயர்களாக,
இராவணன் வெட்டு, இராமநாதபுரம்
உருத்திர புரம்
படுவான்கரை
முன்னேச்சுரம் (முனீச்சுரம்)
வீமன் காமம் (யாழ்)
கன்னன் குடா (மட்டக்)
ஸ்கந்தபுரம்— (யாழ்)

போன்றவற்றை எண்ணக்கூடுகின்றது.

ஆட்பெயர்கள் இறைப்பெயர்கள் குறித்து அறிஞர்களும் கருத்துத் தெரிவித்து உள்ளனர். சிலவற்றை இவண் காணலாம்.

அதிரன் புலம், நில உடைமைகாரர் என்ற முறையில் அமைந்த பெயராக இருக்கலாம். உசன் நயினார் எல்லை, உசன் என இன்று மருவி நிற்கிறது. இவை போன்றன 'உடைமை' காரணமாகப் பெயர் பெற்ற குடியிருப்புப் பகுதி களாக அமையலாம். காத்தான். கனகராயன், சடையன், சிறட்டையன்,நயினா, நாதன், வீரப்பராயன், வேலன் போன்ற பெயர்களையும் நாம் ஆட்பெயர்களாக எண்ணுதல் இயலு கிறது. ஆறுமுகத்தான் முருகனின் இன்னொரு பெயராக அமைகின்ற நிலை எண்ணுதற்குரியது.

வேலணை, நாதணை என்பன நாராயணன் தானை, வேலாயுதன் தானை என்பதன் மரூஉ என்பர்.

அடியார்க்கு நல்லார்க் குளம் பற்றிய எண்ணமாக, குண பூஷண சிங்கையாரியன் அடியார்க்கு நல்லான் என்னும் பண்டித சிரோமணியை வரவழைத்துத் தனக்கு முதல் மந்திரி யாக்கினான். அம்மந்திரியால் ஊர்கள் தோறும் குளங்களும் பாடசாலைகளும் அறுபத்து மூன்று நாயன்மார்க்கும் ஒரு மடாலயமும் அமைப்பித்தான். மந்திரி தன் பெயரால் ஒரு குளமும் இராசா பெயரால் ஒரு குளமும் அமைப்பித்தான்.

அறுபத்து மூவர் மடமிருந்த இடம் நாயன்மார்கட்டு என வழங்குகிறது. இராசாவின் குளம் ஆரிய குளமென வழங்குகிறது. அடியார்க்கு நல்லார் குளம் இன்றும் அவ்வாறே வழங்குவதோடு கன்னாதிட்டிக் குளம் எனவும் வழங்கப்படுகிறது.[50]

காங்கேயன் துறை இலங்கையின் வடபகுதியில் உள்ளது. இதில் அமையும் 'காங்கேயன்' என்ற பெயர் ஆட்பெயர்க்கூறு என்பது தெளிவாக அமைகிறது. ஆயின் இது ஆட்பெயரா இறைப்பெயரா என்பதில் அறிஞர் கருத்து வேற்றுமை கொண்டுள்ளனர்.

யாழ்ப்பாண சரித்திரம் நூலாசிரியர் ஆ. முத்துத்தம்பி பிள்ளை 'மார்த்தாண்ட சிங்கை ஆரியனுக்குப் பின் அவன் மகன் குணபூஷண சிங்கையாரின் அரசு கைக்கொண்டான். அவன், காங்கேயன் என்னும் போர் வீரனை....தனது சேனைகட்கெல்லாம் அதிபதி ஆக்கினான்... காங்கேயன் என்னும் சேனாபதி இருந்தவிடம் காங்கேயன் துறை எனவும் வழங்குகிறது' என்கிறார்.[51]

தன்னுடைய அடியார்க்கு நல்லார் வரலாற்று ஆராய்ச்சி நூலில்,[52] மேற் குறிப்பிட்ட செய்தியையியம்பி, 'காங்கேயன் துறை இலங்கையின் வடபகுதியில் உள்ளது. இது காங்கேயன் என்னும் ஒருவன் இருந்த இடமென்பது பிறவாற்றானும் பெறப்படுகின்றது. கொங்கு மண்டல சதகத்திலும் இத்தகைய இடங்கள் பல வருகின்றன. அவற்றில் காங்கேயன் இருந்த இடம் காங்கேயம் எனவும், அது நகரத்தோடு சேர்ந்து காங்கேய நகரம் எனவும். அது நாட்டோடு சேர்ந்து காங்கேய நாடு எனவும் வழங்கப்பெற்றுள்ளன என இச்சதகத்தாற் தெரிகிறது. இவ்வாற்றால் மேலே காங்கேயன் இருந்த இடம் காங்கேயம் என்றேனும், காங்கேய நாடு, காங்கேய நகரமென்றேனும் இராமல், காங்கேயன் துறை என்று குறிக்கப்படல் எவ்வாறு பொருந்தும் எனவும் அறியத் தக்கது. ஆயின் இக்காங்கேயன் இருந்த இடம் அவ்வனம் நாடாகவேனும், ஒரு நகரமாகவேனும் இல்லாமல் ஒரு துறையாக இருந்தமையின்

50. யாழ்ப்பாண சரித்திரம்—ப. 27.
51. யாழ்ப்பாண சரித்திரம்—ப. 27.
52. அடியார்க்கு நல்லார் வரலாற்று ஆராய்ச்சி—ப. 87.

காங்கேயன்துறை என வழங்கப் படுவதாயிற்று. எனவே மேலே காட்டிய வரலாற்றில், 'காங்கேயன் என்னும் சேனாபதி இருந்த இடம் காங்கேயன் துறையாயிற்று' என்னும் கூற்று உண்மையையே அரண் செய்து நிற்பதாகும், என்ற கருத்து அமைகிறது. மேலும் 'பெரிய மனத்துள்ளார் வரவொடு காங்கேயன் துறைப்பெயர்க்கு ஊர்க்கதை யுற்பத்தியும் காட்டப்படுவதாயிற்று. உண்மையில் அது காங்கேயன் சீமா (மாவிட்ட புரத்தில்) காங்கேயன் கலட்டி (தைட்டியில்) எனும் இடங்களுக்களுக்கிடையில் உள்ளதாதலால் ஓர் அதிபன், பெயரோடேயே சம்பந்தப்பட்டதாதல் வேண்டும் என்பது ஒருதலை என வணசுவாமி ஞானப்பிரகாசர் அவர்களும் கூறினார்கள்' என்ற கருத்தையும் இந்நூலாசிரியர் தெரிவிக்கின்றார்.

ஆயின் யாழ்ப்பாண வைபவமாலை நூல், இப்பெயருக்கும் புராணச்சார்பு அமைத்து, 'காங்கேயன் என்னும் விக்கிரகம் இறக்கப்பட்ட துறைமுகமானமையின் காங்கேயன் துறைமுகமாயிற்று என்றுஅமைத்துள்ள கருத்து மீண்டும் ஆய்விற்குரியது. முருகனுக்குக் காங்கேயன் என்ற பெயர் உண்டா என்பது நோக்கத்தக்கது.

தக்ஷிண கைலாசமான்மியப்படி சூரசம்காரம் முடிந்தபின்பு கந்தவேளும், அவர் பரிவாரங்களும் கதிர்காமம் நோக்கி வரும் வழியில் கப்பலேறி, துறையில் வந்திறங்கிய இடமே காங்கேயன் துறையாகும் எனவும் பெயர் விளக்கம் கொடுக்கப் படுகிறது.

தன்னுடைய இலங்கை இடப்பெயர் ஆய்வு நூலில், கலாநிதி, இ. பாலசுந்தரம், இப்பெயர் குறித்து விளக்கம் தந்துள்ளார்.

'மாருதப் பிரவாகவல்லி, தன் குதிரைமுகம் நீங்கியதன் கைமாறாக, மாவட்ட புரத்தில் கோவில் கட்டுவதற்கு வேண்டிய பொருட்களைத் தந்தையாகிய சோழ மன்னனிடம் இருந்து வருவித்தாள். அப்பொருட்களைக் காங்கேயன் என்பவன் கப்பலில் கொண்டு வந்து கசாத்துறை என்ற இடத்தில் இறக்கினான். காங்கேயன் இறங்கிய துறையான

தன்மையால் இத்துறை அன்று முதல் காங்கேயன் துறையாயிற்று.'

தவிர காங்கேயன் துறைக்கு முன்னயை பெயர் கசாத்துறை என்பதாக இவ்வாசிரியர் இயம்புகின்றார்.

'பண்டைநாளில் காங்கேயன் துறை கசாத்துறை என வழங்கிற்று. இங்கு இருந்து புத்த கயாவுக்குச் சென்றமையால் இத்துறை கயாத்துறையெனப் பெயர் பெற்று பின்பு, அது கசாத்துறை என மருவிற்று என்றும் கூறப்படுகிறது.[53]

இக்கருத்துகள் அனைத்தையும் நோக்க, புத்தமதம், சைவமதம் இரண்டின் செல்வாக்கு காரணமாக இரண்டு நிலையிலும் பெயர்க் காரணம் இத்துறைக்குக் கொடுக்கப்பட்டு ஊர்ப்பெயர்க் காரணமாக அமைகின்றது. ஆயின் புத்தமதப் பெயரை மாற்றி, சைவப்பெயரை வைக்கும் நிலையில், உறுதியாக அது வரலாற்றுச் சிறப்பு மிக்க அல்லது தாக்கம் மிக்க செய்தியாக அமைந்திருக்க வேண்டும். ஆயின் எந்தவித குழப்பமும் இன்றி, இயல்பாகப் புத்தமதச் செல்வாக்குடன் வைக்கப்பட்ட ஒரு பெயர், சைவமதச் சார்புடையதாக மாற்றம் பெறுவது மீண்டும் சிந்தனைக் குரியதாக அமைகிறது. அப்படிஎனில் கயாத்துறை, ஓர் தலைவனால் அவன் இருந்த இடம் என்ற நிலையில் மாற்றம் பெறுதல் வரலாறுகாட்டும் உண்மை என்ற நிலையில், இப்பெயர் ஆட்பெயராக இருத்தலே பொருத்தமானதாக அமைகிறது. மேலும் வரலாற்றுத் தெளிவுகள் இக்கருத்துக் கட்குத் தெளிவு தரலாம்.

காங்கேயன் துறை இன்று காங்கேசன் துறை என வழங்கப்படுகின்றது.

தொண்டைமானாறு பற்றி ஈழத்து இலக்கியங்கள் சில எண்ணங்களைத் தருகிறது.

'பொன்னுயர் ஈழநாட்டில் பொருந்திய வடபால் யாழூர்
மன்னிய விந்து வாரி மணிக்கரை வந்து சேர

53. இலங்கை இடப்பெயர் ஆய்வு–1—ப—10

உன்னிய செழுமை யாற்றி ஒளிமயிலழக னாரின்
சொன்னல முழங்க ஓடும் தொழுவல்லியாறு சூழ்ந்தே'
(ஆற்றுப்—1)

'தாவலை வல்லி யாற்றின் சார் நிலம் தன்னை யாண்ட
கோவெனும் தொண்டைமானக் குரை கடல் நாட்டை-
கொள்ளத்
தீவினைபுரிந்த வாற்றால் தெளி நன்னீர் யாறு பின்னர்த்
தூவல்லி நாம மாறித் தொண்டை மானாறாயிற்றே'
(ஆற்றுப்—6)

ஈழத்தில் அமைந்த வல்லியாறு பின்னர் தொண்டைமானாறு ஆக, ஆற்றுப் பெயர் ஊருக்கும் ஆனதையும், ஸ்ரீ. செல்வச் சந்நிதிக் கந்தன் திருத்தல புராணம் உரைக்கிறது.

ஆற்றினோர் குணதிசைக் கண் அமரர்கள் நாளும் பேணும்
தோற்ற மிக்கிலங்கு பூங்கா சூழ்தரு வளமிகுந்து
நாற்றிரு மறைதுதிக்கும் நலமுயர் பதியாம் நாமம்
ஏற்றிடும் தொண்டைமானாறென நனி பொலிந்ததன்றே.
(ஆற்றுப்—7)

இதனைப் பற்றி யியம்பும் யாழ்ப்பாண சரித்திரம், 'யாழ்ப்பாணம் உருவாக்கப்பட்ட போது அதன் பின்னர் தொண்டைமானின் மரக்கலங்களும் வந்தன. உப்பேற்றும் பொருட்டு ஒரு கால்வாயும், மரக்கலங்கள் தங்குவதற்கு ஒரு துறையும் அவன் அனுப்பிய சனங்களால் அமைக்கப்பட்டன. தொண்டைமான் ஏவலாளரால் அமைக்கப்பட்ட கால்வாய் தொண்டைமானாறு என இன்றும் வழங்குகிறது.[54]

க.த.திருநாவுக்கரசு தம் நூலில்,[55] முதலாம்குலோத்துங்கச் சோழன் கி.பி. 1070 இல் சோழப் பேரரசனான். சிங்களவர் ரோகணத்திலிருந்து தங்கள் அரசகுமாரனாகிய விசயவாகு என்பவனை, அழைத்து வந்து கி. பி. 1073-இல் அவனுக்கு முடிசூட்டி இலங்கை முழுவதற்கும் அவனே அரசன் என்று அறிவித்தனர். அங்கிருந்த சோழரின் படைக்கும் சிங்கள அரசனுக்கும் பெரும் போர் நடந்தது. இறுதியில் அவ்வரசனே வெற்றி பெற்றான். பிறகு சோழ நாட்டிலிருந்து சென்ற

54. யாழ்ப்பாண சரித்திரம்—ப. 3
55. இலங்கையில் தமிழர் பண்பாடு—ப. 80

பெரும் படை ஒன்று, அனுராத புரத்தில் விசயவாகுவைத் தோற்கடித்தது. அந்நகரைச் சோழ நாட்டுப்படை கைப்பற்றிக் கொண்டது. அப்படைக்குத் தலைவனாகச் சென்றவன் கருணாகரத் தொண்டைமான் என்ற மாவீரனவான். அவன் கைப்பற்றிய பகுதியில் ஓர் ஆற்றை வெட்டினான். இன்றும் அது கருணாகரத் தொண்டைமானாறு என்ற பெயரால் வழங்கி வருகிறது' என்றும் சுட்டுகின்றார்.

மும்முடிச் சோழமண்டலம் சோழ அரசன் இராசராசன் இலங்கையை வென்று, தன் முடிக்கீழ் கொணர்ந்த நிலையில் தன் வெற்றிச் சிறப்பை யுணர்த்தும் பொருட்டு வைத்த பெயராக அமைகிறது.

இதனைப்போன்று அதுவரையிலும் இருந்த அனுராத புரத்தைத் தலைநகர் நிலைபிலிருந்து மாற்றி, பொல நறுவையைத் தலைநகர் ஆக்கி, அதற்கு ஜனநாதமங்கலம் எனப்பெயர் சூட்டியுள்ள தன்மையை வரலாறு தெரிவிக்கிறது. ஜனநாதன் என்ற தனது பட்டப்பெயரை, நகருக்கு அமைத்துள்ள தன்மையைக் காண்கின்றோம். ஆயின், இவ்வாறு அரசர்கள் சூட்டிய பெயர்கள் மக்கள் வழக்கில் மிகுதியாக இடம் பிடிக்காத நிலையில், அவை வழக்கில் அமையாது அக்காலகட்டத்து வரலாற்றுக் குறிப்பில் மட்டுமே அமைந்து பின்னர் மறைந்து விடுவதைத் தமிழக ஊர்ப்பெயர் களும் மிகுதியாகக் காட்டுகின்றன.

ஓரளவிற்கு ஆட்பெயர்களாக அமையலாம் என்ற முடிவற்கு மேற்குறித்த பெயர்கள் விளக்கம் தந்ததைக் கண்டோம்.

இறைப் பெயர்கள் எனநோக்க, சைவச்சார்பு பெயர்களே மிகுதியாக அமைகின்றன. சிவபூமி என்ற பெயர் இவண் மீண்டும் ஒருமுறை உறுதிப்படுகின்றது.

இராமநாதபுரம், உருத்திர புரம், சிவனொளி பாதமலை, நஞ்சுண்டான் கரை, திருக்கேதீச்சரம், முனீச்சரம், நகுலேச்சுரம், நாயன்மார்கட்டு போன்றன சிவன் தொடர்பைக் காட்டும் பெயர்களாக அமைகின்றன.

கதிர்காமம், கதிரமலை, கந்தரோடை, கந்தன் வெளி, குமரபுரம், சித்தாண்டி, சித்தாண்டிக் குடி, ஸ்கந்தபுரம்,

போன்றன முருகன் பெயரை, அடிப்படையாகக் கொண்டன. கணேச புரம், இலங்கையில் விநாயகர் வழிப்படப் படும் நிலையில், பிள்ளையார்த் தொடர்பாகப் பெற்ற பெயராக அமைதல் கூடும்.

மட்டக்களப்பில் மட்டக் களப்பு வாவியின் இருபுறமும் அமையும் எழுவான் கரை, படுவான் கரை, சூரியன் உதிக்கும், மறையும் திசை பற்றிய எண்ணத்தில் அமைந்தன.

இந்தியாவில் தோன்றிய புத்தமதம் இலங்கையில் இன்று வரை நிலைத்துக் காணப்படும் நிலையை அங்கு மக்களுடன் தொடர்பு கொண்டு விளங்கும் புத்த மதத்தின் தன்மை மட்டும் இயம்பவில்லை, புத்தர் கோயிலடி என்ற பெயரும் விளக்கி நிற்கின்றது. இராவணன் வெட்டு, மாரீசன் கூடல், சீதாவாக்கை என்பனவும் புராணச்சார்பு காட்டுவன. இராவணன் வெட்டு, திருகோணமலையுடன் இராவணன் கொண்டிருந்த தொடர்பில் பிறந்த கதையாக அமைந்து ஊர்ப்பெயர் விளக்கம் தருகிறது எனினும் சாதாரணமாக மலையில் காணப்பட்ட வெட்டுக்கு இவ்வாறு விளக்கம் தருவது தமிழகம் போன்று, ஊர்ப் பெயர்க்குப் புதிய கற்பனை படைத்தலை ஒத்து அமைகிறது. மாரீசன் கூடல் ஊர்ப் பெயரும்ஆய்வுக்குரியது.

பெருமாள் கடவை, ஊர்ப்பெயர் திருமாலோடு சார்த்திச் சுட்டப் பெறுகிறது.[56] பொதுவாக இலங்கையின் வரலாறு, அதனைச் சிவபூமியாகக் காட்டுகின்றதே தவிர, பெருமாள் வழிபாடு இருந்ததாகத் தெரியவில்லை. ஆயின் பிற்காலத்தில் குடியிருந்த தமிழர், வைணவராயிருந்த நிலையில், விஷ்ணு கோயில் அமைத்து வழிபட்டு இருக்கலாம். எனினும் கோயில் இன்று பெரும்பாலும் இல்லாமை சுட்டத் தக்கது. பெருமாள்

---

56. கந்தரோடைப் பகுதியில் அளவெட்டியில் பெருமாள் கடவையுள்ளது. பெருமாள் = விஷ்ணு பண்டை நாளில் இங்கு பெருமாள் கோயில் இருந்திருக்க வேண்டும். வடக்கு நோக்கிய கந்தரோடைப் பெரும்வீதி இக்கோயில் இருந்த இடத்தைக் கடந்த போது இவ்விடம் கோயிற் பெயராற் பெருமாள் கடவை எனப் பெயர் பெற்றது...கந்தரோடை இராச்சியத்தின் வடக்குக் காவலூராகப் பெருமாள் கடவை இருந்திருக்கலாம்.
இலங்கைஇடப்பெயராய்வு—1—பக் 53, 54

வழிபாடு பற்றிய பிற எண்ணங்கள் கிடைப்பின் இது உறுதிப் படலாம். ஏனெனில் 'பெருமாள்' ஆட்பெயராக இருக்கவும் வாய்ப்புண்டு என்ற நிலையில் இக்கருத்து மேலும் ஆய்விற்குரிய தாக அமைகிறது.

பீமன் காமம், கன்னன்குடா என்ற பெயர்களும் இத்தகைய ஆய்விற்குரியனவே. தொடர்பாக கலாநிதி. இ. பாலசுந்தரம், பாண்டிருப்பு, நகுலேஸ்வரம் போன்ற ஊர்ப்பெயர்களையும் சுட்டுகின்றார்.[57]

இப்பெயர்கள் பாண்டவர்களையும், பாரதக் கதையையும் நினைவுபடுத்தினாலும் இப்பெயர்களை இவ்வூர்கள் பெற்றமைக்குரிய காரணங்கள், சில செய்திகளைச் சுட்டலாம். பாண்டவர்கட்கும் இவ்வூர்ப்பெயர்க்கும் தொடர்பு உண்டா? அல்லது இவை ஆட்பெயர்களா என்பன வெளிப்படலாம்.

வீமன் காமம் பற்றிய தமது கருத்துரையில் இது சிங்களப் பெயர் என்ற எஸ். டபிள்யூ குமாரசாமியின் கருத்தை மறுத்து கலாநிதி பாலசுந்தரம், தமிழ் பெயராகிய வீமன் ஆட்பெயர், 'வீமன் + கமம் — வீமன் காமம் ஆயிற்று' எனவும் 'இதன் அயலேயுள்ள மயிலம்பையில் 'கூத்திவளவு' என்ற குறிச்சிப் பெயர் வழக்கில் இருப்பதும், பண்டை நாளில் இங்குப்பாரதக் கதையோடு தொடர்புடைய கூத்துகள் ஆடப்பட்டமையும் 'வீமன் நாடகம்' அல்லது வீமன் என்ற கதாபாத்திரம் முதன்மை பெற்ற நிலையும் வீமன் காமம் என்ற பெயர் ஏற்படக் காரணமாக இருந்திருக்கலாம்' எனவும் கருத்துத் தெரிவிக்கின்றார்.[58]

இந்நிலையில் இப்பெயர்கள் அனைத்தும் மகாபாரதக் கூத்துகளோடு தொடர்பு கொண்ட நிலையில் எழுந்த பெயர் களாக இருத்தலுக்கு வாய்ப்புண்டு.

ஆயின், முன்பு சுட்டப்பட்ட இராமாயணக் கதையின் பாத்திரங்கள் தொடர்பாக ஊர்ப்பெயர்கள் காணப் படுதலுக் குரியகாரணம் இதனைப்போன்று அமையுமா? என்பது மேலும் சிந்தித்தற்குரியது. உதாரணமாக இராவணன் வெட்டு, சீதா வாக்கை, போன்ற பெயர்கள் சுட்டத்தக்கன. திருகோண

---

57 ,, — ப.24

58. இலங்கை இடப்பெயராய்வு — பக் - 25, 26.

மலையில் காணப்படும் இராவணன் வெட்டு, கண்டிமலைய கத்தில் காணப்படும் சீதா வாக்கை எவ்வாறு பெயர் பெற்றன என்பது மேலும் ஆய்விற்குரியது. இராவணன் வெட்டு, இராவணன் கதையோடு தொடர்புடையதாகச் சுட்டபடினும், சீதாவாக்கைபெயர்க்காரணம் மேலும் ஆய்விற்குரியது.

முருகனுடன் தொடர்புபடும் நிலையில் இவ்வூர்ப் பெயர் 'கார்த்திகேய கிராமத்தின்' மரூஉ என்ற கருத்து அமைகிறது.

'தெலியன் கே கலே' அதாவது தெய்வீகமான காடு என்று இதற்குப் பெயர். மலை சாதியினர் இங்கே வந்து வசிக்கிறார்கள். இங்கிருந்து நான்கு மைல்கள் தொலைவில் உள்ள காட்டில்தான் வள்ளியம்மை குழந்தையாக நம்பிராஜனால் கண்டெடுக்கப்பட்டார். அழகான பெண்ணாக வளர்ந்த அவரை மணம்புரிய முருகன் வேடராக வந்தான்... கடைசியில் தெய்வயானையே இங்கு வந்து தங்கித் தவமும் செய்தாள். முருகன் மனமிரங்கி குன்றத்திலிருந்து இறங்கி வந்து இங்கு இரு தேவியருடனும் வாழ்க்கை நடத்தினான். அதனால் இந்த இடம் 'கார்த்திகேய கிராமம்' என்றழைக்கப்பட்டது. நாளடைவில் மருவி, கதிர்காமம் ஆயிற்று என்பர் மணியன்.[59]

## மகளிர் பெயர்கள்

மகளிர் பெயர்கள் ஊர்ப்பெயர்களில் சிறப்புக்கூறாக அமையும் தன்மையும் தமிழகம் போன்று ஈழத்திலும் அமைகின்றது. எனினும் இலங்கையில் இவை குறைவாகத்தான் அமைகின்றன. மகளிர் பெயர்கள் எனநோக்க இவையும் தெய்வப் பெயரா, மகளிர் பெயரா, தனியே மகளிர் பெயரெனின், எந்த விதத்தில் ஊருடன் தொடர்பு கொண்டிருந்தனர் போன்ற எண்ணங்கள் ஆராயத்தக்கன. இறைக்கும், மகளிர்க்குமுரிய பொதுப்பெயராக அதாவது தெய்வத்திற்குச் சூட்டிய பெயரை மகளிர்க்கும் சூட்டுதல் மரபு என்ற நிலையில் அத்தகைய பெயர்கள் உள்ள ஊர்ப்பெயர்களே இவ்வாறு தெளிவின்றி அமைகின்றன. சில பெயர்கள் சாதாரணமாக மகளிர்க்கு இடப்பெறும் பெயரெனில், அவர்களின் செல்வாக்கும்தகுதியுமே ஆராயத்தக்கனவாக அமையும். இங்கே

59 இலங்கைப் பயணக்கதை—ப—101.

குழப்பமற்ற மகளிர் பெயர்களாக, ஆட்சி புரிந்து அரசியல் தொடர்புடன் காணப்பெறும் பெயர்களை மட்டும் சுட்டலாம். சான்றாக, தமிழகத்தில், மீனாஷிபுரம், பகவதிபுரம், என்பன தெய்வப் பெயராகவும், அதே நிலையில் மகளிர்க்கு இயல்பாகச் சூட்டப்படும் பெயர்களாகவும் அமைகின்றன. ஆயின் ராணி சேதுபுரம், ஜக்கம்மாள் புரம், வெள்ளையம்மா புரம் தெளிவாக அரசியல் சார்புக் காட்டுகின்றன.

இலங்கையில் அம்பாந்தோட்டை, உமையாள்புரம், கனகாம்பிகைபுரம், சரசாலை, மீராஓடை, மீராங்கேணி, யமுனாரி, வவுனியா (பவானிக்குளம்), மாதகல், சீதா வாக்கை போன்ற சில காணப்படுகின்றன. சரசு, மீரா, யமுனா, பவானி, சீதா போன்றன பெண்பாற் பெயர்களாக அமைகின்றன. இவை சிறப்பு காரணமாக ஊர்ப்பெயர்க் கூறாக அமைந்து நிற்றல் புலனாகின்றதே தவிர, பெயர்க் காரணத் தெளிவுபடவில்லை. அம்பாந்தோட்டை, உமையாள் புரம், கனகாம்பிகைபுரம் தெய்வச் சார்புடையவை, 'மாதகல்' என்பதற்குரிய விளக்கம் இவண் சுட்டுதற்குரியது.

'யாழ்ப்பாணக் குடா நாட்டில் வடமேற்கு மூலையில் அமைந்துள்ள கடற்கரையோரக்கிராமமே மாதகல் மது+ஏகல் மாதகல் எனப்புணர்ந்தது என்பர். இந்த மாதுயார் என்பதில் பல்வேறு பட்ட கருத்துகள் காணப்படுகின்றன. தேவநம்பிய தீசன் காலத்தில் இலங்கைக்கு வெள்ளரசுக் கிளையுடன் வந்திறங்கிய சங்கமித்தை ஜம்பு கோளத்தில் இறங்கினாள் என்றும் அதுவே சம்பில் துறை என்ற இடம் என்பதும், மாதகல்துறை இதற்கு அண்மையில் அமைந்துள்ளது என்பதும், ஈண்டு நோக்கத் தக்கன. கண்ணகி வழிபாட்டுடன் தொடர் புடையதாகவும் மாதகல் இடப்பெயர் விளக்கம் கூறப்படுகிறது. மேலும் மணிமேகலை, மாருதப்பிரவாக வல்லி என்போர் வந்திறங்கிய இடமாகவும் இது கருதப்படுகிறது. மாது+கல்— மாதகல் மாது—உமாதேவி, கல் உருவச்சிலை, உமாதேவியின் உருவச்சிலையை வைத்து வழிபட்ட இடம் என்ற பொருளிலும் இப்பெயர் ஏற்பட்டது என்பர்.'[60] இக்கருத்துகள் அனைத்தும் மாது என்ற சொல்லடிப்படையில் அங்கு வந்திறங்கிய அனைத்துப்பெண்களுடனும்தொடர்புபடுத்தப்படுகின்றனவாக அமைகின்றன. ஆயின் மாது+கல் எனில் சிலை இருக்கின்றதா?

60. இலங்கை இடப்பெயர் ஆய்வு—1—ப-66.

வழிப்படப்படுகின்றதா? இருப்பின் யார் சிலை போன்ற நிலையிலும் பிறசான்றுகள் அடிப்படையிலும் நிறுவ முயன்றால் உண்மை வெளிப்படவாய்ப்புண்டு.

**தொழில், சாதி**

உழைப்பில் முதன்மை பெற்ற தொழிலை விடவும் உணர்வு அடிப்படையிலான சாதியே முதன்மை பெற்றவை என்பதைக் காட்டுமாற்றான் அமைகின்றன ஊர்ப்பெயர்கள். தமிழகத்திலும் இலங்கையிலும் கிடைத்துள்ள தொழில், சாதி தொடர்பான ஊர்ப்பெயர்களை நோக்க, சாதி தொடர்பான பெயர் அடைகளே மிகுதியாகக் காணக்கிடைக்கின்றன.

தமிழகத்தில் பெரும்பாலும் அனைத்துச் சாதியினரும் ஊர்ப்பெயரில் இடம் பெறுகின்றனர். அவர்கள் வசிக்கும் இடத்தில் அவர்களின் முக்கியத்துவத்தை நாம் இப்பெயர்கள் வழியே உணர்தல் கூடுகின்றது. காட்டாக, ஆயர்பாடி, வேளூர், செட்டிதாங்கல், ரெட்டியாபாளையம், கவுண்டன் பட்டி, தேவர் குளம், சாம்பவர் வடகரை போன்ற பல பெயர்கள் அமைகின்றன. மேலும் தமிழகத்தில் உள்ள அனைத்துப் பெயர்களையும் நோக்கி, அவற்றைப் பகுதி வாரியாக ஆராயின், எப்பகுதியில் எந்த சாதியினர் மிகுதி; எங்கு எந்த சாதியினர் இல்லை; தமிழகம் முழுவதும் பரவி வாழுகின்ற சாதியினர் யார், எவ்வாறு போன்ற பலவற்றை அறிந்து அதன் வழி தமிழரின் சாதி பரவல் பற்றிய பல எண்ணங்களைக் கண்டறிதல் கூடும். இந்நிலையில் இலங்கையில் உள்ள அனைத்துச் சாதியினரையும் ஊர்ப்பெயர் வழியே தெரிந்து கொள்ளல் இயலவில்லை எனினும், சில எண்ணங்களைப் பெறல் இயலுகின்றது.

அம்பட்டாவத்தை (யாழ்)
அம்பட்டியவத்தை (யாழ்)
எட்டியான் தோட்டை
ஐயங்கேணி (மட்டக்)
கம்மாளன் குளம்
கருணீகர் வாயில் (கரணவாய்) (யாழ்)
குறத்தி சேனை

சம்மான் துறை (மட்டக்)
சம்மான்துறைப்பற்று(மட்டக்)
சான்றாரக் குப்பம்
சுன்னாகம்
செட்டிச் சோலை
செட்டிபாளையம்
செட்டிச்சேனை
துன்னாலை
நாசுவன் தீவு
மறவன் புலவு
மறவன் சேனை
(இராச)முதலியார்வளவு(யாழ்)
வட்டுக்கோட்டை
வடமராட்சி
வண்ணார் பண்ணை
வண்ணார் வளவு
வன்னி நாடு
வன்னி விளாங்குளம்
வன்னிப் பற்று
வன்னியர் குளம்
வேடுவன் கண்டி
நாவிதன் வெளி
பண்டாரவளை
பண்டாரக் குளம்
பண்டாரியா வெளி
பண்ணாகம்
பரவன் குடியிருப்பு
பத்தர்கேணி
பாணந்துறை
பாணமை
பாணன் குளம்
பிள்ளை மடம்
யாழ்ப்பாணம்

இப்பெயர்கள் அம்பட்டன், எட்டி (செட்டி) ஐயன், கம்மாளன், கருணீகர், கொல்லர், சம்பான், சான்றார், சுண்ணர், துன்னர், நாவிதன், பண்டாரர், பரவன், பள்ளர், பத்தர், பாணர், பிள்ளை, மறவன், முதலியார், வடுகர், வண்ணார், வன்னியர், வேடுவர் இங்கே வாழ்ந்ததாகத் தெரிவிக்கின்றன. இவர்களுள் சுண்ணத்தர் தொழில் அறியப்பட்டாலும், இத் தொழிலினர் இன்று இப்பெயரால் சுட்டப்படுகின்றாரா என்பது நோக்கத்தக்கது, பிற அனைவரும் தமிழகத்திலிருந்து சென்று அங்கே வாழ்ந்த மக்கள் என்பது உணரத் தக்கது. இவர்களுள் செட்டியார் வாணிபம் கருதியும் வன்னியர் மறவர் படைத்தொடர்புடன் சென்றிருக்க லாம் என்பதும் உணரக் கூடுகிறது. பிறர் பிழைப்பு கருதியும் பிற காரணங்கருதியும் சென்றிருக்கலாம் என்பது பொருத்த மாகலாம். இடைக்காடு (யாழ்) இடையில் இருக்கும் பகுதி காரணமாக வா அல்லது இடையர்கள் வாழ்ந்த பகுதி என்பதா

என்பதும் ஆய்விற்குரியது. சாதிப்பெயர்களைப் போன்று தொழில் பெயர்களை நாம் தமிழகத்தில் போன்று இலங்கையிலும் மிகுதியாகக் காணக்கூடவில்லை. தமிழகத்தில் ஊர்ப்பெயர் வரலாற்றைப் பண்டு தொட்டுக் காணவும் இவ்வுண்மை பொருத்தமுறுகிறது. தொழில், தொழிலாளர் சிறப்புக் கூறாக அமைந்த ஓர் ஊர்ப்பெயரினையும் நாம் பண்டைக் காலத்திய ஊர்ப்பெயர்களில் காண்பது இயலவில்லை என்ற கருத்து அமையினும்,[61] கொற்கை என்பது கொல்லத் தொழிலின் அடிப் படையில் பிறந்தது என்பர் ஆர். ஆளவந்தார்.[62] எனினும் மிகுதியில்லை. இடைக்காலத்தில் உள்ள பெயர்களிலும் காண்பது இயலவில்லை. கல்வெட்டுகளில் ஒரு சில காணப்படு கின்றன.[63] (தச்சன் தாங்கல், கருமாரச் சேரி) இதனைப்பற்றி யியம்பும்போது, தமிழக ஊர்ப்பெயர்கள் நூல், 'இன்றைய பெயர்களில் சில ஊர்ப்பெயர்கள், சிறப்புக் கூறாகத் தொழில் பெயரால் மாந்தர் சுட்டப்படுவதைத் தருகின்றன. எனவே பின்னர் இறைப்பெயரைச் சுட்டிய தன்மை, குறிப்பிட்ட சாதி யினர் முக்கியத்துவம் பெற்ற தன்மை, போன்ற பலவித செல்வாக்குகளின் வளர்ச்சியில், தொழிலாளரும் அவர்கள் பெற்ற சிறப்பு அல்லது முக்கியத்துவம் காரணமாக, தங்கள் ஊருக்கு அல்லது அவர்கள் வசித்த பகுதிக்குப்பெயர் சூட்டும் தன்மையில் அவர்கள் பெயரைச் சுட்டினரா? என எண்ணிப் பார்க்கலாம்.'' என்ற கருத்தையுரைக்கிறது. இந்நிலையில் சில பெயர்களைத் தமிழகத்தில், காண மிகக் குறைந்த அளவி லேயே இலங்கையில் காணுதல் இயலுகிறது.

தமிழகத்தில் கணக்கர்பட்டு, கொத்தங்குடி, சிலம்பநாதன் பேட்டை, கணியாமூர், கூத்தனூர், கொத்தமங்கலம் (தெ. ஆ.) கொல்லப்பட்டி, வேடசந்தூர், வளையன் குளம், தட்டான் குளம், மணியக்காரன்பட்டி (மதுரை) என இப்பெயர்கள் அமைகின்றன.

இலங்கை எனநோக்க,

கொல்லன் கிணறு, கொல்லன் கவட்டி, கொல்லர் தோட்டம், கூத்தர்சீமா, தச்சகடவை, தச்சம்புரம், தச்சன்காடு,

61. தமிழ் இடப்பெயராய்வு — ப. 130,
62. இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள் — தொகுதி - 1 ப.
63. கல்வெட்டுகளில் ஊர்ப்பெயர்கள் — ப. 18.

தட்டாகடவை, மல்லாகம் போன்ற சில அமைகின்றன. துன்னுதல், பன்னுதல் தொழில் காரணமாக, துன்னாலை பன்னாலை பெயர் அமைந்திருக்கலாம்.[64]

மேலும் இவ்வகையில் காணப்படும் சில ஊர்ப்பெயர்கள் குறிப்பிட்ட சாதி, இனம், நாடு, தொழில், உணர்த்தும் சொற்களையுடையதாக அமையினும், இவற்றின் ஆழ்ந்த ஆய்வே இவற்றின் தோற்றக் காரணத்தைப் புலப்படுத்த இயலும் என்பதைச் சுட்டுகின்றன. சான்றாக,

| | |
|---|---|
| ஆரிய குளம் (யாழ்,) | பண்ணாகம் |
| உசன் (யாழ்) | பளை |
| கண்டபாணத்துறை (மட்டக்) | பழை |
| கண்டியனாறு (மட்டக்) | |

64. ஆலை என்பது தமிழ்ச்சொல், சிங்களச் சொல் என்ற கருத்துகள் ஈழத்தில் உள்ளன.

ஆலை—ஆலமரம் எனவும் பொருள் கொள்ளலாம். ஆலை=நீர் இறைக்கும் பொறி, நீர் வழிந்தோடும் சிறு வாய்க்கால், மழைநீர் வழிந்தோடும் பள்ளமான நிலம், ஆலயம் என்ற பொருள் நிலையில் இடப்பெயர் ஈறாக அமைந்த 13 இடங்கள் யாழ்ப்பாண மாவட்டத்தில் உள்ளன,.........

மேற்காட்டிய சான்றுகளால் சுவாமி ஞானப்பிரகாசர், குமாரசாமி முதலியோர் கூறியவாறு இது சிங்களச் சொல் அல்ல என்பதும்,இஃது திராவிடச் சொல் என்பதும் நிறுவப்படுகின்றன. ஆலைகள் என்பதற்குப் பொறிகள் பொருத்தப்பட்ட சாலை என்ற பொருள் நிலையில் இவ்விடப் பெயர்கள் தோற்றம் பெற்றுள்ளவை என ஆராய்தல் பொருத்தமானதாகும். இவ்வகையில் மரவேலை செய்யப்பட்ட இடம் அரியாலை, பொன்னகை செய்யப் பட்ட இடம்பொன்னாலை, பன்னாலை எனவும், துன்னர் ஆலைகள் இருந்த இடம் அல்லது நுண்ணியத் தொழில் மேற்கொள்ளப்பட்ட இடம் துன்னாலை அல்லது துண்ணாலை... எனவும் பெயர் பெற்றன எனப் பொதுப்படக் கூறலாம்.

64. இலங்கை இடப்பெயர் ஆய்வு –1—பக்—37-38.

கோப்பாய்
குரும்பசிட்டி (செட்டி) யாழ்ப்பாணம்
சாவகன் கோட்டை வேர்க்குத்திக்கடவை
சாவகச் சேரி
சித்தன் கேணி
சீனன் கலட்டி
சோழியபுரம் (சுழிபுரம்)
சோனகன் புலவு
தெல்லிப்பள்ளி
துரை வந்தேறிய மேடு
போன்ற பெயர்களைச் சுட்டலாம்.

சிங்கையாரியன் கட்டிய குளம் ஆரியகுளம் எனப் பெற்றது. (அடியார்க்கு நல்லார் குளத்துடன் தொடர்புடையது இது). 'கண்டியன்' என்பது கண்டிப்பகுதி சார்ந்த ஆட்பெயர் என்ற நிலையில் அமைய வாய்ப்புண்டு. இன்று தமிழகத்தில் ஊர்ப் பெயர் சார்த்தி ஆட்களைச் சுட்டும் மரபு பல இடங்களில் அமைகின்றது. 'மலையாளத்தான்' என பகுதி சுட்டும் மரபும் உண்டு. இந்நிலையில் அங்கும் இம்மரபு இருந்திருக்கலாம். தமிழகத்தில், திருச்சியில் அமையும் மலையாளப்பட்டி மலையாளிகள் வந்து குடியிருப்பு அமைத்துக் கொண்ட காரணத்தால் ஏற்பட்டதாகலாம். சாவகன் கோட்டை, சாவகச்சேரி, சோனகன் புலவு, சாவகர், சோனகர் தொடர்பாக அமைந்த ஊர்ப்பெயராக அமைகின்றன. யவனர்சேரி ஏணிச்சேரியாகத் திகழ்ந்தமையினை ஆர். ஆளவந்தார் தன்னுடைய நூலினுள் சுட்டிச் செல்கின்றார். எனவே சாவகர் வாழ்ந்த பகுதி என்ற நிலையில் இப்பெயர் அமைந்திருக்க வாய்ப்பு உண்டு. (சாவகர் என்பது ஷிராவணர் என்ற சமணமுனிவர் வாழ்ந்த பகுதி என்பர் டாக்டர். ஆர். விஜயலட்சுமி.—நேரில் கேட்டது)

சீனன் கலட்டி சீனர் தொடர்பு காரணமாகலாம்.

சோழியபுரம் இன்று சுழிபுரம் எனப்படுகிற ஊர், சோழ மன்னர்கள் செல்வாக்குக் காரணமாக அமைந்த ஊர்ப்பெயர். இன்று இதனைப் போன்று பல எச்சங்களைத் தமிழகத்தில் காண்கின்றோம். கங்கைகொண்ட சோழபுரம் திரியாமல்

அவ்வாறே இருக்கின்றது. பல்லவபுரம் பல்லாவரமாகத் திரிந்து வழங்குகின்றது.

துரை வந்தேறிய மேடு, வெள்ளைக்காரர்களைத் தமிழகத்தில் **துரையென்று** அழைக்கும் பழக்கம் உண்டு. இதனைப் போன்று இலங்கைத் தமிழர்களும் அழைக்க, அவர்கள் வந்து தங்கிய மேடு பின்னர் **ஊர்ப்**பெயராக அமைந்ததா என்பது எண்ணத்தக்கது.

மேலே குறித்த பெரும்பாலான தொழில்களும், சாதிகளும், இனங்களும் தமிழகத்திற்குத் தொடர்புடையதாக அமைய 'வேர்க்குத்திக்கடவை' என்ற **ஊர்ப்**பெயரில் அமையும் **'வேர்க்குத்தியர்'** என்பது புதுமையாக இருக்கிறது. இதனைப் பற்றியியம்பும் கலாநிதி, சு. பாலசுந்தரம் இக்கிராமம் தற்போது சென்ஜேம்ஸ் என வழங்குகிறது. (வேர்+குத்தி+கடவை) ஒல்லாந்தர் ஆட்சிக் காலத்தில் இப்பெயர் தோன்றியிருக்கலாம். புடவைகளுக்குச் சாயமூட்டுந் தொழிலை யாழ்ப்பாணத்தில் நடத்தியவர்கள் ஒல்லாந்தர். ஒருவகைச் சாயச் செடிகளை வளர்த்து அவற்றின் வேர்களைக் குத்திப் பிடுங்கிக் கொடுப்போர்வேர்க்கொத்தியர் எனப்படுவர். அந்த·வேர்களைப் பெற்று பயன்படுத்திச் சாயம் காய்ச்சுவோர் சேணியர் (சாயக்காரர்) எனப்பெயர் பெறுவர். வேர் குத்தியர் வேர்களைத் தேர்ந்து பிடுங்கிக் கொடுப்பது அவர்கள் கடமை. எனவே தொழிலடிப்படையில் (வேர்க் கொத்தி) வேர்க் குத்திக் கடவை என்ற பெயர் தோற்றம் பெற்றது தெளிவு என்று எழுதிச் சொல்கின்றார்.[65]

பலதொழில்களின் அடிப்படையிலும் பெயர் பெற்ற இலங்கை ஊர்ப்பெயர்கள் படையுடனும் போர்த் தொழிலுடனும் தொடர்புடைய வன்னியர் மறவரையும் சுட்டுகின்றன. மேலும் படை, போர் சுட்டும் பெயர்களையும் கொண்டிடப் படுகின்றன.

சேனைக் குடியிருப்பு
சேனைத் துறை
தளவாய்
படுகாடு

---

65. இலங்கை இடப்பெயராய்வு—ப—54

படையாண்ட வெளி
போரில்லா வெளி

இப்பெயர்கள் மட்டக்களப்புப் பகுதியைச் சார்ந்து அமைதல் குறிப்பிடத்தக்கது. வன்னியர் பற்றிய எண்ணமாக,

'சோழ பாண்டிய மன்னவர்களின் படையெடுப்பில் கலந்து கொண்டு இலங்கை வந்த வன்னியர்கள் வடக்கு இலங்கையிலே செழிப்பான பகுதிகளில் நிலையாகத் தங்கி, கமம் செய்து வாழலானார்கள். யாழ்ப்பாண, சிங்கள மன்னவர்களின் ஆதிக்கம் குன்றிய காலையிற் தாங்கள் வசித்து வந்த இடங்களைத் தாங்களே ஆட்சி செய்யத் தொடங்கினார்கள். அதன் பயனாக வன்னிராச்சியம் கிழக்கு, வடக்கு இலங்கையில் உதயமாகிறது[66] என்ற எண்ணம் வன்னியர்த் தொடர்பை இலங்கையில் காட்டுகிறது. ஆயின், 'கி.பி 435 ஆம் ஆண்டில் குளக்கோட்டன் என்னும் சோழ நாட்டு இளவரசன் கிழக்கு இலங்கையில் இறங்கி, போர் புரிந்து வெற்றி கொண்டு, திருக்கோண மலைக்குச் சென்றான். அங்குக் கோணேசுவரப் பெருமானுக்கு ஆலயம் எழுப்பித்து விழாக் கொண்டாடினான். கோணேசுவரன் கோயிற் திருப்பணி இனிது நடைபெறுவதற்காகக் கழனியுண்டாக்கி, தமிழகத்திலிருந்து வன்னியரை வரவழைத்துக் குடியேற்றினான். இந்த வன்னியர் கால வளர்ச்சியில் சிற்றரசர்களாகக் கிழக்கிலங்கையின் பல பகுதிகளிற் செங்கோல் செலுத்தினார்கள். இவர்களின் வழியினரே இன்று கிழக்கில் வாழும் வன்னியர் ஆகும்.[67] என்ற கருத்துப் போருக்கு முன்னரே வன்னியர்கள் இலங்கைக்கு வந்து தங்கி விட்டதை எடுத்தியம்புகிறது. எனவே வன்னியர் பல காரணங்களின் அடிப்படையில் இலங்கை வந்தனர் என்பதை அறிகின்றோம். அந்நிலையில், அவர்களின் செல்வாக்கு, அங்கு ஆட்சி புரிந்தனர் என்ற நிலையில் மட்டுமல்லாது, அவர் பெயர் குறிக்கும் ஊர்ப் பெயர்கள் நிலையிலும் தெளிவாகின்றது.

### 3. நிகழ்ச்சிப் பெயர்கள்

நிகழ்ச்சிப் பெயர்கள் தமிழக ஊர்ப் பெயர்களில் ஓரளவிற்குக் காணப் படுகின்றன. இவற்றின் தொடர்

66. ஈழமும் தமிழரும்—ப.65
67 ,, 77

நிலையில் நிகழ்ச்சிகள் நடந்துள்ளன என்பது புலப்படு கின்றனவே தவிர, அவற்றின் விளக்கம் புலனாகவில்லை. சான்றாக, தென் ஆர்க்காடு மாவட்டத்தில் அமையும் வினை தீர்த்தபுரம், தாகம் தீர்த்த புரம், மதுரையில் அமையும் குறையர வாசித்தான் மருதன் குடி, குமரியில் உள்ள நன்கூரன் பிலா விளை, பால் கொண்டான் காலனி போன்றபல சுட்டத் தக்கன. இதனைப் போன்று இலங்கை என நோக்க,

சத்துரு கொண்டான்
மாவிட்டபுரம்
வசந்தபுரம்
தர்மபுரம்
கூத்திவளவு
சந்திப்புமால்
சோழியங்கட்டை
தோரணப்புலம்
சூளாவத்தை
தொண்டமானாறு
நிந்தலூர்

போன்றபல அமைகின்றன. சில ஊர்களைப் பொறுத்த வரையிலும் சில வரலாறுகள் சுட்டப்படுகின்றன. சில எண்ணுதற்குரியனவாக அமைகின்றன. சான்றாக, தொண்டை மானாறு, தொண்டைமான் என்ற தமிழகத் தலைவன் தொடர்பானதாகச் சுட்டப்படுகின்றது. கூத்திவளவு கூத்தாடிய மகளிர்க்குக் கொடுத்த நிலமாகலாம். நிந்தலூர் நிவந்தமாக அளிக்கப்பட்ட ஊர் காரணமாக வந்த பெயர் என்ற எண்ணம் தோன்று கிறது. சத்துரு கொண்டான் வெற்றி அடிப்படை யிலும், வசந்தபுரம் மகிழ்வு தரும் குடியிருப்பு என்ற நிலை யிலும், சோழியங்கட்டை சூளாவத்தை சோழர் தொடர் புடனும், தோரணப்புலம் செயற்கைகூறு தொடர்பாகவும் அமையலாமா எனவும் எண்ணலாம். எனவே இவ்வூர்ப் பெயர் களில் அமையும் இச்சிறப்புக் கூறுகள் மேலும் தெளிவாகத் தெரியின் மேலும் பல எண்ணங்கள் புலனாகலாம்.

## 4. உருவாக்கப் பெயர்கள்

இயற்கைப் பெயர்கள், செயற்கை அமைப்புகள், ஆட் பெயர்கள் என இயல்பான பெயர்க்காரணங்களாக அமையாது

மனிதன் ஊர்ப்பெயர் என உருவாக்கி அமைக்கும் பெயர்களை உருவாக்கப் பெயர்கள் எனச்சுட்டலாம். தமிழகத்தைப் பொறுத்தவரையிலும் சேலத்தில் அமையும் 'காகிதபுரம்' போன்ற பெயரினைச் சுட்டலாம். இதனைப் போன்று இலங்கையில் உள்ள பெயர்கள் என நோக்க, சில பெயர்களே தெரியவருகின்றன. சோழன் இலங்கையை வென்றவுடன், 'மும்முடிச் சோழமண்டலம் என ஈழத்திற்குச் சுட்டியதை இத் தன்மையில் எண்ணிப்பார்க்கலாம். வரலாற்றுத் தொடர்பு காரணமாக இதனை நிகழ்ச்சிப்பெயர் எனச்சுட்டினும் மாற்றுப் பெயர் எனச் சுட்டினும், உருவாக்கி அமைத்த காரணத்தால் இப்பெயரினுள் அமைத்தலும் பொருந்தும். நேரடியாக நிகழ்ச்சியைச் சுட்டாமையும் இதனை உருவாக்கப் பெயர் எனச்சுட்டலுக்கு அதிகப் பொருத்தத்தைத் தருகின்றது.

## 5. மங்கல வழக்குப் பெயர்கள்

பக்தியின் தோற்றம் காரணமாக ஊர்ப்பெயரில் 'திரு' இணைந்து மங்கலத்தைக் குறிக்கும் நிலையில் அமைந்ததை, இடைக்கால இலக்கியங்கள் நமக்குக் காட்டுகின்றன. இதன் தொடர்ச்சியைத் தொடர்ந்த கால வரலாறும் தருகிறது, திருவின் வடமொழியான ஸ்ரீயைச் சில பெயர்களில் வட மொழிச்சார்பாளர் இணைத்துள்ளமையையும் இங்கே நாம் காண்கின்றோம். சான்றாக, தமிழகத்தில் குமரியில் உள்ள ஸ்ரீ பத்ம நாப நல்லூர், வட ஆர்க்காட்டில் உள்ள ஸ்ரீரங்கராஜபுரம் செங்கல்பட்டில் உள்ள திருமுக்கூடல் போன்ற பெயர்களை நாம் எண்ணலாம். மேலும் இறைப் பெயரைத் தம் குடி யிருப்புகட்கு சூட்டினால் நன்மைபயக்கும் என்ற எண்ணத்தின் அடிப்படையில் லஷ்மிநகர் எனப் பெயர் சூட்டுதலும் இன்று காணப்படும் நிலையாக அமைகிறது.

இம்முறையில் இலங்கைப் பெயரை நோக்கும்போது திரு இணைந்த ஒரு சில பெயர்கள் அமைகின்றன. எ. காட்டு. திருகோணமலை (இன்று திரிகோணமலையாயிற்று), திருக் கேதீச்சுரம், திருப்பெருந்துறை, திருவடிநிலை போன்ற வற்றைக் காண்கின்றோம்.

புகழ் பெற்ற சிவத்தலமாக விளங்குவது திருக்கேதீச்சுரம் இந்த கோயில் வரலாறு, இதன் பழமையையும், பெருமையை யும் காட்டும் தன்மையில் அமைகிறது.

திருக்கேதீச்சுரம் கோயில் சிறப்புப் பெற்ற பின்னர் அமைந்த இவ்வூர்ப் பெயர். முன்னர் மாதோட்டம் என்ற பெயரை யுடையதாக இருந்தது. இவ்விரண்டு பெயர்கள் குறித்தும் இறைச்சார்பும், அரசியல் சார்பும் கலந்த பல கதைகள் காணப்படுகின்றன.

'மாதோட்டம்' என்ற பெயர், ஆதியில் கேதுவினால் பூசிக்கப்பெற்ற திருக்கேதீச்சுர மூர்த்தியை, மகாதுவட்டா என்னும் தேவதச்சன் பூசித்துத் திருப்பணி புரிந்ததனால், அத்திருக்கேதீச்சுரம் மகாதுவட்டபுரம் எனப்பெயர் பெற்றது எனக் கந்தபுராணம், தட்சிண கயிலாய மான்மியம் கூறும். இம்மகாதுவட்டபுரமே பின்னர் மாதோட்டம் எனப்பெயர் பெற்று வழங்கலாயிற்று என்பர். இம்மாதோட்டம் கடற்கரைத் துறைமுகமாக இருந்து வந்தது ஆகும்.

கி.மு. 6 ஆம் நூற்றாண்டிலே கலிங்க நாட்டு அரச குமாரனான விஜயன் என்பவன் தன் நண்பர்களுடன் இம்மாதோட்டத் துறைமுகத்தில் இறங்கி இலங்கையை யடைந்தான் என்றும், அப்போது இத்துறைமுகம் 'மகாதித்தா' எனப்பெயர் வழங்கியது என்றும் மகாவம்சம் என்ற நூல் கூறுகிறது. பாளி மொழியில் தித்தா என்பது இறங்குமிடம் அல்லது துறைமுகம் என்ற பொருளாம். மகாதித்தா என்பது பெரிய துறைமுகம் அல்லது பெருந்துறை என்ற பொருளில் வந்தது என்பர். தித்தா என்பது தித்தம் என்றும் ஆயிற்று என்பர். ஆகவே மாதோட்டநகர், கப்பல் துறைமுகமாக, பெரிய கடல் வாணிபத்தளமாகத் திகழ்ந்தது என்பது வெளிப்படை.

மாதோட்டத் துறைமுகத்தில் கடல் வாணிபம் மாசந்தை போல் விளங்கிற்று. மா—பெரிய; சந்தை—பொருள்களை விற்றலும் வாங்கலுமான பரிவர்த்தனை நிகழுமிடம். (சாதாரண சந்தையில் சில பொருட்களைப் பெறலாம். பெரிய சந்தையில் மிகுந்த பல பொருட்களைப் பெறலாம்) ஆதன் தந்தை என்பது ஆந்தை என்று மரூஉப் பெயர் ஆனது போல் மாசந்தை என்பது மாந்தை என்பதாக மருவி நின்றது. ஆகவே மாதோட்டநகர் மாந்தை நகர் எனப்பெயர் வழங்கியது.[68]

---

68. இலங்கைத் திருக்கேதீச்சரக் கோயில் வரலாறு -பக்-12-13.

மேலும், சிங்கள மொழியில் மாந்தை நகர் மாந்தொவுட்டு, மாந்தொட்டு என வழங்குகின்றது.

எனவே மாதோட்டநகர், பின்னர் கோயிலால் சிறப்புப் பெற்று, திரு இணைக்கப் பெற்றுத் திருக்கேதீச்சுரம் ஆயிற்று என்பது தெரிகிறது.

தவிர 'ஸ்ரீ' சேர்ந்த பெயராக இவண் காணக்கூடவில்லை. இலங்கைப் பெயர்கள் அனைத்தையும் தொகுத்த பின்னர் இது பற்றிய உறுதியைப் பெறலாம். மேலும் இப்பெயர்கள் முழுமையாகத் தொகுக்கப்படாத காரணத்தால், இன்று புதியதாக அமைக்கும் குடியிருப்புகட்குத் தமிழர்கள் மங்கள மான பெயர்களை அமைத்துக் கொள்ளுதல் போன்று இலங்கைத் தமிழர்கள் பெயர் சூட்டும் மரபு இருக்கின்றதா என்பதையும் தெரிந்து கொள்ளல் இயலவில்லை.

## 6. பிறமொழிப் பெயர்கள்

வாட்ஸ்புரம், லீபுரம், ஜாபர்கான் பேட்டை, அபிஷேக புரம், லக்ஷ்மண சமுத்திரம், கெங்கபேரம்பட்டி, ஷண்மங்கலம், ராச்சாண்டார் திருமலை, ஜேம்ஸ் டவுண், யாக்கோவுபுரம் போன்ற பல பிறமொழிப்பெயர்களைப் பொதுக்கூறாகஉடைய ஊர்ப்பெயர்களைத் தமிழகத்தில் மிகுதியாகக் காண்கின்றோம். பல்வேறு மொழியினரின், தொடர்பு இத்தகைய பெயர்களுக்கு அடிப்படையாக அமைகின்றன. இவற்றுள் வடநாட்டார் தொடர்பு பண்டு தொட்டே அமைகின்ற காரணத்தால், வட மொழிப் பெயர்கள் மிகுதியாக காணப்படுகின்றன. இந்நிலை யில் இலங்கைப் பெயர்கள் எனக்காண, இலங்கை முழுவதிலும் தமிழரும் சிங்களவரும் வாழ்ந்த தன்மையில் இரண்டு மொழிப் பெயர்களும் பரவலாகக் காணப்படுகின்றதை அறிஞர் சுட்டு கின்றனர். எனவே ஊர்ப்பெயர்களின் தோற்றக் காரணத்தைப் புரிந்து கொள்வதிலும், விளக்குவதிலும் பல முரண்பாடுகள் அமைகின்றன. தெளிவாகத் தெரிகின்ற தமிழ்ப்பெயர்களைத் தவிர,மருவி வழங்கும் தமிழ்ப்பெயர்கள் இருசாராராலும் உறவு கொண்டாடப்படுகின்றன. இவற்றில் பல வகைகளையும் நாம் காணுதல் இயலுகின்றது. தமிழ் மொழி ஊர்ப்பெயர் உடைய ஊர்களுக்குச் சிங்களமொழியில் பெயரிட்டுக் கொண்ட நிலையைச் சில ஊர்ப்பெயர்கள் சுட்டுகின்றன.[69]

69. ஈழத்தில் இனிய நாட்கள்—ப-78

| | | |
|---|---|---|
| பட்டிப்பளை | — | கல்லோயா |
| குமரன் கடவை | — | கோமரன் கடவல |
| முதலிக்குளம் | — | மொரவே வா |
| புடவைக்கட்டு | — | சாகாரபுர |
| புல்மோட்டை | — | கணிகபுர |

தமிழக ஊர்ப்பெயர்களைச் சிங்களத்தில் மொழி பெயர்த்துப் வழங்கியுள்ளனர் என்ற கருத்திற்கு அரணாக, 'காரைத் தீவில் தங்கோடை, பாலவோடை, வியாவில், போகட்டி, விளானை போன்றவையில் சிங்களச் சொற்கள் தொனிக்கின்றன எனினும் இவற்றிற்குரிய தமிழ்ச் சொற்களின் சிங்களமொழி பெயர்ப்பு என்றே கொள்ள வேண்டும்' என்ற எண்ணத்தையுரைக்கலாம்.[70] இதில் பெருவெளி என்ற தமிழ்ச் சொல்லின் சிங்களமொழி பெயர்ப்பாக வியாவில் கருதப்படு கிறது.[71]

சிங்களத் தொடர்புடன், பிற பல மொழியினரும் இலங்கையில் ஆதிக்கம் செலுத்திய காரணத்தால் பிற மொழிப் பெயர்களும் இயல்பாகக் காணப்படுதல் எண்ணத்தக்கது. வேர்க்குத்திக் கடவை என்ற தமிழ்ப்பெயருடைய ஊர் இன்று சென்ஜேம்ஸ் என்று வழங்கப்படுகிறது. சென்ஜேம்ஸ் தேவாலயத்தின் சிறப்பு காரணமாக இவ்வாறு வழங்கப்படு கிறது. ஸ்கந்தபுரம் போன்றன வடமொழிச் செல்வாக்குக்குச் சான்று பகருகின்றன.

## 7. வழக்குத் திரிபு பெயர்கள்

ஊர்ப்பெயர்களில் மொழி மாற்றம் செய்யப்படும் பெயர்கள், வழக்குத்திரிபு பெயர்கள், இவற்றை நோக்கும் போது, 'திட்டமிடுதலின் தேவை' நினைக்கப்படுகிறது. தமிழக ஊர்ப்பெயர்களில் இவ்வித வழக்குப் பெயர்களைக் காண, சில, பெயரின் தோற்றத்தை மறைத்து விடுகின்றன; எனவே புதிய கற்பனைகளுக்கு வழிகோலுகின்றன. சில பெயர்கள் ஓர் எழுத்துத் திரியும் போது, தமிழ்மொழி, அதன் சொற்,பொருள் உணர்வு காரணமாக அவற்றை நாம் ஊகித்துக் கொள்ளுதல் இயலுகிறது. எடுத்துக்காட்டாக, மாமல்லை என்ற பெயர் திரிந்து மகாபலிபுரம் ஆகி, புதிய கதை வகுக்க வழிகோலு

70. காரைநகர் மான்மியம்—ப-4
71. காரைநகர் மான்மியம்—ப-13

வதையும், குன்றத்தூர்—குன்னத்தூர்; குளத்தூர்—கொளத்தூர் தாழையூத்து—தாலையூத்து போன்று திரிவதையும் எண்ண லாம். இவை பற்றிய முழுநிலை ஆய்வு, மொழியியல் ஆய்வில் எப்பெயர்கள் எவ்வாறு ஏன் எதற்காக திரிகின்றன என்ற நோக்கில் ஆராயப்பயன் டலாம்.

இத்தகைய பெயர்களை இலங்கையிலும் காணக்கூடு கின்றன. சான்றாக, சோழபுரம் — சுழிபுரம்; சோழாவத்தை— சூளாவத்தை; கொக்குநெட்டிச் சோலை—கொக்கட்டிச் சோலை போன்றபல உள்ளன. இவ்வாறு சிலவற்றின் வரலாற்றை நாம் உணர்ந்து கொண்ட அல்லது உணர்ந்து கொள்ள முடிந்த நிலையில், இப்பெயர்க் காரணங்கள் தெளிவாகின்றன. ஆயின் இலங்கையில் காணப்படும் பல பெயர்களின் விளக்கம் வெளிப் படாத நிலையில் இவையும் எவ்வாறோ திரிதல் அடைந்திருக்க வேண்டும் என்பது புலனாகின்றது. இலங்கை வாழ் தமிழர் களின் சிங்களத் தொடர்பு, வழக்குகள், சொற்பொருள் நிலை இவற்றை ஆழமாக நோக்கினாலே உண்மை புலப்பட வாய்ப்புண்டு. காட்டாக,

| | |
|---|---|
| ஈசான் குளம் | பேய்க்குளம் |
| எண்ணம் பாலைப் பூவல் | பேய்த்தாழை |
| ஒட்டுப் பள்ளம் | மட்டுவில் |
| கருகம்பாளை | மந்துவில் |
| கரைவெட்டி | முறிகண்டி |
| களுத்துறை | முரசு மோட்டை |
| கொக்குவில் | வெள்ளியம்பத்தை |
| கொத்தியாபுலை | காலி |
| கோண்டாவில் | அழுத்துக் காமம் |
| சூரியோடை | கோகலை |
| தராக்குண்டு | ஓலூர் |
| தனங்களப்பு | கன்னியா |
| நுணாவில் | இக்கினியாகலை |
| பொத்துவில் | வெருகல் |
| பொலி கண்டா | வலிகாமம் |
| | அச்சு வேலி |

போன்றனவற்றைச் சுட்டலாம். இவற்றுள் ஈசன், குளம் (ஈசான் குளம்), சூரியன் ஓடை (சூரியோடை), தாராக்குண்டு (தராக்குண்டு), நுணா (மரம்) குளம் (நுணாவில்), நெற்குவியல்

வெளி (பொலிகண்டி), போன்றன காரணமாகத் தோற்றம் பெற்றனவா இக்குறிப்பிட்ட பெயர்கள் என சிந்திக்கலாம்.

மேலும் வழக்குத் திரிபுகாரணமாக, தமிழ்ப் பெயர்கட்குச் சிங்கள விளக்கம் கொடுக்கும் பெயர்களையும் நாம், காண்கின்றோம்.

'மாவிட்டபுரம்—மஹாவிட்டபுரம் (மஹா-பெரிய, விட்ட— விஸ்தாரம் ஆலமரம்)

பல ஊர்ப்பெயர்கள், சிங்களப் பெயராக உருமாற்றம் அடைந்திருப்பதும் சுட்டத்தக்கது.[72]

| | | |
|---|---|---|
| பாணன் துறை → | பாண தறை | = பாணன் துறை |
| பாணமை → | பாணம | = பாணன் அமைவு |
| அம்பிட்டி → | அம்பிட்டிய | = அம் + பிட்டி |
| அம்பாறை → | அம்பாற | = அம் + பாறை |
| மாத்தறை → | மாத்தற | = மா + துறை |
| மன்னன்பிட்டி → | மன்னம்பிட்டிய | = மன்னன் + பிட்டி |

கன்னியா நீர் ஊற்று என்ற இலங்கை ஊர்ப்பெயர் உண்டு. தமிழக ஊர்ப் பெயர்களில்உறவுமுறை தொடர்பான ஊர்ப் பெயர்கள்பல சிறப்புக் கூறுகளாக அமைகின்ற தன்மையைக் கண்டோம்; பாப்பாபட்டி—திருச்சி; கன்னிகாபுரம்—செங்கல் பட்டு; கன்னியாகுமரி—கன்னியாகுமரி போன்றன வற்றைச் கட்டலாம். 'கன்னியா' இளமை என்ற பெயரில் அமைந்திருக்கலாமோ எனத் தோன்றுகிறது. வழக்குத் திரிபா அல்லது உறவு முறையா என்பன இவண்சிந்திக்கத்தக்கன.

## 8. மாற்றுப் பெயர்கள்

பல காரணங்கள் காரணமாக ஊர்ப்பெயர்கள் தங்கள் முதன்மைஅல்லது பழைய பெயரை இழந்து. புதிய பெயர்கள் பெறலும்ஊர்ப்பெயர் ஆய்வில் நாம் காணும் ஒரு நிலையாக அமைகிறது. தமிழகத்திலும் இலங்கையிலும் இம்மரபினைக் காண்கின்றோம்.

புதிய அரசன், தன்னுடைய வெற்றி, செல்வாக்கு, பெருமை, தகுதி, வீரம் இவற்றை வெளிப்படுத்த, புதிய பெயரைச் சூட்டுகின்ற தன்மை வரலாற்றில் பல இடங்களில் சுட்டப்படுகின்றது. மேலும் மதம் போன்ற பல அடிப்படை-கள்

72. ஈழத்து இடப்பெயர் ஆய்வும் அதன் அவசியமும் —ப—29

இதற்கு அமைகின்றன. குமரியில், பேயன்விளை என்ற பெயர் பேரின்பபுரமாக மாற்றம் பெற்றுள்ளது.

தமிழ்ப்பெயரைத் தமிழ் மொழியிலும், பிறமொழிகளிலும் மாற்றியதைப் போல, இலங்கையிலும் மாற்றப்பட்டமையை பல வரலாற்றுக் குறிப்புகள் சாற்றுகின்றன.

மயிலாடு துறை மாயூரம் ஆகி இன்று திரும்பவும் மயிலாடு துறை ஆனதைத் தமிழக வரலாறு காட்டுகின்றது. இதனைப் போன்று பல பெயர்கள் சிங்கள மொழியில் சுட்டப்படுவதை யும் இலங்கை வரலாறு காட்டுகிறது. சான்றாக முத்துச் சல்லாபம் ஹெல்லாவ என இன்று சிங்கள மொழியில் அழைக்கப்படுவதைச்சுட்டலாம். வழக்குத் திரிபு பெயர்கள் போன்று இவையும் திட்டமிடலின் கண் ஆராயத்தக்கன வாக அமைகின்றன.

இலங்கையை வென்ற சோழன், அதுவரையிலும் அங்குத்தலை நகரமாக விளங்கிய அனுராதபுரத்தை அழித்து, பொலநறுவாவைப் புதிய தலைநகர் ஆக்குகின்றான். 'சனநாதமங்கலம்' என்ற புதிய பெயரையும் பொலநறுவா வுக்குச் சூட்டுகின்றான். பொலநறுவா மட்டும் சோழ மன்னனால் புதிய பெயர் பெறவில்லை. இலங்கையும், அதன் கண் பிற இடங்களும் பெயர் பெற்றன என்பதைக் கல்வெட்டுச் செய்தி ஒன்றின் வாயிலாக விளங்குகின்றார் இலங்கையில் தமிழ்ப்பண்பாடு நூலாசிரியர்.[73]

"சோழமண்டலத்து க்ஷத்திரிய சிகாமணி வளநாட்டு வெளா (விளா) நாட்டுச் சிறு கூற்ற நல்லூர்க் கிழவன் தாழி குமரன் **ஈழமான மும்முடிச் சோழமண்டலத்து, மாதோட்டமான ராஜராஜபுரத்து** எடுப்பித்த ராஜராஜ ஈஸ்வரத்துமகாதேவர்க்குச் சந்திராதித்தவர் நிற்க"

,ஆயின் பின்னர் வந்த 'விசயவாகு' அரசனானவுடன் பொலனறுவாவிற்குச் சோழர்கள் சூட்டிய பெயரைமாற்றி விசயராசபுரம் என பெயரிட்டான் என அறிகின்றோம். இராசராசன் சிறப்புப் பெயர் மும்முடிச் சோழன்.

---

73. இலங்கையில்—தமிழ்ப்பண்பாடு—பக். 77, 81

சிறப்புக்கூறு என்ற நிலையில் தமிழகம் இலங்கை இரண்டையும் ஒப்பியல் நோக்கில் காண சில எண்ணங்கள் புலப்படுகின்றன.

1. பெரும்பாலும் ஒரே அடிப்படையில் தமிழர் ஊர்ப்பெயரிடும் மரபு காணப்படுகின்றது. பலவித தொடர்புகள் இத்தகைய ஒப்புமைக்குக் காரணமாகலாம்.

2. பெயர்களைவகைப்படுத்தி ஆயும்போது பெரும்பான்மை ஒன்றுபடும் நிலையில் சிலவேற்றுமைகளையும் காண்கின்றோம். விளக்கப் பெயர்கள், ஆட்பெயர்கள், உலோகப் பெயர்கள், நிகழ்ச்சிப் பெயர்கள், பிறமொழிப் பெயர்கள் போன்ற அனைத்தும் காணப்படுகின்றன. ஆயின் தழுவுப் பெயர், உணவுப் பெயர், முறைப் பெயர், பருவப் பெயர், எண்ணுப் பெயர் போன்றன ஒன்றிரண்டே காணப்படுகின்றன. இதுவும் உறுதியாகத் தோற்றக் காரணம் புலப்படுத்தப்பட்ட நிலையிலேயே உறுதிப்படுத்துதல் இயலும். மேலும், தழுவுப்பெயர் பற்றியஎண்ணமும் புலப்படுமாறில்லை. எனவே இதைபற்றிய காரணங்கள் அதாவது இலங்கை வாழ் தமிழர்கள் இத்தகைய பெயர்களைப் பயன்படுத்தாமைக்குரிய காரணம் என்ன? இவற்றைப் பற்றிய எண்ணமில்லையா? அல்லது தேவையில்லையா? அல்லது தொகுப்பில் கிடைக்கவில்லையா? என்பன போன்ற எண்ணங்கள் மேலும் ஆழ்ந்த ஆய்வில் புலப்படலாம்.

3. தமிழக ஊர்ப்பெயர்கள் ஆய்வில் சுட்டப்பட்ட 'காட்சி அளவில்சிறப்புள்ள, அதாவதுபருப்பொருட்கள், பொதுக்கூறில் மிகுதியாக இடம்பெற்று, அந்த இடத்தினை ஊர்ப்பெயராகக் காண உதவுகின்றன. ஆயின் சிறப்புக்கூறில் அவற்றின்பொதுத் தன்மையன மேலும் தனிப்படுத்தப்படும் நிலையில் அவ்வூரில் மிகவும் சிறப்புள்ள பொருட்களும், சிறப்புற்ற ஆட்களும், பிற நுண்பொருட்களும் இடம்பெறக் காண்கின்றோம்' என்ற எண்ணம் இலங்கையிலும் உறுதிப்படுகின்றது. செயற்கைக் கூறு என நோக்க, பெரும்பாலும் தமிழர் தொடர்பே அமைகிறது. சான்றாக அனுரதபுரம் காரணம் எனின் தமிழர் சிறப்பு தெளிவாகும்.

4. பொதுநிலையான ஆய்வு, இத்தகைய ஒற்றுமையை காட்ட, இரண்டு பகுதி சிறப்புக் கூறுகளும் தனித்தனியே முழுமையாக ஆராயப்படும் போது, தனித்த நிலையில் தமிழகத்தின் இலங்கையின் சிறப்பு வெளிப்பட வாய்ப்புண்டு.

## இயல் 6

# தனிப்பெயர்களும் மரூஉப்பெயர்களும்

ஊர்ப்பெயர்கள் வரலாற்றில். பொதுக்கூறு சிறப்புக் கூறு இணைந்த பெயர்கள் பெறும் இடத்தைத் தனிப் பெயர்களும் மரூஉப் பெயர்களும் பெறுகின்றன. 'தோற்ற நிலை எனப் பார்க்கும் போது தனிப்பெயர்களும் மரூஉப் பெயர்களும் அடிப் படையில் வேறுபடுகின்றன. ஆயின் சொல் நிலையில் ஒன்று பட்டு, எது தனிப் பெயர், எது மரூஉப் பெயர் என்று புரியாத நிலையில், இவற்றை இவண் இணைத்துப் பார்த்தல் அமைகிறது.[1]

இவ்விரு வகைப் பெயர்களையும் பண்டைக் காலம் தொட்டுக் காண்கின்றோம். தமிழகம் இலங்கை இரு பகுதி களிலும் காண்கின்றோம். இப்பெயர்கள் அனைத்தையும் ஆராயின், இவற்றைத் தனிப்பெயர் என்றும் மரூஉப் பெயர் என்றும் இனம்காணுதல் இயலும் ஆயின் தனித்தனியே ஊர்ப் பெயர்கள் அனைத்தும் இன்னமும் ஆய்வுக்குட் படுத்தப்படாத நிலையில், இவற்றின் பெயர்க் காரணங்களையும், இவற்றின் வகைப்பாடுகளையும், அவையுணர்த்தும் செய்திகளையும், புரிந்து கொள்ளும் சூழல் அமையவில்லை.

ஊர்கள் பெயர்களைப் பெறும் போதே தனிப் பெயர் களாகப் பெறும் பெயர்கள் தனிப்பெயர்கள். தனிப்பெயர் களாக, சிறப்புக்கூறு பொதுக்கூறு இணைந்தபெயர்களாக, முன்னும் பின்னும் அடை இணையப்பெற்ற பெயர்களாகத் திகழ்ந்து, பின்னர், மக்களின் பேச்சில், கவிஞர்களின் எண்ணத்தில், இவற்றின் எளிமை கருதியோ, சுவை காரணமாகவோ, சுருக்கம் பெறும்தன்மையில் அமையும் போது மரூஉப் பெயர்களாகின்றன. தனிப் பெயர்கள் பற்றி சுட்டும் போது, 'தனியே குறிப்பிடுவதில் குழப்பம் ஏதும் வாராத

1. தமிழக ஊர்ப்பெயர்கள் — ப - 164.

நிலையிலும், ஊரினைச் சிறப்பாக இனம் காட்டும் தன்மையிலும் தொடர்ந்து தமிழரிடம் தனிப் பெயரிடும் மரபு மாறாதிருந்த நிலையைக் காண்கின்றோம்' என்கிறது தமிழக ஊர்ப் பெயர்கள் நூல் (ப—165). எனவே தனிப் பெயர்கள் ஊர்ப் பெயர்களின் தோற்ற நோக்கத்தை நிறைவேற்றும் தன்மை காரணமாக என்றும் இவை வரவேற்புக்குரியனவாகவே திகழ்கின்றன. ஆயின் மரூஉப்பெயர்கள் என எண்ணும் போது இவை மீண்டும் சிந்தனைக்குரியனவாக அமைகின்றன. மக்களின் இயல்பான பேச்சு வழக்கு நிலையிலும், இவற்றின் முக்கியத்துவம் பொருண்மை தெரியாது திரிந்து வழங்கும் நிலையிலும், இவை தன் பொலிவையிழந்து நிற்கின்றன. எனவே இப்பெயர்களின் தோற்ற நோக்கம் சிதைகின்றன. எனினும் இவைத் தவிர்க்கப்படவில்லை; தவிர்க்கப்பட வேண்டும் என்ற எண்ணமும் தமிழரிடம் இல்லை. இங்கேயும் ஊர்ப்பெயர்கள் திட்டமிடப் படவேண்டும் என்ற எண்ணம் வலுப் பெறுகிறது.

அண்மையில் கேரளாவில் பலஊர்ப் பெயர்கள் அவற்றின் பொருண்மை உணரப்பட்டு, திருத்தம் செய்யப்பட்ட நிலையில் பயன்படுத்தப் படவேண்டும் என்ற சட்டம் கொண்டு வரப்பட்டுள்ளது. Trivandrum-Tiruvanantha puram, Quilon-Kollam என்ற பல பெயர்கள் தம் மரூஉ நிலையை மீண்டும் இழந்து, முன் நிலையை அடைந்துள்ளன. பெயர்க் காரணமும் தெளிவாக உணர்ந்து கொள்ளப்பட்ட நிலையில் ஊர்ப்பெயர்கள் வரலாற்று மூலமாகத் திகழவல்லன என்பதற்கும் இவை வழிகாட்டலாம். எனவே இவ்விரு பெயர்களுள் தனிப்பெயர்கள் வரவேற்கப்பட வேண்டியனவாகவும், மரூஉப் பெயர்கள் மீண்டும் செப்பம்செய்யப்பட வேண்டியனவாகவும் அமைகின்றன எனலாம்.

தனிப்பெயர்களாக அம்பர், குச்சி, தொண்டி, முசிறி, அரங்கம், அவிநாசி, அரதை, தில்லை, குட்டம், பேட்டை, பூசாரி, கம்பம் தண்டலை என அன்று தொட்டு இன்று வரையிலும்மிகுதியான ஊர்ப்பெயர்கள் தமிழகத்தில் அமைகின்றன.

இலங்கையில், இலங்கை, ஈழம், மணற்றி, மன்னார், கண்டி, கட்டுவன், தளவாய், பழை, ஊரணி, சித்தாண்டி, விளான், அம்பன், பிளாவை, பலாலி, ஆராலி, கிளாலி, மாந்தை, சூப்பிமான், கிராஞ்சி, கைதடி, சளம்பன், சண்டில், முள்ளி,

போன்றபல பெயர்கள் தெரியவருகின்றன. தமிழகப் பெயர்கள் ஓரளவு பொருள் புலப்பாடு தர, இலங்கைப் பெயர்களின் பொருளைப் புரிந்து கொள்ளல் இயலாததாகவே இருக்கின்றது. இலங்கை வாழ்தமிழர்க்குப் பொருள் புலப்படலாம். சிங்கள மொழித் தொடர்புடையதாகவும் இவை அமையலாம். எனினும் இச்சொற்களின் தனிப்பட்ட ஆய்வே, இவற்றின் பொருளை நமக்குச் சுட்டுவதாக அமையக் கூடும்.

தமிழகத்தில் சில பெயர்கள் இரண்டு கூறுடைய பெயர்களாகத் தோற்றம்தரினும், தொடராகத் தோற்றம் தரினும் இவை தனிப்பெயராக, தனித் தொடராகவே இடப்பட்டிருக்க வேண்டும் என்பது அப்பெயர்கள் பற்றி ஆராயும் போது தெளிவுறுகின்றது. திருநிலை, புலிக்கொரடு போன்று (செங்கல்பட்டு மாவட்டம்) இவண் பல உள்ளன. இதனைப் போன்று திருவடிநிலை என்ற ஊர்ப்பெயர் யாழ்ப்பாணத்தில் அமைகிறது. இலங்கையில் இதனைப்போன்று பல ஊர்கள் அமையலாம்.

தமிழகத்தைப் போன்று இலங்கையிலும் பொருள் தெளிவு தராத மரூஉ ஊர்ப்பெயர்கள் பல உள்ளன. சான்றாக, கொக்கட்டிச் சோலை, வவுனியா, மாந்தை, சிலாவ போன்றன அமைகின்றன. ஆயின் இன்று ஆய்வாளர்களின் ஆய்வு, கொக்கு நெட்டிச் சோலை, பவானிக்குளம், மாதோட்டபுரம், முத்துச்சலாபம் என இவற்றை இனங்காட்டுகின்றன.

| | | |
|---|---|---|
| சுண்ணாகம் | → | சுன்னர் + அகம் |
| மல்லாகம் | → | மல்லர் + அகம் |
| சுழிபுரம் | → | சோழர் + புரம் |
| உசன் | → | உசன் + நயினார் + எல்லை |
| எழுதுமட்டுவாள் | → | இலந்தை + மோட்டை + வில் |
| தென்மராட்சி | → | தென் + மறவர் + ஆட்சி |
| வடமராட்சி | → | வட + மறவர் + ஆட்சி |

இவை போன்று பல பெயர்கள் மரூஉப் பெயர்கள்.

தமிழகத்தைப் பொறுத்தவரையிலும், ஊர்ப்பெயர்களுக்கென்று ஒரு வரலாறு உண்டு. இயற்கைப் பெயர்கள், முதலிலும்பின்னர், செயற்கைப் பெயர்கள், குடியிருப்புப் பெயர்கள்,பக்திசார்புப் பெயர்கள்,மன்னர் பெயர்கள், ஆட்பெயர்கள்

அவற்றின் பிரிவுகள் என ஒரு முறையான அமைப்புக்கு இவை பெரும்பாலானவை இடம் கொடுக்கின்றன. இன்று ஆட்பெயர்களையும் மங்கலப் பெயர்களையும் இடும் அளவிற்குப்பிற இல்லை. எனவே இயற்கைச் சார்பு பெயர்கள் இவற்றுள் தனிப்பெயர்களாகவும் அமையின் அவற்றைப் பழம் பெயர்கள் எனலாம். இவ்வகைப்பாடு மேம்போக்கான நிலையில் இதுவரையிலும் செய்த ஊர்ப்பெயர் களின் வரலாறு தந்த உணர்வுதான். எனினும், இத்தகையே தொரு உணர்வைக் கூட இலங்கைப் பெயர்களில் காணக்கூட வில்லை. இருப்பினும், பெரும்பாலும் எல்லா அடிப்படை யிலும், ஒருமித்த தன்மையில் காணப்படும் இலங்கைப் பெயர் களையும் இந்த வகைப்பாட்டில் அடக்க இயலுமா என இலங்கை ஊர்ப்பெயராய்வு செய்யப்புகும் அறிஞர் சிந்திக் கலாம்.

தமிழக வரலாற்று நோக்கில்பார்க்க, அரங்கம், கூடல், நறவு, காஞ்சி, தில்லை, தண்டலை, அவிநாசி, வடலி, முருங்கை காரை, என பல அமைகின்றன. இவற்றை நோக்க, இவைத் தனிப் பெயராகவே ஊர்களுக்கு அமைந்திருக்கலாம் என்ற எண்ணம் தோன்றுகிறது. இவற்றுள் பெரும்பாலும் இயற்கைச் சார்பு பெயர்கள். அனைத்தும் பழந்தமிழ்நாட்டு ஊர்ப்பெயர்களாக இருத்தல் இயலுமா என்ற கோணத்தில் இப்பெயர்களை ஆராயின் அவற்றின் மூலம் சில முடிவுகளை நாம் சொல்ல இயலும். கூடல், காஞ்சி, தில்லை, போன்றன பழந்தமிழ்ப் பெயர்களே. பிற ஆராய்ச்சிக்குரியன. அவிநாசி இடைக்காலப் பெயர். இவை போன்று இலங்கைப் பெயர்களையும் முதலில் பொருள் புரிந்து கொண்டு, இயற்கைப் பெயர்களின் காலப் பழமையை எண்ணிப்பார்க்கலாம்.

இவ்வாறு தனித்து நின்று பொருள் புரியாதனவாயின், அவை மரூஉப்பெயர்களாக இருத்தல் கூடுமா என்ற சிந்தனையும் அமைகிறது. சான்றாக, குடந்தை, நாகை, மாந்தை, கோவல், பொருள் தெளிவில்லை. எனவே இவை மருவி வழங்கப்பட்டன வாக இருக்கலாம். இவையும் தெளிவாக்கப்படின் இவற்றின் காலப்பழமையும் எண்ணுவதற்குரியனவாக அமையும். கருத்து கள் உணர்த்துவன, ஆட்பெயர்க் கூறாக அமைவன பெரும் பாலும் மருவிய வழக்காக இருத்தலும், இடைக்காலம் பிற் காலம் சார்ந்தனவாக இருக்கவும் வாய்ப்பு தருவன. இவற்றின்

நீட்சியே பெரும்பாலும் மக்களால் மருவி வழங்குவதற்குக் காரணமாவன. சான்றாக, செம்பியன் மாதேவிச் சதுர்வேதி மங்கலம் — செம்பியன் மாதேவி என்றும், அருள்மொழித் தேவன் சதுர்வேதி மங்கலம் — அருள்மொழித் தேவன் என்றும் வழங்குகின்றன. இவை ஓரளவிற்கு வரலாற்று அடிப்படை காட்டுவதுடன், ஆராய்ச்சிக்கும் வழிக்காட்டுவன. ஆயின் ராஜராஜபுரம் தாராசுரம் என்று திரிந்து வழங்கும் நிலை, ஆழமான ஆய்வின் தேவையையுணர்த்துகிறது. திட்டமிடலின் தேவையையும் உணர்த்துகிறது. ஆராயும் போது இவை பொதுக்கூறு சிறப்புக்கூறுடைய பெயர்கள் எனில், அவற்றை இவ்விரு கூறுகளின் வகைப்பாட்டில் பிரித்து ஆராயலாம். தனிப்பெயர்களும், இயற்கை, ஆட்பெயர்கள் நிகழ்ச்சிப் பெயர்கள் போன்றபல அடிப்படையில் அமையும் போது அவற்றையும் வகைப்படுத்தி, வரலாற்றுச் செய்திகள் பல பெறலாம்.

ஊர்ப்பெயர்கள் தனிநிலை, தாலுகாக்கள், மாவட்டங்கள், தமிழ்நாடு என தமிழகத்தில் ஆய்வுக்கு உட்படுத்தப்பட்டுள்ளன. எனினும், இவற்றுள் தனிப்பெயர்கள், மருஉப்பெயர்கள் மிகுதியாக விளக்கம் பெறவில்லை. ஒரு சில பெயர்களே ஆய்வு செய்யப்பட்டுள்ளன. (மதுரை, காஞ்சி, மயிலை, உறந்தை, பழையாறை) இதே நிலையே இலங்கையிலும் அமைகிறது. ஆய்வு செய்யப்பட்ட பெயர்கள் (இலங்கையில்) சிலவற்றை இவண் தொகுத்துக் காணலாம்.

**1. கட்டுவன்**

கட்டுவன் என்ற ஊர்ப்பெயரைப்பற்றி ஆராயும்போது இது தனிப்பெயரா அல்லது மருஉப்பெயரா என்பது தெளிவுபடவில்லை என்பதாக சு. பாலசுந்தரம் கருத்துத் தெரிவிக்கிறார். எனினும் குட்டுவனூரே குட்டுவன் ஆகி இருக்க வேண்டும் என்பது இவரது எண்ணம்.

வலிகாமம் வடக்கு, மயிலிட்டித் தெற்குக் கிராமச் சேவகர் பிரிவில் உள்ள கட்டுவன் என்ற கிராமத்தின் பெயர் கட்டுவன், குட்டுவன், கட்டுவனூர் என வழங்குகின்றது. பண்டைத் தமிழகத்தைச் சார்ந்த குட்டநாட்டு மக்கள் இங்கு வந்து குடியேறிய படியால் குட்டுவனூர் என்ற பெயர் வந்தது என்பர். இவ்வூர் பற்றி, த. சண்முக சுந்தரம் பின் வருமாறு

கூறுகின்றார். இங்கு மலையில்லை. வற்றாத பேராறு எதுவுமில்லை மாரியில் மட்டும் நீர் தேங்கி ஓடும். இந்நீரை யாழ்ப்பாணத்தில் வாழ்ந்த முந்தையோர் தேக்கி வைத்தனர். மேட்டுப் பூமியாகிய கட்டுவன் ஊரிலே தோன்றுவது வழுக்கையாறு. இங்கு அணை ஒன்றைக் கட்டினர். ஆகவே அணை கட்டுவனூர் என்ற பெயர் எழுந்தது.

சேரன் செங்குட்டுவன் — குட்டுவன் — குட்டுவனூர் என்பதிலிருந்தே கட்டுவன் தோன்றிற்றென்றும் கூறுவர். இதனைக் குமாரசாமி சிங்களப் பெயரென்பர். சேரர் தொடர்பாக குட்டுவனூரிலிருந்து வந்தேறிய குடிகளிட்ட தம்மூர்ப்பழம் பெயரே காலகதியிற் குட்டுவனூர்—கட்டுவன் எனக் கோடலே பொருந்தும் போன்ற எண்ணங்கள் இது தொடர்பானவை.[2]

## 2. குருநாகல்

"இதைச் சிங்களத்தில் குருநாகல என்பர். தண்ணீர் தேங்கி நிற்கும் கல்லைக் குறுந்தக்கல் என்பர். இதுவே குருந்தக் கல் என்றும் அழைக்கப்படும். இப்பெயரே 'குருநாகல்' ஆகி, தமிழில் பிழையாகக் குருநாகல் என வழங்குவர். இங்குள்ள கருங்கல் குன்றின்மேல் தண்ணீர் தேங்கி நிற்கிறது. இம்மலை மேல் குருந்த மரமும் உள்ளது. இது பண்டைய நாளில் சிறந்த சிவத்தலமாக இருத்தல் வேண்டும்"[3] எனவே இப்பெயரின் தொன்மையைக் காண்கின்றபோது, இது குறுந்தக்கல் என்பதுடன் குருந்தமரம் காரணமாக இப்பெயர் அமைந்திருக்கலாமா என்ற நோக்கிலும் அணுகிப்பார்க்கலாம்.

## 3. சித்தாண்டி

இவ்வூர் மட்டக்களப்பில் வடக்குப்பகுதியில் இருப்பதாகும். 'சித்திரவேலாயுத சுவாமி கோயிலால்' பெருமையுடையதாகத் திகழ்கிறது இவ்வூர். ஆட்பெயரால் அமைந்த ஊர்ப்பெயர் இது என்பது எண்ணமாக அமைகிறது. சிகண்டி எனும் ஆண்டி காரணமாகச் சித்தாண்டி எனப்பெயர் அமைந்தது என்பது தலபுராணம் தரும் விளக்கமாகும்.

"பத்தியிற் தோய்ந்து ஞானப்பரமனார் கருணை மேவிச்
சித்துகள் மனத்தால் செய்த சிகண்டியாமாண்டி யானோர்

2. இலங்கை இடப்பெயராய்வு 1 பக் - 16 - 17
3. ஈழ நாட்டு இடப்பெயர்களில் தமிழின் ஆளுமை. ப- 223.

முத்தியிற் கலந்தே யீங்கு முறையுற வடங்கலாலே
இத்தலமுயர் சித்தாண்டி எனும் பெயர் பெற்றதன்றே'[4]

என்பது சித்தாண்டித் தலபுராணச் செய்யுள்[5] ஆயின் 'ஆண்டி' என்று முருகனைக் குறிப்பது என்ற நிலையில் சித்திர ஆண்டி கோயில் கொண்ட இடம் என்ற நிலையில் சித்திர ஆண்டி சித்தாண்டி என அவ்வூரைக் குறிப்பிடத் தொடங்கியிருக்கலாமோ என்ற எண்ணமும் அமைகிறது.

**4, மன்னார்**

இலங்கையின் வட பகுதியில் அமைந்துள்ளது மன்னார். இது சிறு தீவு. பாலங்களால் யாழ்ப்பாணத்துடன் இணைக்கப் பட்டுள்ளது. இத்தீவு இரு பகுதிகளையுடையது. ஒன்று தலை மன்னார் பகுதி. இரண்டு கோட்டை மன்னார் பகுதி.

'இப்பெயர் மண்நாடு என்பதன் திரிபேயாகும். இவ்வூரும் இதனை அடுத்த ஊர்களும் அடிக்கடி மண்மாரிக்கு இலக்கானவை என்று வரலாற்றுக் குறிப்புகள் கூறும். வெளி நாட்டு வாணிபத் தொடர்புகள் முற்காலத்தே இருந்த காரணத்தால் இவ்வூர்ப் பெயரும் மண்ணாறு என்று ஆகி, மன்னார் ஆயிற்று என்க. மன்னார் பகைவர் பட்டினம் என்னும் பொருளையும் பெறும் என்ற கருத்து அறிஞர் ஒருவரால் சுட்டப்படுகிறது.[5]

யாழ்ப்பாணம் முதலில் மணற்றி என்ற பெயருடன் திகழ்ந்தது என்பதும், மட்டக் களப்பு மண்முனை என அழைக்கப்பட்டு இருந்தது என்பதும், இப்பகுதிகள் அனைத்தும் ஏதோ ஒரு நிலையில் மண்ணுடன் தொடர்பு கொண்டு இருத்தல் போல், 'மன்னார்' என்பதும் மண்ணுடன் தொடர்பு கொண்டிருந்திருக்கலாம்.

**5. யாழ்ப்பாணம்**

இன்று ஈழத் தமிழகம் எனச் சுட்டப்படும் நிலையில் இலங்கையின் வடக்குப் பகுதியில் அமைந்திருக்கின்றது யாழ்ப்பாணம். தமிழகத்தின் மிக அண்மையில் இருக்கும் நிலையில், இன்று வரையிலும் தமிழர் வாழும் நிலை

4. மட்டக்களப்பு மக்கள் வளமும் வாழ்க்கையும் - ப - 144
5. ஈழநாட்டு இடப்பெயர்களில் தமிழரின் ஆளுமை—ப—223

யிலும் பிறபலநிலைகளிலும் தமிழகத் தமிழர்களுடன் மிக நெருக்கமான உறவுடன் திகழ்கின்றது யாழ்ப்பாணம்.

இன்று யாழ்ப்பாணம் எனவும் ஆங்கிலத்தில் Jaffna எனவும் வழங்கப்பட்டாலும், இலங்கை போன்று இப்பகுதியும் பல பெயர்களால் பல சூழல் காரணமாகச் சுட்டப்பட்ட நிலையை வரலாறு காட்டுகின்றது. 'யாழ்ப்பாணம்' என்பதன் பெயர்க் காரணமும் பலவாறாக சுட்டப்படுகின்றது.[6]

'பொன்னுயர் ஈழ நாட்டில் பொருந்திய வடபால் யாழூர்' என, யாழ் தொண்டை மானாறு ஸ்ரீசெல்வச் சந்நிதிக் கந்தன் திருத்தல புராணம் உரைக்கும் 'யாழ்ப்பாணம்' இலங்கை போன்று அதன் சிறப்பு வளம் காரணமாக மேலும் பலவித பெயர்களையும் கொண்டு திகழ்ந்ததை; திகழ்கின்றதை நாம் காண்கின்றோம்.

இவ்யாழ்ப்பாணத்தின் இயற்கை அமைப்பினைக் காணும் போது 'அதன் வடக்கும் கிழக்கும் வங்காளக்குடாக் கடலும் தெற்குப்பூநகரிக்கடல், பண்ணைக் கடல்களும், மேற்குக் கோடிக் குடாக் கடலும் எல்லையாம்' எனவும் 'அஃது இலங்கையின் வடபாகத்தேயுள்ள ஒரு துவீபகற்பம். அதன் அயலிலே காரைத் தீவு, வேலணைத்தீவு, புன்குடித் தீவு, அனலைத் தீவு, நயினா தீவு, நெடுந் தீவு, முதலிய தீவுகளுமுண்டு. இவைகள் எல்லாம் யாழ்ப்பாணத்தைச் சேர்ந்தனவேயாம்' எனவும் அறிய வருகின்றோம்.'

எனவே யாழ்ப்பாணம் என்ற பகுதி தீபகற்பமாகவும், இதனுடன் அருகேயுள்ள சில தீவுகளும் சேர்ந்து காணப்பட்டன என்பதும் தெரிகின்றது. ஆயின் இன்று யாழ்ப்பாணம் தனித்ததொரு பகுதியாக அமைகின்றது. இதனைக் குடா நாடாகத்துலங்கித் கொண்டிருக்கும் யாழ்ப்பாணம்முன்னொரு காலத்தில் இரண்டு தீவுகளாக இருந்தது. கடல் கோள்களின் பயனாக மேற்கே இருந்த தீவு பல தீவுகளாகப் பிரிக்கப் பட்டது. அதன் பயனாக, காரைத்தீவு, வேலணை, மண்டைத் தீவு, புங்குடு தீவு, அனலைதீவு, நயினாதீவு, நெடுந்தீவு என்னும் தீவுகள் ஏற்பட்டன என்கின்ற எண்ணத்தைக் காண்கின்ற போது,[7] மிக அண்மையில் இருந்தமை காரணமாக ஒரே பகுதி

6. யாழ்ப்பாண சரித்திரம்—பக்—1
7. ஈழமும் தமிழரும்—பக்—61

யாக இருந்த இருபகுதிகள்பின்னர் பிரிவு காரணமாகஅவற்றின் பலவித தன்மைகள் இயல்புகள் காரணமாக வேறு வேறு பெயர்களால் அழைக்கப்பட்டன என்பதையும் நாம் உணரக் கூடுகின்றது.

இந்நிலையில் யாழ்ப்பாணத்தின் பிறபல பெயர்களும், ஆய்வுக்குரியனவாகவும், வரலாற்றை வெளிப்படுத்துவன வாகவும் அமைகின்றன.

நாகநாடு, நாகதீபம் என்ற பெயர்களை இப்பகுதி பெற்றிருந்தது என்பதற்கு இன்றும் பல சான்றுகள் காணக் கிடைக்கின்றன. நாகம் பற்றிய தொடர்பு தமிழகத்திற்கும் இப்பகுதிகட்கும் உரிய தொடர்பையும் சிறப்புற காட்டு கின்றது.

'பண்டைக் காலத்தில் இங்கே நாகர் என்னும் இனத்தார் வாழ்ந்து வந்தார்கள். நாகர்கள் வாழ்ந்து வந்தமையினால் நாகதீவம் என்னும் பெயரைப் பெற்றது. நாக வழிபாட்டினை இவர்கள் கைக்கொண்டமையினாற்றான், நாகர்கள் என்றும் பெயர் ஏற்பட்டிருக்க வேண்டும். நாகர்கள் வாழ்ந்த காலையில் இருந்து வந்த நாகவழிபாடு இன்னும் முழுதும் மறைந்து விடவில்லை. நயினா தீவிலே இப்பொழுதும் நாகவழிபாடு நடைபெற்றுக் கொண்டே இருக்கிறது மகாபாரதக் குறிப்பு புத்தபகவான் தொடர்பான கதை, மணிமேகலைக் குறிப்பு, போன்ற பல எண்ணங்கள் இந்நாகநாடு மிகச் செழிப்பாகத் திகழ்ந்த நிலையைக் காட்டுகின்றன.[8]

மணற்றி என்னும் ஒரு பெயரும் யாழ்ப்பாணத்தினுக்கு உண்டு. மணற்றி என்னும் பெயர் மணற்றிடல் என்னும் வழக் காகியது,[9]

''மணற்றி என்பது அதன் பூர்வநாமம். அது பின்னாளில் மணற்றிடல் எனவும் வழங்கிற்று. இம்மணற்றி என்னும் பெயர் இறையனார் அகப்பொருள் உதாரணச் செய்யுளில் வருகின்றது,[10]

---

8. ,, ,, பக்—62
9. ஈழமும் தமிழரும் பக்—61
10. யாழ்ப்பாண சரித்திரம்—ப—1.

மணற்றி என்பது 'மாந்தையொடு மணற்றி கொண்ட வல்விசயன் தனக்கு மனை வகுத்தலாலே' என்னும் சாதி மாலைப்பாட்டாலும் தெரிய வருகின்றது.[11]

முழுமையான ஆய்வுக்குட்படுத்தப்பட வேண்டிய இப் பெயர்கள் மேம்போக்கான நிலையில் பார்க்கவும் ஆராயப்பட வேண்டியதன் முக்கியத்துவம் புலனாகிறது. முதலில் இப் பெயர்கள் அனைத்தும் தொகுக்கப்பட்டு, ஆராயப்பட்ட பின்னர், இவற்றுள் தனிப்பெயர்கள் மரூஉப் பெயர்கள் வகைப் படுத்தப்படலாம்.

தனிப் பெயர்கள் தோற்றக் காரணம் ஆராயப்பட்டு அவை யுணர்த்தும் சிந்தனைகள் பெறப்பட வேண்டும்.

மரூஉப் பெயர்கள் என்றால் தனிப்பெயர்களாக அமையின் அவற்றுடன் இணைந்து ஆய்வு செய்யப்பட வேண்டும்.

பொதுகூறு சிறப்புக் கூறு இணைந்த பெயர்கள் எனில், பொதுக்கூறு, சிறப்புக்கூறு பகுதியுடன் இணைக்கப்பட வேண்டும்.

தொடர்ப்பெயர்கள் எனில், அவற்றின் அடிப்படைகள் ஆராயப்பட்டு, வரலாற்றுச் செய்திகள் புலப்படுத்தப்பட வேண்டும்.

இவண் கருதுகோளில் இரண்டாவது, தெளிவாக்கப் பயன் படும் தன்மையும் எண்ணப்படலாம்.

பொதுக்கூறு, சிறப்புக்கூறு, தமிழகம், இலங்கை, தமிழர், இலங்கைத் தமிழர் பற்றிய செய்திகளை அறியத்துணையானது கட்டுரைகள் மூலம் பெறப்பட்டன.

அதுபோன்று, தனிப்பெயர்கள், மரூஉப் பெயர்கள் வரலாற்று நிலையில், தோற்றக் காரணம் புலப்படுத்தப்படும் போது, அவற்றின் தோற்ற நிலையும் புலனாகும். அப்போது

---

11. யாழ்ப்பாணச் சரித்திரம்—ப—1

முதல் பெயரையும், திரிந்து நிற்கும் பெயரையும் நோக்கி, அவற்றின் திரிபின் தன்மை மொழியியல் நோக்கில் ஆயப் படலாம். அங்கு, தமிழ் மொழியின் வழக்கு, மக்களின் பேச்சு வழக்கால் திரியும் தன்மை தெளிவாகும். அவற்றிற்குரிய காரணங்களும் புலனாகும். இடம், காலம், சூழலுற்கேற்ப இம்மரூஉக்களின் மாற்றம் வேறுபடும் நிலையும் தெளிவுபடும். எனவே, தமிழ்மொழியின் வரலாற்றுத் தெளிவிற்கு, மரூஉப்பெயர்கள் மிகுதியாகத் துணைபுரிவதை நாம் உணர இயலும்.

# இயல் 7
# ஒத்த பெயர்கள்

தமிழகத்தினின்றும் இலங்கை சென்று குடியேறிய மக்கள் பலர். அவர்கள் சென்ற காரணமும் பல. இவ்வாறு சென்ற தமிழர் எவ்வாறு அவண் தங்கள் உறைவிடங்களை அமைத்துக் கொண்டிருக்கலாம் என்பதற்குச் சான்றாக இவ்வாய்வு சில எண்ணங்களைத் தருகின்றது. ஏற்கெனவே அங்கு வாழ்ந்த தமிழர், குடியிருப்புகளை அமைத்து இயல்பாகவே அவற்றிற்குப் பெயரிட்டு வாழ்ந்திருப்பர் என்பது இலங்கையின் தொல்பெயர் களை நோக்கவும் புலனாகிறது, சென்ற தமிழர் நிலை என்ன என்பது வினா. ஏற்கெனவே வாழ்ந்த தமிழர் இருப்பிடங் களைத் தாமும் உறைவிடமாகக் கொண்டிருப்பர். எனில், புதிய பெயரிடல் புதியதாக உறைவிடங்களைச் சென்று அமைத்துக் கொண்டனர் என்ற நிலையில் எண்ணும் போது, புதிய பெயர்களைச் சூட்டிய நிலையை எண்ணல் இயலுகிறது. தமிழகத்தில் இருந்து சென்றவர்கள் என்ற நிலையில் மூன்றாக இப்பெயரிட்ட நிலையைச் சுட்டலாம். 1. தாம் சென்ற இடங்களுக்குத் தமது தாயக ஊர்ப்பெயரையே சூட்டியிருக்கலாம். 2. தாயக உணர்வுடன் பெயர் வைத்திருக்கலாம். 3. அங்கேயே சிறிது காலம் வாழ்ந்த பின்னர், தலைமுறையினர் இலங்கை வழக்கு முறையிற் புதிய பெயர்களைச் சூட்டத் தொடங்கியிருக்கலாம். இந்நிலையில் முன் இயல்களில் கண்ட ஊர்ப்பெயர்கள் பற்றிய சிந்தனைகள் பின்னர் குறிப்பிட்ட இரண்டு நிலையிலும் அடங்க, தாயகப் பெயரையே சூட்டிய நிலை இவண் ஆய்வுக் குரியதாகிறது.

தமிழகத்தில் காணப்படும் அதே பெயர்கள் சிலவற்றை இலங்கை ஊர்ப்பெயர்களில் காண்கின்றோம்.

இராமநாதபுரம்

ஈழம்—இலங்கை

கோவளம்

சித்திரமேழி

சேர்ந்தான்குளம்

திருநெல்வேலி

நல்லூர்

நாகர்கோவில்

புத்தளம்

புத்தூர்

பெருந்துறை

மாந்தை

வடசேரி

வல்லிபுரம்

முன்பகுதியில் அமைந்த இலங்கை ஈழம் பெயராய்வு தமிழகத்திலும் இப்பெயர்கள் காணப்படுகின்றதையும், காணப்பட்டதையும் உணர்த்தியது.

பிற, பெயர் நிலையில் தெரிய வருகின்ற ஊர்களே இவை. விளக்கம் எதுவும் கிடைக்கவில்லை. எனினும் இப்பகுதி மக்கள் அங்கு சென்ற பின்னர் வைத்த பெயராகத் தான் இவை இருக்க வேண்டுமே தவிர, ஒத்த உணர்வு காரணமாக ஒரே பெயரை வைத்திருக்கலாம் என்பது நல்லூர், புத்தூர் போன்ற ஒரு சில பெயர்களுக்கே பொருத்த கானதாக அமையும். எனவே முழுமையாகவும், தனித்தனி யாகவும் இப்பெயர்களை ஆயும்போதே தெளிவும், உண்மை யும் பொருந்திய செய்திகள் புலனாக வாய்ப்புண்டு.

## 1 கோவளம்

தமிழகத்தில் சென்னைக்கருகிலேயும், குமரிக்கு அருகிலும் 'கோவளம்' என்ற ஊர்ப்பெயர்களைக் காண்கின்றோம். திருவனந்தபுரத்திலும் கோவளம் என்ற கடற்கரை ஊர் உண்டு. இலங்கையிலும் காரை நகரில் கோவளம் காணப்படு கிறது. இதனைப்பற்றியியம்பும் போது, F. X. C. நடராசா, 'இது தனித் தமிழ்ச்சொல். கடலுள் நீண்டிருக்கும் நிலப்பரப் பினைக் கோவளம் என்று சொல்வர். காரை நகரில் உள்ள இப்பகுதி கடலுள் நீண்டிருப்பது குறிப்பிடத்தக்கது என்ற

கருத்து சுட்டுகிறார்.[1] இது இலங்கையில் பெரும்பாலும் யாழ்ப்பாணத்துக் கடற்கரையோரங்களில் உள்ள ஊர்க்குரிய பெயராக வழங்குகின்றது என்கிறார் க. த. திருநாவுக்கரசு.

**2. சித்திரமேழி**

யாழ்ப்பாணத்தில் அமைந்துள்ள ஊர் இது. அழகிய வேலைப்பாடுடைய கலப்பை என்ற பொருளில் அமையும் இப்பெயர் பற்றிய தமது ஆய்வாக, இது 'தமிழகத்துச் சித்திரமேழி மக்கள் இங்கு வந்து குடியேறிய போது, தம் தாய்நாட்டுப் பெயரை இங்குச் சூட்டலானார்கள் எனக் கொள்வதில் தவறில்லை' எனக் கூறும் கலாநிதி இ. பாலசுந்தரம் இதற்குப் பல சான்றுகளையும் எடுத்தியம்புகின்றார்.[2]

**3. சேந்தன் குளம்**

தமிழகத்தில் உள்ள சேந்தான் குளம் என்ற இடத்தைச் சேர்ந்த மக்கள் இங்கு வந்து குடியேறிய போது இப்பெயர் ஏற்பட்டிருக்கலாம் என்ற கருத்து காணப்படுகிறது.[3]

**4. நல்லூர்**

தமிழகத்தில் பல ஊர்கள் நல்லூர் என்னும் பெயருடன் திகழ்கின்றன. இடைக்காலத்திலேயே நல்லூர் என்றதொரு ஊரினைத் தஞ்சையில் காண்கின்றோம். இதனைப் போன்று யாழ்ப்பாணத்திலும் நல்லூர் அமைகிறது. 'தென் பாண்டி நாட்டில் உள்ள செல்லிருக்கை என்னும் இடத்திலிருந்து வந்த ஆரியச் சக்கரவர்த்தி வழிவந்த மன்னர்கள் சிங்கை நகரென வழங்கிய நல்லூரைத் தலைநகரமாகக் கொண்டு யாழ்ப்பாணப் பகுதியை ஆண்டனர்' என்ற எண்ணத்தைக் காணுகையில்,[4] சிங்கை நகரின் முன்னயை பெயர் நல்லூர் என்பது தெரிகிறது. இன்று சிங்கை நகர் மறைந்து நல்லூரே விளங்குகிறது என்பதுடன், தமிழ் நாட்டில் இருந்து வந்த ஆரியச் சக்கரவர்த்தி, தம் தாய்நாட்டு உணர்வுடன் இப்பெயரை இவ்விடத்திற்கு வைத்திருக்கலாம் எனவும் தோன்றுகிறது.

**5. புத்தளம்**

குமரிமாவட்டத்தில் புத்தளம் என்றதொரு கடற்கரை ஊர் அமைகின்றது. இத்தகையதொரு பெயரினை ஊர்ப்பெயராக

1. காரைநகர் மான்மியம்—ப—4
2. இலங்கை இடப்பெயராய்வு—பக்—64—66
3. ,, ,, ப—8.
4. ஈழநாட்டு இடப்பெயர்களில் தமிழின் ஆளுமை—ப—228.

இலங்கையிலும் காண்கின்றோம். அளம் என்ற சொல் உப்பளத்தைக் குறிக்கும் நிலையிலும, கடற்கரை ஊராக இது இருத்தலும் புதிய—அளம் என்ற அடிப்படையில் புத்தளம் தோன்றியிருக்கலாம். ஆயின், 'புத்தளம்—பாம்புப் புற்றுகள் இருந்த காரணத்தால் புற்றளம் புத்தளம் ஆகியது. வெளி நாட்டார் மொழிகளில் 'பட்டாள நகர'மென்றும், 'நாகபட்டினம்' என்றும் இவ்வூர் குறிக்கப்பெற்றுள்ளது.பாம்பு புற்றுகளுடன் பாம்புகள் இருந்த காரணத்தால் நாகபட்டினம் என்ற பெயரும் பிற்காலத்தே புத்தளம் என்ற பெயரும் வருவதாயிற்று. நாகர்கோயிலின் அருகே புத்தளம் என்ற ஊர் காணப்படுவதுடன் புத்தேரி என்ற ஊரின் அருகாமையும் இவண் 'நாகருடன்' இப்பகுதி தொடர்பைக் காட்டவல்லது.

### 6. பெருந்துறை

தமிழகத்திலும் இலங்கையிலும் காணப்படும் பெருந்துறை, திருப்பெருந்துறை என இரு பகுதியினராலும் அழைக்கப்பட்ட ஊர். இரண்டும் சமயச்சார்பு ஊர் ஆகையால் இரண்டையும் 'திரு' அடைசேர்த்து, திருப்பெருந்துறை என அழைத்து வந்துள்ளனர்.

தஞ்சாவூரில் உள்ள, 'கோகழி' எனத் திருவாசகத்தில் மாணிக்க வாசகர் சுட்டும் ஊரே 'பெருந்துறை' என்ற பெயரையும் உடையது. பெருந்துறை ஊரைக் குறிப்பது என்பதும் அங்குள்ள கோயிலே கோகழி என்பதும் மு. அருணசலம் கருத்து. எனவே பெரிய துறையினைக் கொண்ட இடம் என்பது பின்னர் பெருந்துறை என ஊரினைக் குறிக்கத் தொடங்கியிருக்கின்றது என்பது ஈண்டு உணரப்படுகின்றது.

இப்பெருந்துறை மக்கள் இலங்கைக்குச் சென்று அங்குத் தாங்கள் இறங்கிய இடத்திற்கும் பெருந்துறை எனப் பெயர் சூட்டினரா என்ற வினா எழுகிறது. இதற்கு விடையாக ஒரு கருத்தினைச் சுட்டலாம்.[5]

'மட்டக்களப்பு மாநகரம் 2 களப்பால் சூழ்ந்தது. ஒரு காலத்தில் மட்டக்களப்பு துறைமுகமாகவும் அமைந்திருந்தது. துறைமுக வழியாக வந்து களப்பினூடே ஓடத்தைச் செலுத்தி மக்கள் வந்து இறங்கிய இடமே பெருந்துறையாம்,

5. மட்டக்களப்பு மக்கள்வளமும் வாழ்க்கையும்—ப-111-112.

இப்பெருந்துறை, மாந்தீவுக்கு எதிரே கிழக்குத் திசையில் வலையிறவுத் துறைக்கும், வேப்படித் துறைக்கும் இடை நடுவில் அமைந்திருந்தது. ஆகவே களப்பினுள் அமைந்த இந்தத்துறை பெரியதாக இருந்தபடியால் அதற்குப் பெருந்துறையென பெயர் வந்துள்ளது பின்னர் இவண் கோயில் அமைய, திருப்பெருந்துறை எனப் பெயர் அமைந்தது.'

மேற்சுட்டிய கருத்துகளை நோக்க இரண்டு எண்ணங்கள் புலப்படுகின்றன. தமிழர் சூட்டிய பெயர், எனவே இயற்கைச் சார்புடன் பெரியதுறை என்ற நிலையில் பெருந் துறை என இயல்பாகச் சூட்டியிருக்கலாம். அடுத்து, 'களப்பினூடே ஓடத்தைச் செலுத்தி, மக்கள் வந்து இறங்கிய இடமே பெருந்துறை' எனக் காண, எந்த மக்கள் என்ற கேள்வி எழுகிறது. எனவே தமிழகத்தினின்றும் வந்திறங்கிய மக்களா? அல்லது தமிழகத்தின் தஞ்சைப் பெருந்துறை மக்களா என்ற எண்ணம் எழுகிறது. தஞ்சைப் பெருந்துறை மக்கள் எனில் தங்களது ஊரினைப் போன்று ஒப்புமை கருதி சூட்டியிருக் கலாம். தமிழர் எனின், அதன் இயற்கைச் சூழல் நோக்கி அமைத்திருக்கலாம். எனினும் வரலாறு கொண்டு, இங்கு வந்த மக்கள் பற்றிய தெளிவு கிடைப்பின், இப்பெயர் சூட்ட லுக்கு உரிய காரணம் தெளிவுபட வாய்ப்புண்டு. மேலும் பெருத்துறை, பின்னர் கோயில் சார்பு கருதி, தமிழகத்தில் 'திரு' என்ற இணைவுடன் கருதப்பட்டமை இவண் இக்கோயி லுக்கும் பொருத்தமுறச் சார்கின்றது. எனவே தமிழரின் உணர்வு இங்கும் ஒப்புமையுடையதாகிறது.

'திரு' என்ற அடைபற்றிய எண்ணம் எழும் போது, தமிழகம், இலங்கைத் தொடர்பு மேலும் விளக்கம் பெறு கிறது. தமிழகத்தில் பண்டைக் காலத்தில் இல்லாத இந்த 'திரு' அடை, பின்னர் பக்திக் காலத்தில், பக்தியின் செல்வாக்குக் காரணமாக, இறைச் சிறப்புடைய தலங்கள் அனைத்தும் 'திரு' சேர்த்துச் சுட்டப்பட்டமையை வரலாறு காட்டுகின்றது. 'திரு' இல்லாத ஊர்கள் எல்லாம் பின்னர் 'திரு' இணைத்துச் சுட்டப்பட்டன. இதே மரபு இலங்கை யிலும் காணுவதற்குரியதாக அமைகிறது.

மட்டக்களப்பில் திருப்பெருந்துறை போன்று, திருமுருகன் கோயில் கொண்டுள்ள 'திருக் கோவில்' மட்டக்களப்பின்

தென்கோடி ஊராகத் திகழ்கின்றது. இக்கோவிலைப் பற்றிய எண்ணம், இவ்வூர் பற்றி அறிய உதவுகின்றது.

'காடு சுற்றி வந்த வேடர்கள் ஒருநாள் ஒளி வீசும் தங்கவேல் ஒன்று நாவற்கிளையில் ஊடுருவிப் பிரகாசிப்பதைக் கண்டு, கொத்துப் பந்தலிட்டு அவ்வேலைக் கும்பிட்டு வந்தனர். பின்பு இவ்விடயத்தை விபரமாக வேந்தனுக்குத் தெரியப் படுத்தினர். வேந்தனும் செய்தியினை அறிந்து வியப்புற்று அவ்விடத்துக்குத் தானே வந்து தங்கவேலைக் கண்டு தரிசித்து அந்த இடத்திலே ஆலயம் அமைப்பித்து, ஆலயப்பணிக்கென மக்களையும் குடியேற்றி, மானியங்களும் வழங்கினான்'• என்ற எண்ணம் இவண் சிந்தனைக்குரியது.

எனவே வெள்ளை நாவற்பதி என்ற இடத்தில் கோயில் கட்டப்பட்ட பின்னரே இந்த இடத்தில் மக்கள் வாழத் தொடங்கியிருக்கின்றனர் என்ற கருத்தினையுணர்கின்றோம். எனவே வெள்ளை நாவற்பதி என்பது இடப்பெயராக அமைந்துள்ளது. பின்னர் 'கோயில்' அமைய கோயிலிருந்த இடத்தின் பெயர் பின்னர் ஊருக்கும் ஆயிற்று. இறைப் பெருமை 'திரு' என்ற அடையைச் சேர்த்துக் கொள்ள தூண்டி யுள்ளது. மேலும் 'திருக்கோயில்' என்ற பெயரையே முதலில் இருந்து மக்கள் அழைக்கத் தொடங்கியிருக்கலாம் எனவும் எண்ணுதல் இயலுகிறது. ஆயின், பழம் சைவத் தலங்களான கோணேஸ்வரம், கேதீஸ்வரம் போன்ற தலங்கள் பின்னரே 'திரு' அடை இணையப்பெற்று வழங்கி வந்தன என்பதை நாம் தேவாரப் பாக்களுடன், இன்றைய வழக்குண்மையையும் கொண்டு எண்ணலாம்,

'கோணமலை' என்று நில அமைப்பு காரணமாக அமைந்த ஊர்ப்பெயர், பின்னர் இறைப்பெருமை காரணமாகத் திருக்கோணமலை என வழங்கப் பெற்றுள்ளது..

கேது வணங்கிய ஈஸ்வரத்தலம் பின்னர் திருக்கேதீச்சுரம் ஆயிற்று.

திருக்கோயில் என்ற ஊருக்கு வெள்ளை நாவற் பதியுடன், கண்டபாணத் துறை என்னும் பெயரும் இருந்துள்ளது.

6. மட்டக்களப்பு மக்கள் வளமும் வாழ்க்கையும்—ப –126.

இதனைப் பற்றிய விளக்கமாக, 'வெள்ளை நாவற் மரத்திலே இருந்த வேலைக் கண்டு, கோயில் அமைத்த பின்பு, அவ்வூருக்குக் கண்டபாணத் துறை என்றபெயர் ஏற்பட்டதெனத் தெரிய வருகிறது. கிழக்கிலங்கையில் மிகவும் பிரபல்யம் வாய்ந்ததும், கண்ணகை கோயில்களில் தவறாது படிக்கப்பட்டு வரும் வழக்குரை ஏடுகளிலும், யாழ்ப்பாணம் மந்திகை கண்ணகை அம்மன் கோவிலிற் படிக்கப்பட்டு வரும் கோவலனார் கதையிலும், இப்பெயர் கண்டபாணம், கண்டபாணத் துறை என்றே வழங்கி வருகிறது எனினும் இப்பெயரினைக் கந்தன் பாணம் துறை எனக் கொண்டு, கந்தப்பாணத்துறை என எழுதியும் வருகிறார்கள்[7] என்ற கருத்து அமைகிறது.

இப்பெயர்க் காரணம் மேலும் ஆய்வுக்குரியது.

## 7. வல்லிபுரம்

யாழ்ப்பாணத்தில் அமையும் வல்லிபுரம் என்ற ஊர் பண்டு இலங்கை நகர் எனப்பட்டது. சிங்கை நகர் கனக சூரியன் என்னும் அரசன் காலம் வரையில் தலைநகராக அமைந்தது. (கி. பி. 1440ல் அரியாசனம் ஏறியவன் இவன்) பின்னர் கோட்டை மன்னவனான ஆறாம் பராக்கிரம பாகுவின் மகனான செண்பகப் பெருமாள் சிங்கை நகரைச் சிதைத்து, நல்லூரில் புதுநகர் அமைத்துக் கொண்டதை வரலாறு காட்டுகிறது.[8] சிங்கை நகர் தன் சிறப்பினை யிழந்தமை காரணமாக அப்பெயரும் இழந்தது அவ்வூர். பின்னர் வல்லிபுரம் என அழைக்கப்பட்டது.

வல்லிபுரம் என்ற பெயர், தமிழகத்தில் வழக்கில் உள்ள பெயர். இங்கிருந்து சென்ற மக்கள் அங்கு சென்று சூட்டிய பெயர் என்பது க.த. திருநாவுக்கரசுவின் கருத்து.[9] மேலும் வல்யாறு பின்னர் தொண்டைமானாறு என வழங்கப்பட்டது என்ற எண்ணத்தைக் காண்கின்றோம். எனவே வல்லிபுரம், வல்லியாறு என்பது இவண் எண்ணத் தக்கனவாக அமைகின்றன. தொன்மையான பெயர் என்பது இவண் சுட்டத்

7. மட்டக் களப்பு மக்கள் வாழும் வாழ்க்கையும்—ப.127
8. ஈழமும் தமிழரும்—ப-67
9. இலங்கையில் தமிழ்ப் பண்பாடு—ப—189

தக்கது. இந்நிலையில் அன்று தாவரப் பெயர்களை மிகுதியாகச் சூட்டும் வழக்கம் உள்ள தமிழர் 'வல்லி' மிருந்த நிலையில், இப் பெயர்களைச் சூட்டியிருக்க வாய்ப்பு உண்டு.

ஒத்த ஊர்ப்பெயர்கள் பற்றி ஆய்வு முழுமையுறின் தமிழகத்தின் எந்தப் பகுதியிலிருந்து, இலங்கையின் எப் பகுதிக்குத் தமிழர்கள் மிகுதியாகச் சென்றனர்? சென்ற நோக்கம் என்ன? போன்றவற்றைத் தெளிவாக அறியலாம்.

தமிழகம் இலங்கை இருபகுதிகளிலும் ஒத்த ஊர்ப்பெயர்கள் இன்னமும் மிகுதியாகக் காணப்படலாம். இவ்வாய்வுத் தொகுப்பில் கிடைத்தன ஒரு சிலவே காலந்தோறும் பல்வேறு காரணங்களால் தமிழர் இலங்கை சென்றுள்ளனர். எனவே தங்கள் ஊர்ப்பெயர்களின் அமைப்பை ஒட்டியே, தங்கள் சிந்தனைகளை ஒட்டியே இலங்கை சென்ற பின்னரும் பெயர் இட்டிருக்கலாம். எனவே தமிழக ஊர்ப்பெயர்களில் உள்ள பொதுக்கூறு, சிறப்புக்கூறு, தனிப்பெயர்களையும் பெரும் பாலும் ஒத்து அமைந்திருக்க வாய்ப்பு அமைகிறது மேலும், இப்பெயர்களில் நிகழ்ச்சிப் பெயர்கள் வரலாற்றுப் பெயர்கள் போன்றவற்றை ஆராயின் வேறுபட்ட சிந்தனைகள் பல கிடைக்க வழியுண்டு.

ஈழம் இலங்கை பெயர்கள், இலங்கை தமிழகம் இரு பகுதி யிலும்சுடடப்படும் பெயர்கள் ஆய்வுசெய்யப்படும் போதுபுதிய பல செய்திகள் கிடைத்ததை முன்னர் கண்டோம். அவற்றைப் போன்று இந்த ஒப்புமையுடைய அனைத்துப் பெயர்களையும் ஆராயும் போது தமிழகம் இலங்கை தொடர்புடன் காலங்கால மாகஎந்த மக்கள் எந்தப் பகுதிக்கு எக்காரணத்துக்காகக் குடியேறினர் போன்ற எண்ணங்களையும் தெளிவாகப்புரிய முடியும்.

# முடிவுரை

'தமிழகம் இலங்கை ஊர்ப்பெயர்கள்—ஓர் ஒப்பாய்வு' என்ற இவ்வாய்வில் வரலாற்றுத் தொடர்பாகச் சில முடிவுகள் கிடைக்கின்றன. பல விதத்தில் ஒன்றுபடும் நிலை, சில கூறு களில் வேறுபடும் நிலை, நெருக்கத்தையும், நெருக்கமின்மை யையும், தொடர்பையும் தொடர்பின்மையையும் இந்நாடு களிடையே வெளிப்படுத்துகின்றன.

ஏழு இயல்களின் வாயிலாக இரண்டு நாடுகளிலும் கிடைத்த குறைந்த அளவிலான ஊர்ப்பெயர்களைத் தொகுத்தும், வகைப்படுத்தியும் காணும் போது வெளிப்பட்ட சிலஎண்ணங்கள் இவண் இயம்பப் படுகின்றன.

1. இலங்கை, தமிழகத்தின் அண்மையில் அமைந் திருப்பதைக் காண்கின்றோம். வரலாற்றறிஞர்கள், இலங்கை, தமிழகத்துடன் இணைந்த பகுதி என்று சுட்டுகின்றனர். ஊர்ப்பெயர்களும் இருபகுதியினரும், இருபகுதியும் நெருங்கியத் தொடர்பு கொண்டவர்கள் என்பதையும், முன்னைய அறிஞர்கள் கருத்தில் வேறுபாடு இல்லை என்பதையும் உறுதி படுத்துமாறு அமைகின்றன.

2. தமிழகம் ஒரே பெயருடன் திகழ, இலங்கை பல பெயர்கள்கொண்டதாகத் திகழ்ந்திருத்தல் வெளிப்படுகின்றது.

3. ஊர்ப்பெயர் அமைப்பு முறையில் ஒற்றுமை முதனிலையில் காணப் படுகின்றது.

4. பொதுக்கூறு ஆய்வில் ஒற்றுமையும் வேற்றுமையும் காணப்படுகின்றன.

5. சிறப்புக்கூறு ஆய்விலும் இணைவும் தனித்த நிலையும் காணப்படுகின்றன.

6. தனிப்பெயர்களும், மரூஉப் பெயர்களும் பற்றிய ஆய்வு, இவ்வாய்வு ஆழமாக ஆய்வுக்குட்படுத்தப்பட வேண்டியது; ஆயின் ஆழமான ஆய்வு செய்யப்படாதது என்பதையும், தனிமனித உழைப்பிற்குக் காலம் மிகுதியும்

தேவை என்ற நிலையில் குழுவாக இணைந்து ஆய்வதற்குரிய தொன்று என்பதையும், தமிழ் மொழி அறிவுடன், இலங்கையைப் பொறுத்த வரையிலும் முக்கியமாகச் சிங்கள மொழி அறிவும் தேவைப்படும் ஒன்று என்பதையும் உணர்த்தி

7. ஒத்தபெயர்கள், தமிழகப்பெயர்களில் சில இலங்கையில் காணப்படுதல் குடிப்பெயர்ச்சியின் விளைவாகலாம் என்பதைக் காட்டி, இவற்றை விளங்கிக் கொள்ள வேண்டும் என்ற விருப்பு இருப்பினும், தெளிவுகள் கிடைக்காத நிலையில், ஆழமான ஆய்வின் தேவையை யுணர்த்துவனவாக அமைகின்றன.

இவ்வாறு இந்த ஆய்வு ஆழமாக ஆய்வு செய்யப்பட இயலாத நிலையில் முடிந்த முடிவுகளாக அல்லது உறுதியான முடிவு களைத் தராவிடினும், கருதுகோள்களாகக் குறிப்பிட்டவற்றைப்பற்றிய சில எண்ணங்களையும், சில ஊர்ப்பெயர்கள் பற்றிய சில சிந்தனைகளையும் தந்து வெற்றி பெற்றிருக்கிறது என்பதை இவண் சுட்டலாம்.

**கருதுகோள்—1**

ஊர்ப்பெயர்களில் அமையும் பொதுக்கூறும் சிறப்புக்கூறும் முறையே,நிலவியல், மக்கள் வரலாற்றையுணர்த்த மிகுதியாகத் துணைசெய்ய, தனிப்பெயர்களும் மரூஉப்பெயர்களும் மொழி வரலாற்றையுணர மிகுந்த துணைபுரிகின்றன:இது பொதுவாக ஊர்ப்பெயர்கள் ஆய்வில் உறுதிப்படுமா?

'தமிழக ஊர்ப்பெயர்கள்' நூல் தமிழகத்தில் உள்ள ஊர்ப்பெயர்கள் சிலவற்றை நோக்கி இக்கருத்து உறுதியாகுமாற்றைத் தெரிவிக்கிறது. இதனைப்போன்று இங்கும் இக்கருத்து மீண்டும் உறுதிப்படுகிறதா எனப்பார்க்க, சில எண்ணங்கள் எழுகின்றன.

மனிதன் எங்கு வாழ்ந்தாலும் அடிப்படையுணர்வுகளில் மாறுபாடு எழ வாய்ப்பில்லை என்பது உறுதி. பாதுகாப்பிற்காக உறைவிடத்தை அமைத்துக் கொண்டு வாழத் தொடங்கியவன் மனிதன். பின்னர் அதனைப் பிறருக்குச் சுட்டவும், பிற உறைவிடங்களிலிருந்து அவற்றை வேற்றுமைப் படுத்திக் காட்டவும் பெயர்களை அவற்றுக்குச் சூட்டுகின்றான். இந்நிலை எல்லா மாந்தருக்கும் பொருந்தும். எனவே

அடிப்படையுணர்வு ஒன்று காரணமாக, அவர்கள் சூட்டும் பெயர்களிலும் ஒற்றுமை காணப்படலாம்.

வெப்ப நாடுகளைப் பொறுத்தவரையிலும் நீரின் தேவையையுணர்ந்த மனிதன் நீர்நிலைகட்கு அருகாமையில் தங்கள் இருப்பிடங்களை அமைத்துக் கொள்கின்றான். தாவரங்களின் அருகாமை அவனுக்கு இயற்கையாக நிழலை அளித்திருக்க வாய்ப்புண்டு. இயற்கை நீர்நிலையில்லாத பகுதியில் செயற்கையாக நீர்நிலை அமைத்துக் கொள்வது அவன் இயல்பு. இவ்வாறு குடியிருப்புகளில் மக்கள் பெருகி வாழும்போது காடுகொன்று நாடாக்குதலும் இயல்பு. ஆயின் குளிர் நாடுகளைப் பொறுத்தவரையிலும் வெப்பத்தை நாடியிருப்பர். எனவே இத்தன்மையும் மனித உயிர்கள் அனைத்திற்கும் பொதுவான தன்மையாக அமைதல் இயலலாம் என்பதை எண்ணிப்பார்க்கலாம். இந்நிலையில், பல அடிப்படைகளிலும் தொடர்புடைய தமிழகம், இலங்கை தமிழ் மக்களிடம் இத்தகைய நெருக்கம் காணப்படுவதில் வியப்பேதுமில்லை. எனவே இந்த கருதுகோளிலும் பொருத்தம் இருக்க வாய்ப்புள்ளது.

பொதுக்கூறு எனப்பார்க்க, பெரும்பாலான கூறுகளில் ஒற்றுமையுடன் திகழினும், பல தனிப்பட்டு இலங்கையில் காணப்படுகின்றன. இவையும் தமிழ்மொழி திரிபுவழக்கு வட்டாரவழக்கு சிங்களம்போன்ற பிறமொழித் தொடர்பு காரணமாகஅமைந்திருக்கக் கூடும்.இவைதனித்தனியே ஆராயப் படும்போது தமிழ்மொழி திரிந்து வழங்கும் தன்மை இலங்கைத் தமிழரின் வட்டார வழக்கு, பிற மொழித் தொடர்பு போன்ற அனைத்தும் தெளிவுறும். இலங்கையில் இப்பொதுக் கூறுகளைப் பற்றி ஆராயும் போது இவை அனைத்தும் நிலவியலுக்கு மிகுந்த தொடர்பு காட்டுவதும் புலனாகிறது. மேலும் இவண் குடா, தீவு, முனை போன்ற பொதுக்கூறுகள் ஊர்ப்பெயர்களில் மலிந்து காணப்படுகின்றன. களப்பு மட்டக்களப்பில் உள்ளது, கரைப்பகுதிகளும் மலிந்து காணப் படுகின்றன. எனவே இலங்கையின் இப்பகுதிகள் கடலுடன் நெருக்கம் மிகுதித்தன்மையுணரப் பயன்படுகிறது. ஆயின் தமிழகத்தில் இக்கூறுகள் இல்லை. குடா, தீவு பொதுக்கூறுகள் தமிழக ஊர்ப்பெயர்களில் இருப்பதாகத் தெரியவில்லை. எனவே இலங்கை கடற்கரை யொட்டிய இப்பகுதிகளில்

மக்கள் மிகுதியாக வாழ்ந்திருக்கலாம். எனவே தங்கள் குடியிருப்புகட்கு இச்சொற்களைப் பொதுக்கூறாகக் கொண்ட ஊர்ப்பெயர்களை வைத்து இருக்கலாம் எனத் தோன்றுகிறது.

மேலும், கேணி குளம் போன்ற பொதுக் கூறுகள் யாழ்ப்பாணம் மட்டக்களப்பில் மிகுந்து காணப்படுகின்றன. இராமநாதபுரமாவட்டத்தில் ஏரிகளின் பெருக்கம் எண்ணத் தக்கது. எனவே மழை குறைவு காரணமாக நீர்த்தேக்கங்களை மிகுதியாக நாடிய மனநிலை காரணமாக இந்நீர் நிலைகள் பெருகியிருக்கலாமா என்ற நிலையில் எண்ணிப்பார்க்கலாம். தமிழகம் இலங்கையைக் காட்டிலும் பரந்து பட்டு இருப்பது மேலும் பல நில அமைப்புகளைத் தெளிவு படுத்த உதவு கிறது. இவ்வாறு இவற்றை விரிவாக ஆராயின் எந்தப் பகுதி யில்எந்த மாதிரியான நிலவியல் அமைப்பு காணப்படுகிறது இலங்கை தமிழகம் ஒத்த பகுதிகள் எவை யெவை? எவ்வாறு ஒத்து அமைகின்றன போன்ற செய்திகளையெல்லாம் தெரிந்து கொள்ளல் இயலலாம். எனவே இப்பொதுக் கூறுகள் நில அமைப்பினைத் தெரிந்து கொள்ள மிகுந்த துணைபுரிகின்றது என்பது இவண் உறுதிப்படுகின்றது.

மக்கள் வரலாறு எனக்காண சிறப்புக் கூறினை எண்ணிப் பார்க்கலாம். தமிழக ஊர்ப்பெயர்களின் வரலாறு எனக்காண, மக்கள் பெயருடன் அவர்களின் சாதி, தொழில் தொடர் பானவை, நிகழ்ச்சிகள், உருவாக்கம், மங்கலவழக்கம் முதலியனவை மிகுதியாகத்தெளிவு பெறுகின்றன, ஆயின் இலங்கையைப் பொறுத்தவரைக்கும் தாவரம், நீர் நிலை, நில அமைப்பு மிகுதியாக இணைவது அமைகிறது. சிறப்புக் கூறுகளில் ஆட்பெயர்கள் மிகுதியாக இல்லை. இருப்பின், இலங்கைத் தமிழர் வரலாற்றைப் புரிந்து கொள்ள அவை உதவும் என்பது உறுதி. மேலும், திங்களூர், சூரியன் ஏந்தல் போன்ற கோள்களின் பெயர்கள், எண்ணுப் பெயர் உணவுப் பெயர், (ஐயத்திற்குரியனவாகச் சில உள்ளன) உறுப்புப் பெயர், ஆடவர், மகளிர், பருவப் பெயர் போன்றன வற்றை இலங்கையில் காணயியலவில்லை. இத்துடன் அமைப்புக் கூறின் வளர்ச்சி பற்றிய ஓர் செய்தியையும் இவண் பொருத்தம் கருதி எண்ணிப்பார்க்கலாம்.

பெரும்பாலும் இலங்கைப் பெயர்கள் தனிப்பெயர்களாக, பொதுக்கூறும் சிறப்புக்கூறும் இணைந்த பெயர்களாக அமை

கின்றன. ஒரு சில பெயர்களே முன் அடை அல்லது பின் அடை இணைந்த பெயர்களாக உள்ளன. ஆயின், தமிழகத்தில், தனிப் பெயர்கள், பொதுக்கூறு + சிறப்புக்கூறு இணைந்த பெயர்களுடன், மிகுதியான பெயர்களை இன்றைய குடியிருப்புகளின் மிகுதிக்கு இணங்க, எண்களையும், சொற்களையும் முன் அடை பின் அடை இணைக்கப் பெற்ற ஊர்ப்பெயர்களாகக் காண்கின்றோம். இதற்குரிய காரணம் ஆராயத்தக்கது.

இலங்கையைச் சார்ந்த டாக்டர். ஆர். விஜயலட்சுமி அவர்களிடம் நேரில் இதைப் பற்றி வினவிய போது, அவர்கள் யாழ்ப்பாணம், பகுதி சிறிய பகுதி, ஏற்கெனவே அங்கு மக்கள் பரவி வாழ்கின்றனர். எனவே முன்னர் வைத்த பெயர்களே அங்குக் காணப்பட வாய்ப்புண்டு. மக்கள் தொகைப்பெருக அங்குள்ள மக்கள், குடியிருப்புகள் மிகுதியாக இல்லாத பிற பகுதிகளுக்குச்சென்று குடிப்பெயர்ச்சி செய்துகொள்கின்றனர்' என்ற எண்ணம் கிடைத்தது. மட்டக்களப்பில் சிங்களவர்கள் மிகுதியாகத் தம் குடியிருப்புகளை அமைத்துக் கொள்கின்றனர் என்று கேள்வியுறும் போது, இப்பெயர்களில் ஒரு தேக்க நிலையும் வளர்ச்சியின்மையும் காணப்பட்டமைக்குரிய காரணம் புலனாகிறது. எனவே பிற ஊர்ப்பெயர்கள் தொகுக்கப்பட்டதன் பின்னரும், இந்நிலையே அமையின், இது பற்றிய ஆய்வு மீண்டும் தொடர்வது இன்றியமையாதது. எனினும் கிடைக்கக் கூடிய ஆட்பெயர்க்கூறுகள், தமிழர் பற்றிய செய்திகளையே இயம்புகின்றன என்பது புலப்படுகிறது.

மூன்றாவதாக, தமிழ்மொழி ஆய்வுக்குத் தனிப்பெயர்களும் மரூஉப் பெயர்களும் மிகுதியாகத்துணையாவன என்ற நிலை தமிழகம் போன்றே இலங்கையிலும் அமைகிறது. ஆயின் தமிழகத்தைப் பொறுத்தவரை, தமிழ்மொழி மட்டும் தெரிந்து கொண்டு இவ்வாய்வினை அணுக, இலங்கையில் சிங்களமொழி அறிவும் மிகுதியாகத் தேவைப்படலாம். எனினும் தனிச்சொற்கள் மருவி வழங்கும் நிலை, மருவும் நிலை இடத்திற்கு இடம் மாறுபடும் நிலை, வட்டார வழக்குகள் இவ்வாய்வில் புலப்படுகின்றன.

எனவே முதல் கருதுகோள் பெரும்பாலும் ஏற்புடையதாக அமைய வாய்ப்பு அமைகிறது. முழுமையாக ஆராயும் தன்மை இன்னமும் உறுதி அளிக்கலாம்.

**கருதுகோள்-2**

தமிழக ஊர்ப்பெயர்களில் முதன்மையானது இயற்கைச் சார்பு பெயர்கள். இவற்றுள்ளும் தாவரப்பெயர்களே முதனிலை வகிக்கின்றன என்பது ஓர் எண்ணம். இச்சிந்தனை இலங்கைக்கும் பொருந்துமா?

முன்பு கண்டது போன்று தமிழக ஊர்ப்பெயர்களுக்கென்று ஒரு வரலாறு உண்டு. இவ்வரலாற்றினின்றும் தமிழக ஊர்ப் பெயர் ஆய்வாளர்களால் உணரப்பட்டதே இயற்கை சார்ந்த ஊர்ப்பெயர்களும் அதற்கு முதனிலையாகத் தாவரப் பெயர் களும் முதலில் வெப்ப நாடுகளைச் சார்ந்த மனிதர் சூட்டிய ஊர்ப்பெயராகலாம் என்பது. இந்நிலையைக் கருதுகோளாகக் கொண்டு உலகெங்கும் உள்ள வெப்பநாடுகள் அனைத்திற்கும் பொருந்துமா எனப் பார்த்தல் நோக்கம். இவண் இலங்கைப் பெயர்களை நோக்கவும் இக்கருதுகோள் உறுதிப்படலாம் என்று தோன்றுகிறது.

முதல் கருதுகோள் விளக்கத்தில் அமைந்த சிறப்புக்கூறு பற்றிய விளக்கத்தில் இலங்கையில் தமிழகம் போன்று ஊர்ப் பெயரிடுதலில், ஒரு வரலாறு காண முடியவில்லை என்று கண்டோம். ஆட்பெயர் கூறுகள் மிகுதியாக இல்லை என்பது அங்குப் புலனாகிய ஓர் எண்ணம். இந்நிலையில் அங்குள்ள பெயர்களை எல்லாம் நோக்கப் பெரும்பான்மையும் இயற்கை தாவரம், நீர்நிலை சார்ந்தனவாகவே காட்சி அளிக்கின்றன. இவை முழுமையாகத் தனித்தனியே ஆய்வுக்குட்படும்போது தாவரச்சார்பு பெயர்கள் முதலிடம் பெறலாம் என்ற கருத்து மேலும் தெளிவு பெறலாம்.

**கருதுகோள்—3**

ஊர்ப்பெயர்களைத் திட்டமிடல் தேவையா?

ஊர்ப்பெயர்களைத் திட்டமிடும் பணி முதன்மையானது என்பது இன்று பல ஊர்ப்பெயர் ஆய்வாளர்களாலும் உணரப் பட்டு வருகிறது. உணர்ந்ததைச் செயலில் காட்டத் தொடங்கி விட்டனர் கேரள நாட்டு ஊர்ப்பெயர் ஆய்வாளர்கள். அரசாங்கமும் துணைபுரிவதுடன் அண்மையில் பல ஊர்ப் பெயர்களைத் திட்டப்படுத்தி ஆணை பிறப்பித்திருப்பது

சிறந்த எடுத்துக்காட்டு. ஊர்ப்பெயர் ஆய்வாளர்களின் வெற்றியையும் இது எடுத்துக்காட்டுகிறது.

தமிழக ஊர்ப்பெயர்களை நோக்க, திட்டமிடப் படாத நிலையில் ஊர்ப்பெயர்கள் எவ்வாறு எல்லாம் திரிகின்றன? எவ்வாறு பல கற்பனையும், பொய்களும் அவற்றுள் இணைய அவை இடமளிக்கின்றன. இந்நிலை, ஊர்ப்பெயர்களின் தோற்றக் காரணத்தை மறைத்து, வரலாற்றை மறைக்கவும், வரலாற்றில் திரிபுகளை ஏற்படுத்தவும் வழிகோலுகின்றன போன்ற எண்ணங்கள் புலப்படுகின்றன. இக்கருத்து இலங்கையைப் பொறுத்தும் ஒத்து அமைகிறது.

இலங்கையின் பல தமிழ்ப்பெயர்கள் இன்று சிங்களவர் தொடர்பால், சிங்களப் பெயரெனச் சுட்டும் வழக்கம் காணப் படுகின்றதை அறிஞர் காட்டுவர். அம்பாறை என்பது அழகிய பாறை எனத் தமிழில் தெளிவாக அமைகிறது. எனினும், இப்பெயர் தமிழ்ப்பெய்ர் என்றும் சிங்களப் பெயர் என்றும் கருத்து மாறுபாடுகள் அமைகின்றன. (இதனைச் சிங்களப் பெயரென்பர் டாக்டர். விஜயலட்சுமி (நேரில் கேட்டது). இதனைப் போன்று பாணதுறை (பாணன் + துறை) பாணம (பாணன் + அமை) அம்பிட்டிய (அம் + பிட்டி) போன்ற பெயர்களை, கலாநிதி இ. பாலசுந்தரம் சுட்டுகின்றார். எனவே இத்திட்டமிடல் ஊர்ப்பெயர்களைப் பொறுத்தவரையிலும், ஊர்ப்பெயர்கள் ஆய்வின் நோக்க நிறைவேற்றலுக்குச் செய்ய வேண்டியதொரு பணி என்பது தெளிவுபடுகிறது. இதற்கு ஒவ்வொரு ஊர்ப்பெயரும் தனித்தனியே வரலாற்று நிலையில் ஆய்வு செய்யப்படவேண்டும்.

**கருதுகோள் 4**

இலங்கை தமிழகத்துடன் இணைந்திருந்த பகுதி என்பது உறுதியாகச் சுட்டத்தக்கது என்பது ஒரு கருதுகோள். இலங்கையின் பெயர்கள் பற்றிய ஆய்வு இதனைச் சிறப்பாக விளக்குகின்றது. தமிழகம் - இலங்கை பெயராய்வு (இயல் - 2) இக்கருதுகோளைப் பெரும்பான்மை உறுதிப்படுத்துமாறு அமையக் கண்டோம்.

**சில சிந்தனைகள்**

தமிழகம் - இலங்கை ஊர்ப்பெயராய்வு, சில கருதுகோள் களை உறுதிப்படுத்தியும், சில கருதுகோள் மேலும் ஆழமான

முழுமையான ஆய்வில் மேலும் தெளிவுபடமுடியும் என்ற எண்ணத்தையும் தந்து அமைகின்றது.

பொதுக் கருத்துகள் சிலவற்றைக் தந்து அமைகின்ற இப் பெயராய்வில், சில தனிப்பட்ட ஊர்ப்பெயர் பற்றிய தெளிவு களையும் நாம் உணருதல் இயலுகிறது. ஈழம்பற்றிய சில தெளிவுகள் கிடைக்கின்றன, மதுரை'வடமதுரா'என்ற பெயர்க் காரணம் கொண்டு அமைந்த பெயரன்று. குமரிக் கண்டத்தி னுள் மறைந்ததாகச் சுட்டப்படும் 'தென் மதுரை' காரணமாக சூட்டப்பட்ட பெயராகும் போன்ற எண்ணங்கள் புதியன வாகக் கிடைத்துள்ளன.

மேலும் இலங்கையில் பெருமாள் கடவை, திருவடி நிலை போன்றன தவிர, வைணவச் சார்பு பெயர்கள் தமிழகம் போன்று மிகுதியாக இல்லை. சைவம் பௌத்தம் போன்று இம்மதம் இலங்கையில் சிறப்பிடம் பெறவில்லை என்பதை இத்தன்மை காட்டுகிறதா என ஆராயலாம். மேலும் சைவம் சார்ந்த கோயில்களின் பழமை, இயக்கர்களின் தலைவனாகிய இராவணன்சிவனடியராகச் சுட்டப்படும் தன்மை (திருக்கோண மலையுடன் தொடர்பு) இராமேசுவரத்துடன் இணைந்த பஞ்ச ஈசுவரத்தலங்களும் இலங்கையில் காணப்படுகின்றமை, இலங்கையினைச் சிவபூமி எனத் திருமூலர் குறிப்பிடுகின்றமை இவை அனைத்தும் சைவத்தின் தொடக்கம் தென்னகத்தில் தான் என்ற சிந்தனைக்கு மேலும் ஆழமளிப்பனவா என்ற நோக்கில் மேலும் ஆராயலாம்.

மேம்போக்கான ஆய்வு நிலையில் சில சிந்தனைகளைப் பெற முடிந்த நிலையில் இவ்வாய்வு ஆழமாக, முழுமையாக நோக்கப்படின் பல செய்திகள் புலப்பட வாய்ப்புண்டு என்பதும் தெளிவுபெறுகிறது. தமிழர், இலங்கைத் தமிழர் ஒற்றுமை பட்ட உணர்வுகளும், பல சூழல் காரணமாக வேறுபட்ட மன நிலைகளும் தெரியவந்துள்ளன. மேலும் தமிழகத்தில் பல பெயர்களுக்கு, அவற்றின் தோற்றக் காலம், இடம், சூழல் எவற்றையும் உணராது, புராணச் சார்பும், கற்பனையும் கலந்து கதைகளையுருவாக்கி ஊர்ப்பெயர்க் காரணங்களாக அவை இலக்கியங்களிலும் இடம் பெற்று விடுவதை நாம் காணுதல் இயலுகிறது. இவற்றைப் போன்று, இலங்கை ஊர்ப்பெயர்களுக்கும் பெயர்க்காரணம் கற்பிக்கப்படுதலுண்டு, இத்துடன், எப்பெயரினைச் சுட்டினாலும், சிங்களத் தொடர்பு

கற்பிப்பதும் வழக்காக உள்ளது. தமிழரும் சிங்களவரும் இலங்கை முழுவதும் பரவலாக வாழ்ந்த தன்மையே இதற்குக் காரணம். எனவே புராணம் போன்று இவற்றையும் நாம் எளிதில் ஒதுக்கி விட முடியாது. புராணம், கற்பனை எனினும், அவற்றையும் ஆய்வுக்குட்படுத்திய பின்னரே ஒதுக்க முடியும் என்ற நிலையில், சிங்களச்சார்பு படுத்துதல் ஆழமான ஆய்வி லேயே தெளிவுபடும். எனவே இலங்கை ஊர்ப்பெயர்களைப் பொறுத்தவரையிலும், தமிழக ஊர்ப்பெயர்களைவிட, இன்ன மும் பொறுமையான ஆனால் அழுத்தமான பார்வையே குறிப் பாகச் சிங்கள மொழிஅறிவுபட்டபார்வையே பல ஊர்ப் பெயர்களுக்கு விளக்கம் தரவல்லன என்ற நிலையில், தமிழக ஊர்ப்பெயர்களை விட அணுகு முறையும் ஆழமாக அமைவது தேவைப்படுகிறது என்பது இவண் உணரப்படக் கூடியதாக அமைகிறது.

தமிழகம் இலங்கை ஊர்ப்பெயர்கள் பற்றிய இந்த ஆய்வு பல சிந்தனைகளைத் தந்து மேன்மையான ஓர் ஆய்வு என்ற உயர் நிலையை எட்டவில்லையாயினும், கலாநிதி, இ. பாலசுந்தரம் அவர்களின் கருத்தினைச் செயல்படுத்தும் நிலையில், இத்தன்மையிலான ஆய்விற்கு ஒரு சோதனை முயற்சி யாகத் தொடக்கம் பெற்றுள்ளது என்பதே இவ்வாய்வின் வெற்றியாகக்கூடும்.

"இன்றைய காலகட்டத்தில் ஈழத்தமிழ் மக்களின் பாரம் பரிய பிரதேசம் எது' என்ற விடயம் அரசியல் வட்டாரத்தில் மட்டுமன்றி அறிஞர் மத்தியிலும் பரவலான முறையில் பிரச்சினையாக்கப்பட்டு, இப்பிரச்சினை மிகக் கூர்மை யடைந்து வருகிறது. வரலாறு, சமூகவியல், இனவியல், மானுடவியல், நாட்டார் வழக்கியல், இலக்கியம் முதலிய பல துறைகளின் அடிப்படையில் ஆய்வுகளை மேற்கொள்ளும் போது இப்பிரச்சினைகளைத் தீர்ப்பதற்குரிய தீர்க்கமான விடையைப் பெறக்கூடிய வாய்ப்புகள் உண்டு. இவ்வகையில் நாட்டார் வழக்கியலின் முக்கிய துறைகளில் ஒரு பிரிவாகக் கருதப்படும் இடப்பெயராய்வும் (Toponomy) ஈழத்தமிழ் மக்களின் பூர்வீகத் தாயகம் பற்றிய தரவுகளைப் பெற்றுத் தருவதில் மிகவும் அவதானமாக அணுக வேண்டிய ஓர் ஆய்வுத் துறை என்பதை இவ்வாய்வு முடிவுகள் நிரூபிக்கின்றன."[1]

1. ஈழத்து இடப்பெயர் ஆய்வும் அதன் அவசியமும்—கலாநிதி இ. பாலசுந்தரம்—ப—25.

# துணை நூற்பட்டியல்

1. அடியார்க்கு நல்லார் வரலாற்று ஆராய்ச்சி—
பொ. ஜகந்நாதன், விவேகானந்தா அச்சுக்கூடம், மதுரை, 1974.

2. ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முற்பட்டதமிழகம்-கழக வெளியீடு, தமிழாக்கம். கா. அப்பாதுரை, 1962.

3. இடப்பெயர் வரலாறு மட்டக்களப்பு மாவட்டம்,—
ம. சற்குணம், நான்காவது அனைத்துலகத் தமிழாராய்ச்சி மாநாடு, நிகழ்ச்சிகள், யாழ்ப்பாணம் 1974.

4. இந்தியக் கோவில் கட்டிடக் கலை வரலாறு—
டாக்டர்.ஆர்.வெங்கட்ராமன் - என்னெஸ் பப்ளிகேஷன்ஸ், மதுரை 1983.

5. இந்தியக் காவிய மரபும் ஆரம்ப காலத் தமிழ்க்
காவியங்களும்— எஸ். வன்னிய குலம். 5 ஆம் உலகத் தமிழ் மாநாடு, மதுரை 1981.

6. இலக்கிய ஒப்பாய்வுக் களங்கள்— ஜி. ஜான்சாமுவேல், ஐந்திணைப் பதிப்பகம், சென்னை-1978.

7. இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள்—தொகுதி—1
ஆர். ஆளவந்தார், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை-1984.

8. இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள்—தொகுதி—2, கு.பகவதி, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை-1984.

9. இலங்கை இடப்பெயராய்வு-1இ பாலசுந்தரம்,காங்கேசன் கல்வி வட்டாரம், அப்புத்துறை மணிவிழா வெளியீடு, 1988.

10. இலங்கைக் காட்சிகள்—கி. வ. ஜகந்நாதன், கலைமகள் காரியாலயம், சென்னை-1956.

11. இலங்கைக் கேதீச்சுரக் கோயில் வரலாறு—வித்துவான் தி.பட்டுச்சாமி ஓதுவார் தொகுப்பு. ஈழத்துச் சிவனடியார் திருக்கூட்டம் (வெளியீடு) திருவாசகமடம் திருக்கேதீச்சுரம், இலங்கை, 1974.

12. இலங்கைச் சரித்திர சூசனம்—ஆ. முத்துத் தம்பி பிள்ளை நாவலர் பிரஸ், ஜாப்னா, 1903.

13. இலங்கைச் சரித்திரம்—போர்த்துக் கீசர் காலம் மட்டுநகர் வித்துவான் FXC நடராஜன், கலைமகள் கம்பெனி, கொழும்பு 1955.

14. இலங்கைத் தீவு—ஏ. விசயதுர்க்கா, (தமிழாக்கம் கே. வி. ராமச்சந்திரன்) அருணோதயம், இராயப்பேட்டை, சென்னை 1959.

15. இலங்கைப் பயணக்கதை—மணியன், மணியன் பதிப்பகம் (இதயம் பேசுகிறது) சென்னை, 1979.

16. இலங்கையில் இன்பத் தமிழ்— கா. பொ. இரத்தினம், பாரிநிலையம், சென்னை 1956

17. இலங்கையில் இனவெறி ஆட்சி — செ. வைத்தியலிங்கம் கீதா அச்சகம், சென்னை 1952

18. இலங்கையில் கலைவளர்ச்சி—க. நவரத்தினம் ஈழகேசரி பொன்னயை நினைவு வெளியீட்டு மன்றம், குரும்பசிட்டி, இலங்கை 1954.

19. இலங்கையில் தமிழ்ப்பண்பாடு— க. த. திருநாவுக்கரசு, சேகர் பதிப்பகம், சென்னை 1978.

20. ஈழத்தில் இனிய நாட்கள்—எஸ்.எஸ். சர்மா, டாங்க்ளின் ஹால்ட்ரோடு, சிங்கப்பூர், 1982.

21. ஈழத்தில் தமிழ் இலக்கியம்— கா. சிவத்தம்பி தமிழ்ப் புத்தகாலயம், சென்னை 1928.

22. ஈழத்து இடப்பெயர் ஆய்வும் அதன் அவசியமும்— கலாநிதி. இ.பாலசுந்தரம், 3-1-87.

23. ஈழத்துச் சித்தர்கள் — ந. முத்தையா, ஆத்ம ஜோதிப் பிரசுரம், நாவல்பிட்டி இலங்கை 1980

24. ஈழத்து நாட்டார் பாடல்கள் — மட்டக்களப்பு மாவட்டம் கலாநிதி இளையதம்பி பாலசுந்தரம், தமிழ்ப் பதிப்பகம், சென்னை, 1979

25. ஈழத்து வெற்றியும் ராஜராஜன் காசும் (தொல்லியல்) — குடவாயில் பாலசுப்பிரமணியன்

26. ஈழநாட்டு இடப்பெயர்களில் தமிழின் ஆளுமை- தி. சு.இராசேசுவரன், ஐந்தாம் உலகத் தமிழ் மா நாடு விழாமலர், மதுரை 1981

27. ஈழ நாட்டுத் தமிழும் செட்டி நாட்டுத் தமிழும்—கலாநிதி ஆ. வேலுப்பிள்ளை, பாவலர் துரையப்பா பிள்ளை நூற்றாண்டு விழாமலர், தெல்லிப் பழை, 1972

28. ஈழ நாட்டுப் பிரயாணம் - பகீரதன், பாரதி பதிப்பகம் சென்னை 1980 (II)

29. ஈழமும் தமிழரும்—அருள். செல்வ நாயகம், ஓரியண்ட் லாங்மென்ஸ், மதராஸ், 1963.

30. உலக நாடுகளில் தமிழர்கள்—டாக்டர். பொன். கோதண்டராமன், ஐந்தாம் உலகத் தமிழ் மாநாடு விழாமலர், மதுரை, 1981

31. ஊர்ப்பெயராய்வும் புதிய விளக்கமும் மதுரை — ஈழம், தமிழ்க்கலை தமிழ்ப்பல்கலைக் கழகம், தஞ்சாவூர், 1990

32. ஊரும் பேரும் — ரா. பி. சேதுப்பிள்ளை — பழனியப்பா பிரதர்ஸ், சென்னை 1987 (6)

33. எழிலார் இலங்கை, ப. மீ. சுந்தரம். ஓரியண்ட் லாங் மென்ஸ், மதராஸ், 1956

34. ஒப்பியல் இலக்கியம்— க. கைலாசபதி, பாரி நிலையம், சென்னை, 1969

35. ஒப்பிலக்கிய ஆராய்ச்சியில் எழும் சிக்கல்கள்— அ. அ. மணவாளன், தமிழ் ஆராய்ச்சிச் சிக்கல்கள் கருத்தரங்கம், உ. த. நி. 14-3-90

36. ஐந்தாம் உலகத் தமிழ் மாநாடு விழாமலர், மதுரை, 1981

37. கடலின் கண் முத்து அல்லது யான் கண்ட இலங்கை-சி. எம். இராமச் சந்திரன் செட்டியார் அவர்கள், சைவச்சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை 1948

38. களவியல் என்ற இறையனார் அகப்பொருள்—நக்கீரனார், கழகம் சென்னை, 1969

39. கலைக்களஞ்சியம்—தொகுதி 2 தமிழ் வளர்ச்சிக் கழகம், சென்னை, 1955

40. காரை நகர் மான்மியம்—வித்துவான் F×C நடராசா இரஞ்சனா பதிப்பகம், கொழும்பு, 1971

41. சிலப்பதிகாரம் அடியார்க்கு நல்லார் உரை—உ.வே. சா. பதிப்பு, சென்னை, 1968 (8)

42. சீர்பாத குலம்—அருள். செல்வ நாயகம், இரண்டாவது உலகத் தமிழ்க் கருத்தரங்க நிகழ்ச்சிகள், மூன்றாம் தொகுதி தொகுப்பாசிரியர் வி. ஐ. சுப்பிரமணியன், சென்னை —1968

43. செங்கை மாவட்ட ஊர்ப்பெயர்கள்—கரு. நாகராசன் உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனம், சென்னை —1985

44. தமிழ் இடப்பெயராய்வு—டாக்டர். கி. நாச்சிமுத்து கேரளப் பல்கலைக் கழகம், திருவனந்தபுரம், 1984

45. தமிழ் ஈழம் நாட்டு எல்லைகள் ஜே. ஆர். சின்னத்தம்பி, இரா. சச்சிதானந்தன் (தமிழில்) காந்தளகம், சென்னை, 1977

46. தமிழ் உணர்ச்சி—பேராசிரியர் கா. பொ. இரத்தினம் கழக வெளியீடு, 1986

47. தமிழ் நாட்டு வரலாறு (சங்க காலம்—அரசியல்) தமிழ் நாட்டு வரலாற்றுக் குழு, தமிழ்நாடு அரசு வெளியீடு, சென்னை, 1983

48. தமிழ் நாட்டு வரலாறு - தொல் பழங்காலம்—தமிழ் நாட்டு வரலாற்றுக் குழு, தமிழ்நாடு அரசு வெளியீடு, சென்னை, 1975

49. தமிழ்]நாடு பெயர் மாற்ற வரலாறு - புலவர். த.சுந்தர ராசன், வளனரசுப் பதிப்பகம், சென்னை, 1986

50. தமிழக ஊர்ப்பெயர்கள் - கு. பகவதி, உலகத் தமிழ்க் கல்வி இயக்கம், சென்னை, 1986

51. தமிழக வரலாறு பண்பாடும் மக்களும்—டாக்டர் கே. கே. பிள்ளை, தமிழ் நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை, 1975 (11)

52. தமிழர்]வரலாறு-ஞா. தேவநேயன் நேசமணிப்பதிப்பகம், வ. ஆ. மாவட்டம், காட்டுப்பாடி, 1972

53. தமிழரின் தாயகம்—க. ப. அறவாணன், உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனம், சென்னை-1984

54. தமிழனின் பிறந்தகம்—மொழி ஞாயிறு ஞா. தேவநேயன்

55. தமிழும் தமிழரும்—டாக்டர் ச. சோமசுந்தர பாரதியார், நாவலர் புத்தக நிலையம், 1971

56. தென்னிந்திய வரலாற்றுப் பேரவை — கோயம்பத்தூர் முதல் கருத்தரங்கு 1982.
(Society of South india History, velur, Tamil Nadu)

57. தொல்காப்பியம் — இளவழகனார் விளக்கக்குறிப்பு, கழக வெளியீடு, சென்னை, 1967

58. நான்காவது அனைத்துலகத் தமிழாராய்ச்சி மாநாடு நிகழ்ச்சிகள் — பதிப்பாசிரியர்— சு. வித்தியானந்தன் முதல் தொகுதி, யாழ்ப்பாணம் 1974.]

59. பத்துப்பாட்டு — உ. வே. சா. பதிப்பு, சென்னை, 1974.

60. பத்துப்பாட்டு ஆராய்ச்சி — டாக்டர். மா. இராச மாணிக்கனார், சென்னைப் பல்கலைக் கழகம், சென்னை, 1970.

61. பிளினி — (கி. பி. 23 - 79) வி. எஸ். வி. இராகவன், மணிவாசகர் நூலகம், சென்னை, 1977.

62. பெரிப்புளூஸ் — (கி. பி.50 - 80) வி. எஸ். வி. இராகவன் மணிவாசகர் நூலகம், சென்னை, 1977

63. பெரிய புராணச் சிறப்புப் பெயரகராதி - ஊர்ப்பெயர்கள்- டாக்டர். த. வே. வீராசாமி, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 1986.

64. பெரிய புராணம் — ஓர் ஆய்வு — பேராசிரியர். அ. ச. ஞானசம்பந்தன், தமிழ்ப்பல்கலைக் கழகத் தத்துவமையம், காஞ்சிபுரம் 1987.

65. பேரும் பெருமையும் – மா. நயினார், சோபிதம் பதிப்பகம், நாகர் கோவில், 1982.

66. பொருநை நாடு — உருநெல்வேலி மாவட்ட வரலாறு, எஸ். கணபதிராமன், ஸ்ரீ எம். ஜி. எம். வெளியீடு, அய்யாபுரம், 1966.

67. மட்டக் களப்பு மக்கள் வளமும் வாழ்க்கையும் — தொகுப் பாசிரியர். வித்துவான் FXC நடராசா, மட்டக்களப்பு இந்து வாலிபர் முன்னணி வெளியீடு, 1950.

68. மாலையாதீனம் மாவிட்டபுரம் கந்தசுவாமி கோவில் வரலாறு — வ. தம்பி பிள்ளை, சந்திர அச்சகம், காங்கேசன் துறை.

69. முருகன் கதிர்காமம் — தென்புலோலியூர் மு கணபதி பிள்ளை அருள் நிலையம், சென்னை, 1967.

70. மேல் நாட்டு தரிசன வரலாற்றின் சுருக்கம்—சி. கதிரவேல் பிள்ளை, குரும்பசிட்டி, நெல்லிப் பழை, 1958

71. யாழ் — தொண்டமானாறு — ஸ்ரீ செல்வச் சந்நிதிக் கந்தன் திருத்தல புராணம், அருட்கவி சீ வி நாசித்தம்பிப் புலவர் அவர்கள் வி. ஸ்ரீதரன், திருநந்தி, மல்லாகம், 1978.

72. யாழ்ப்பாண சரித்திரம் — ஆ. முத்துத் தம்பி பிள்ளை, நாவலர் அச்சகம், யாழ்ப்பாணம், 1933 (3)

73. யாழ்ப்பாண வைபவமாலை. குல. சபாநாதன், சரஸ்வதி புத்தகசாலை, கொழும்பு 1953.

74. யான் கண்ட இலங்கை —மு. வரதராசன், பாரி நிலையம், சென்னை, 1971.

75. வரலாற்றில் யாதவர்கள் — C. P. லோகநாதன், மோகன வல்லி பதிப்பகம், சென்னை, 1982.

76 விபுலானந்த ஆராய்வு — (கலைமகள் வெளியீடு) தொகுப்பாசிரியர் —அருள் செல்வநாயகம், சென்னை, 1965 (3)

77. விபுலானந்த அடிகள் — திரு. டி. ரி. செல்வ நாயகம், கருவாஞ்சிக் குடி, இலங்கை, கழகவெளியீடு, சென்னை, 1966.

78. A. Dravidian Etymological Dictionary — T. Burrow and M. B. Emeneau, oxford university press 1961.

79. Ancient Ceylon — Parker, Asian Educational Services, New Delhi, 1981.

80. Ceylon Tamil Inscriptions—Edi by, A. Velu Pillai, Part I, University of Ceylon, Peradeniya, 1971

81. Ceylon Tamil Inscriptions— Ed by, A. Velu Pillai, Part II, 1972.

82. Ceylon under Western rule— Macmillan, 1959.

83. English Place Names, Kenneth Cameron, Co Ltd, 1961.

84. Encylopaedia Britannica—Vol 15.

85. Geographical Names in Ancient Indian Inscription, Parmanand Gupta, Concept publishing Campus, Delhi, 1976.

86. History of Ceylon, Donold Obeyesekere The times of Ceylon, Colombo, 1951.

87. Origin and Spread of the Tamils— V. R. Ramachandra Dikshitar, Kazhagam, Madras, 1971.

88. Proceedings of the First International Conference Seminar of Tamil Studies, Vol I, Kualalumpur, Malaysia, 1966.

89. Proceedings of the Fourth International Conference Seminar of Tamil Studies, Vol II Jaffna, 1974 (Pub—1980).

90. South India and Sri Lanka— K. K. Pillai, University of Madras, 1975. (Sir William Meyar Lectures—1958-59)

91. Studies and Translations—Philosophical and Religious, Sir Ponnambalam Arunachalam, Dept of Hindu Affairs, Colambo, 1937.

92. Studies in Indian Place Names, Vol I, III, XIII, Geetha Book House, Mysore, 1979, 1982, 1986.

93. Tamil Lexicon—I-VI Volumes, University of Madras, 1982.

94. Tamil Place Names in Ceylon out side the Northern and Eastern provinces, K. Kularatnam, proceedings of the Ist International Conferenceseminar of Tamil studies, Kuala Lampur Malaysia, 1966 (Vol I)

95. Tamil Studies abroad—a Symposium, Ed by Xaviour S. Thani Nayagam, Malaysia, 1968.

96. The kingdom of Jaffna— S. Padmanathan, Colombo, Sri Lanka, 1978.

97. The Mahavamsa of the Great Chronicle of Ceylon, William Geighar Ph. Ceylon Govt, Information Department, 1950.

98. The Sri Lanka Journal of the Humanities, University of Sri Lanka, Vol II Number-12, Decen, 1976.



## ஊர்ப்பெயர் அடைவு

□ □ □

# உலகத் தமிழாராய்ச்சி நிறுவன வெளியீடுகள்

| | | | |
|---|---|---|---|
| 1. | தொல்காப்பியம் — அகத்திணையியல் | 60 | 00 |
| 2 | மு. வ புதினங்களில் தமிழ் தமிழினம் | 20 | 00 |
| 3. | தமிழகக் கலைச் செல்வங்கள் | 50 | 00 |
| 4 | கிறித்தவமும் தமிழகமும் | 15 | 00 |
| 5. | தமிழில் அறிவியல்: அன்றும் இன்றும் | 25 | 00 |
| 6 | நாமக்கல் கவிஞர் கவிதைகள் தேசீயம் காந்தியம் | 16 | 00 |
| 7. | இதழாளர் ஆதித்தனார் | 25 | 00 |
| 8. | சமயச் சொல்லகராதி | 25 | 00 |
| 9. | தொல்காப்பியம் — உரியியல் | 20 | 00 |
| 10. | மங்கலதேவி கண்ணகி கோட்டம் | 15 | 00 |
| 11. | தமிழில் கதைப்பாடல் | 25 | 00 |
| 12 | வாத்திய மரபு | 20 | 00 |
| 13. | குத்பு நாயகம் ஆய்வுரை | 25 | 00 |
| 14. | உ. வே, சா. ஒரு தமிழ் வாழ்வு | [illegible] | 00 |
| 15. | தமிழ் தந்த வ. உ. சி. | [illegible] | 00 |
| 16. | தொல்காப்பியம் சொல்லதிகாரம்— எச்சவியல் | [illegible] | 00 |
| 17. | மறைமலையடிகளார் தனித்தமிழ்க் கொள்கை | [illegible] | 00 |
| 18. | உலக முதன்மொழி தமிழ் | [illegible] | 00 |
| 19. | மகாமதிப்பாவலர் | [illegible] | 00 |
| 20. | பாவாணர் ஆய்வு நெறி | [illegible] | 00 |
| 21. | செக்கிழுத்த செம்மல் சிதம்பரனார் | [illegible] | 00 |
| 22. | மருந்து செய்முறைகள் | [illegible] | 00 |
| 23. | அகலமும் ஆழமும் | [illegible] | 00 |
| 24. | தமிழ் நாவல் (அகர வரிசை) | [illegible] | 00 |
| 25. | தமிழ் வாழ்க்கை வரலாற்றிலக்கியம் | [illegible] | 00 |
| 26. | எண்பத்திரண்டில் தமிழ் | [illegible] | 00 |
| 27. | நெல்லை மாவட்ட நாட்டுப்புறத்தெய்வங்கள் | [illegible] | 00 |
| 28. | செங்கை மாவட்ட ஊர்ப்பெயர்கள் | 2[illegible] | [illegible] |
| 29 | விவிலியம் — திருக்குறள் — சைவசித்தாந்தம் ஓர் ஒப்பாய்வு | 23 | 00 |
| 30. | டாக்டர் உ. வே. சா. காப்பியப் பதிப்புகள் | 10 | 00 |
| 31. | தேவநேயப் பாவாணரின் சொல்லாய்வு | 18 | 00 |
| 32. | பாவாணரும் தனித்தமிழும் | 50 | 00 |
| 33. | இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள் — தொகுதி 2 | 22 | 00 |
| 34. | தமிழர் இசை | 70 | 00 |
| 35. | இளங்கோவின் இலக்கிய உத்திகள் | 12 | 00 |
| 36. | தமிழ் இலக்கியக் கொள்கை — தொகுதி 9 | 20 | 00 |
| 37. | தொல்காப்பியம் — வினையியல் | 20 | 00 |
| 38. | தன்வந்தரி குழந்தை வாகடம் | 14 | 00 |
| 39. | தொல்காப்பியம் — பெயரியல் | 12 | 00 |
| 40. | தொல்காப்பியம் — விளிமரபு | 6 | 00 |
| 41. | தொல்காப்பியம் வேற்றுமை மயங்கியல் | 12 | 00 |
| 42. | இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள் — தொகுதி 1 | 12 | 00 |
| 43. | உ. வே. சா சங்க இலக்கிய பதிப்புகள் | 10 | 00 |
| 44 | இஸ்லாம் வளர்த்த தமிழ் | 15 | 00 |
| 45. | திராவிட மொழி இலக்கியங்கள் | 35 | 00 |
| 46. | தஞ்சை மாவட்ட ஊர்ப்பெயர்கள் | 12 | 00 |
| 47. | Tamilnadu Bengal Cultural Relations | 35 | 00 |
| 48. | Tamil Verse in Translation | 40 | 00 |
| 49 | Education&Vocation (Haritage of the Tamils) | 50 | 00 |
| 50 | Tolkappiyam — (Phonology & Morphology) | 25 | 00 |
| 51 | Heritage of the Tamils — Temple Arts | 50 | 00 |
| 52 | Karaikkal Ammaiyar | 6 | 00 |
| 53. | A Tamil Reader Vol 1&2 | 65 | 00 |
| 54. | பண்டைத்தமிழர் தொழில்கள் | 45 | 00 |

Printed at : Sri Gomathy Achagam. Madras-5 Phone : 844554.